## சில பிரச்னைகள்; சில வார்த்தைகள்

# நீ என்ன சொல்றது?

மஞ்சுளா ரமேஷ்

ஈகோ -

இந்த வார்த்தை இப்போதெல்லாம் நம்மிடையே அதிகமாக அடிபடுகிறது.

"அவளுக்கு பயங்கர ஈகோ"

"அவனோட புருஷனுக்கு ஈகோ ஜாஸ்தி"

இப்படி இன்னும் நிறைய உதாரணம் சொல்லலாம். எடுத்துக் கொள்ளுங்கள், யாருக்கு ஈகோ இல்லை?

துக்கினியூண்டு வாண்டு - மூணு வயசு ஆகியிருக்குமா?

"ஏண்டா கண்ணா, இந்த டிரான்ஸிஸ்டரை இப்படிப் போட்டு உடைச்சுட்டியே?" என்று கேட்டுப் பாருங்கள்.

அவ்வளவுதான், அந்த வாண்டிற்கு வரும் கோபம் இவ்வளவு அவ்வளவு என்றில்லை. மூஞ்சியை வெங்கலப்பானை போல வைத்துக் கொண்டு மூலையில் போய் உட்கார்ந்து கொள்ளும்.

ஒரு வயதான பெண்மணி சொல்லிக் கொண்டிருந்தார்; "எனக்கு இந்தக் காலக் குழந்தைகளை எப்படி ஹேண்டில் பண்றதுன்னே தெரியலை. அவங்களை ஏதாவது சொன்னா உடனே அவா அம்மா வந்து, "அத்தை அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். சைகலாஜிகலா அவா அப்செட் ஆயிடுவா" அப்படிங்கறா.

அந்தக் குழந்தைக்கு உன் வயசுதானே, அது எவ்வளவு மார்க் வாங்கறதேன்னா,

"கம்பேர் பண்ணாதே. அவங்களுக்கு காம்ப்ளெக்ஸ் வரும்"ங்கறாங்க.

வாயத் தெறக்கவே பயம்மா இருக்கு. நானும் ஏழு குழந்தைகளை பெத்து ஈஸியா வளர்த்துட்டேன். ஒவ்வொருத்தரும் பெரிய வேலையில இருக்கா. ஆனா என் பையனோட ரெண்டு பசங்களை எனக்கு வளக்கத் தெரியலை."

இந்தப் பெண்மணி என்றில்லை, இப்போது பல குடும்பங்களில் இந்த ஈகோ ப்ராப்ளம்தான்.

எதுவானாலும் 'நீ என்ன சொல்றது' என்கிற பாலிஸி 'டேக் இட் ஈஸி பாலிஸி' போல ரொம்பவும் பிரபலமாகி விட்டது.

சிறு குழந்தைகளும் தங்களை யாரும் கண்டிப்பதை விரும்புவதில்லை.

இளம் வயதினருக்கு இளரத்தம், 'அதுங்கெல்லாம் பெரிசு!' என்ற காமெண்ட்!

நடுத்தர வயதினருக்கு...

அலுவலகங்களிலோ, பெரிய நாத்தனாராகவோ, பெரிய அண்ணியாகவோ இருக்கும் இடங்களில் பாருங்கள், 'நான் சீனியர்! என் பேச்சுதான் சரி. இவங்களுக்கு என்ன தெரியும்' என்ற மனப்பான்மை.

வயதானவர்களுக்கோ... கேட்கவே வேண்டாம்.

"ஆ...மாம் என்ன தெரியும் இந்தப் பொடிப் பசங்களுக்கு. நேற்று பெய்த மழையில் இன்று முளைத்த காளான்கள். அந்தக் காலத்தில் நாங்க பண்ணாததா?" என்று ஆரம்பித்தால் விடிந்து விடும்.

இப்படி எங்கே பார்த்தாலும் மற்றவர்களைத் துச்சமாகப் பார்க்கின்ற பார்வை, நினைக்கின்ற நினைப்புதான் அதிகமாகிக் கொண்டே வருகிறது.

அப்படி 'பந்தா'வாகக் காண்பித்து அடுத்தவர் ஏமாறும் போது அவன் புடவைத் தலைப்பில் கையைத் துடைத்து விடும் கதைதான்.

ஏன் இத்தனை ஈகோ நமக்கு?

எங்கே இதற்கான ஆரம்ப முடிச்சுகள் விழுந்தன?

என்று யோசிக்க வேண்டியதாக



தீபாவளி சிறப்பிதழில் 'குபேரபூஜை செய்யலாமா' என்று வெளிவந்திருந்த பேட்டி தொடர்பாக ஏகப்பட்ட விசாரணைகள், குபேர பூஜை எப்படி செய்வது, எங்கு கிடைக்கும் என்றெல்லாம். 'ஸ்ரீ லக்ஷ்மி குபேர பூஜை பூஜாக்ரமம்' எனும் லிப்கோ வெளியீடு புத்தகத்தில் எல்லா விவரங்களும் உள்ளன. தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, தி. நகர், சென்னை - 17 என்பது முகவரி. விலை ரூ. 2.50.

இருக்கிறது. இதனால் வீடு முழுக்க சண்டை, சச்சரவுதான். அலுவலகத்திலும் மனக்கசப்பு. நாட்டு நடப்போ, அரசியலோ கேட்கவே வேண்டாம். அந்தக் கூத்தைதான் பார்த்துக் கொண்டு இருக்கிறோமே!

உங்கள் வீட்டில் நடந்த பெரிய மனக்கசப்பு விஷயத்தை இப்போது நினைவுபடுத்திக் கொள்ளுங்கள்.

கொஞ்சம் ஆற அமர யோசித்துப் பாருங்கள்.

உங்கள் கணவரோ, மாமியாரோ பேசினார்கள் என்றால் ஏன், எதற்காக இருந்திருக்கும்?

இந்தக் கட்டுரை படிக்கும் ஆண்களே, அன்று ஏன் உங்கள் மனைவி 'வள்'ளென்று விழுந்தாள்?

'அன்று பெரிய ரகளையாக மாறித்தான் போச்சு. ஒரு நிமிஷம் நாம் பொறுத்துப் போயிருக்கலாமோ?'

'ஆஹா, இந்தக் குடும்பத்திற்காக இத்தனை உழைத்து, இத்தனை விட்டுக் கொடுத்து, தியாகம் செய்த நம்மையா சொல்லப் போச்சு' என்று பொங்கி எழுந்தீர்களே!

அப்போது கொஞ்சம் பொறுமை காத்து இருக்கலாமோ. அப்படி இருந்திருந்தால் அப்புறம் நடந்த அத்தனை விபரீதங்களும் நடக்காமல் தவிர்த்திருக்கலாம். இன்று எல்லோர் மனத்திலும் ஆறாத ரணம். அம்மாவா சொன்னார்,

'நாவினால் சுட்ட வடு!'

என்று. புண் என்று திருவள்ளுவர் சொல்லவில்லை. அப்படியே நிலைத்துப் போய் விட்ட வடு! அதைப் பார்க்கும்போதெல்லாம் அன்று பட்ட ரணம், வலி ஞாபகம் வந்து கொண்டே இருக்கிறது இல்லையா?

"ஏம்மா மஞ்சுளா ரமேஷ், இத்தனை கொடுமைகளுக்கு அப்புறம் நான் பொங்கி எழுந்தது தப்பு என்கிறாயா?" என்று குமுறாதீர்கள்.

சில சந்தர்ப்பங்களில் மட்டுமே அறுவை சிகிச்சை தேவைப்படுகிறது. ஆனால் நம் வாழ்க்கையில் பெரும்பாலான மனக்கசப்பான சந்தர்ப்பங்களை நினைத்துப் பாருங்கள். எத்தனை பெரிய சம்பவத்திற்கும் அடிப்படை ஒரு சின்ன விஷயமாக இருந்திருக்கும். நாம் அத்தனை பேரும் சேர்ந்து அதை ஊதி ஊதிப் பெரிதாகச் செய்து விட்டிருப்போம்.

காரணம் நம் எல்லோர் மனதிலும் இருக்கும் 'ஈகோ!'

'நான்' எனும் அகங்காரம்!

'இவன் என்ன சொல்வது' எனும் வெறுப்பு.

இதைச் சொல்லும் போது கசப்பாகத்தான் இருக்கும். வேப்பெண்ணெயை விடக் கசப்பு. ஆனால் அது உடம்பிற்கு மிகவும் நல்லது தெரியுமோ!

இதைக் கொஞ்சம் தவிர்க்க முடியுமா என யோசிக்க ஆரம்பிப்போம். இனி வரும் நிகழ்ச்சிகளில் நம்மை வைத்து அந்தப் பிரச்னையை ஆராயாமல் எதிராளியின் கோணத்தில் பார்க்க முயற்சி செய்யலாம்.

இதையெல்லாம் எதற்குச் சொல்கிறேன் தெரியுமா?

வீட்டுக்கு வீடு மன அமைதி என்பதே ரொம்பவும் போய் விட்டது.

ஒருவருக்கொருவர் மனத்தாங்கல்.

சண்டை போடும் குணம் உடையவர்கள் அடித்துக் கொள்கிறார்கள்.

மற்றவர்கள் மனதுக்குள்ளேயே போட்டு அழுக்கிக் கொள்கிறார்கள். அது அப்படியே உள்ளேயே மக்கி நாற்றமெடுத்து, அவர்களின் மனஅமைதியை உடல் ஆரோக்கியத்தை ரொம்பவும் கெடுக்கிறது.

லோ பிரஷர், ஹை பிரஷர்

ஹைபர் டென்ஷன்

ஹார்ட் அட்டாக்

ஸ்டோரக்

இதெல்லாம் ஏன் வருகிறது என்கிறீர்கள்? நாம் மன அமைதியை இழந்து விட்டதால் தான்.

பெரிய பெரிய மகான்கள் நான் எனும் அகங்காரத்தை அழிக்க வேண்டும் என்று போதித்தார்களே, இதற்குத்தான் போலும்.

அடுத்தவரை அவர் மனம் குணத்தோடு நேசிக்க முயற்சி செய்யலாம். அடுத்தவனுக்கும் மூளை இருக்கும் என நினைத்துப் பார்க்கலாம். மற்றவர்களுக்கும் மனம், வலி, உணர்வுகள் உண்டு என யோசிக்கலாம்.

எல்லாவற்றிற்கும் மேலாக -

நம்மிடையே இருப்பது ஒரு வாழ்க்கை.

அதைச் சந்தோஷமாக அன்பு தந்து வாழ்வோமே! ஏன் வீணான மனக்கசப்பு.

## கிரைண்டர் மோட்டாரைக் கண்டுபிடிக்கிறீர்களா?



‘போலார் ஹை-பவர் லோ-வோல்டேஜ் கிரைண்டர் மோட்டாரை’ப் பற்றி இந்த இதழில் பத்து வெவ்வேறு இடங்களில் செய்திகள் ஒளிந்து கொண்டுள்ளன. அவற்றைக் கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்.

கிரைண்டருக்கு மோட்டார் என்பது மனிதருக்கு இதயம் போன்றது. எனவே கிரைண்டரை வாங்கும்போது தரமான மோட்டார் பொருத்தப்பட்டுள்ளதா என்பதையும் சோதித்து வாங்க வேண்டும்.

“ ‘போலார் லோ-வோல்டேஜ் கிரைண்டர் மோட்டார்’ கிராமங்களில் கூட இயங்கும். ஏனெனில் லோ-வோல் டேஜால் அதிகம் பாதிக்கப்படுபவர்கள் கிராம மக்களே. அவர்களையும் கருத்தில் கொண்டே இப்படி வடிவமைத்துள்ளோம்” என்கிறார்கள் இந்நிறுவனத்தைச் சார்ந்தவர்கள்.

இத்தகைய மோட்டார் பொருத்திய பதினைந்து கிரைண்டர்களை நம்முடைய வாசகிகளுக்குத் தர மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டுள்ளனர் ‘போலார் ஹை-பவர் லோ-வோல்டேஜ்’ நிறுவனத்தினர். நீங்கள் செய்ய வேண்டியது இதுதான் -

(இந்தப் போட்டி தமிழ்நாட்டில் உள்ள ஊர்களுக்கு மட்டுமே. எனவே, தமிழ்நாட்டில் உள்ளவர்கள் மட்டும் கலந்து கொள்ளவும்.)

■ இந்த இதழ் முழுக்க போலார் ஹை-பவர் லோ-வோல்டேஜ் கிரைண்டர் மோட்டார் பற்றிப் பத்து இடங்களில் தந்துள்ளோம். அவை எந்தெந்தப் பக்கங்களில் வந்துள்ளன, எந்த வார்த்தையில் ஆரம்பித்து எந்த வார்த்தையுடன் முடிவடைகிறது என்று எழுதி அனுப்புங்கள்.

■ சரியாக வரும் விடைகள் நிறைய இருக்குமானால் குலுக்கல் முறையில் பதினைந்து பேர் தேர்ந்தெடுக்கப்பட்டு அவர்களுக்கு 2 லிட்டர் கிரைண்டர் (போலார் ஹை-பவர் லோ-வோல்டேஜ் கிரைண்டர் மோட்டார் பொருத்தியது) பரிசாக அளிக்கப்படும்.

■ தேர்ந்தெடுக்கப்பட்ட ஓரிரு இடங்களுக்கு ஆசிரியர் நேரில் வந்து பரிசளிப்பார்.

■ தபால் உறையின் மேல் தவறாமல் ‘போலார் ஹை-பவர் லோ-வோல்டேஜ் கிரைண்டர் மோட்டார் போட்டி’ என எழுதவும்.

■ கடிதங்கள் அலுவலகம் வந்து அடைய கடைசி தேதி : 15.12.’94

கடிதங்கள் அனுப்ப வேண்டிய முகவரி :

**மங்கையர் மலர்,**

47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 97

இது —

# மங்கையர் மலர் &

## போலார் ஹை-பவர் லோ-வோல்டேஜ் கிரைண்டர் மோட்டார் இணைந்தளிக்கும் பரிசுத் திட்டம்.



# மங்கையர் மலர் – Raaga
## (ராகா ஹெர்பல் பவுடர்)
## இணைந்தளிக்கும்

# மதுரையில் மகளிர் விழா

அட, ஏன் கேட்கிறீங்க, சென்ற இதழ் மங்கையர் மலர் மற்ற எல்லாப் பத்திரிகைகளைப் போலவே புயல், மழையால் பாதிக்கப்பட்டது. இது எதிர்பாராத நிகழ்ச்சி. அதனால் சென்ற இதழில் கொடுத்திருந்த அறிவிப்பில் பல போட்டிகளுக்கு 10.11.94 கடைசி தேதி என அறிவித்துவிட்டு வாசகிகளின் கடும் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியதாகிவிட்டது. அதையும் கருத்தில் கொண்டு சில மாற்றங்களுடன் மதுரையில் மகளிர் விழா நிகழ்ச்சிகளை அறிவிக்கிறோம். மதுரை, திண்டுக்கல், காமராஜர், பசும்பொன் மாவட்ட வாசகிகளே, கோபம் தணிந்து இந்த இதழ் அறிவிப்பினை கவனமாகப் படியுங்கள் :—

## 9.12.94 (வெள்ளிக்கிழமை) கோலப் போட்டி - நேரம் - காலை 12.00 மணி

சென்ற இதழில் கோலப் போட்டியில் கலந்து கொள்ள விரும்புபவர்களை மங்கையர் மலர் அலுவலகத்திற்குத் தபால் கார்டில் தகவல் எழுதச் சொல்லியிருந்தோம். அப்படி வந்த கார்டுகளில் நூறு பேரைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குரிய 'கோலக்கட்ட எண்'ணுடன் பதில் அனுப்பியுள்ளோம். அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், அலுவலகத்தில் இருந்து வந்த கடிதத்துடன் 9.12.94 அன்று போட்டி நடக்கும் அரங்கத்திற்குக் காலை 11 மணிக்கு வந்து தங்களுடைய வருகையைப் பதிவு செய்து கொள்ள வேண்டும்.

மங்கையர் மலர் புயல், மழை காரணமாகத் தாமதமாக வந்த காரணத்தால் நிறையப் பேர் கடைசி தேதிக்குள் கடிதம் அனுப்ப முடியாமல் வருந்தி எழுதி இருக்கிறார்கள். அவர்களின் வருத்தத்தைக் கருத்தில் கொண்டு மேலும் 50 பேரை இப்போட்டியில் சேர்த்துக் கொள்ளலாம் என இருக்கிறோம். எனவே 9.12.'94 அன்று முதலில் வந்து பதிவு செய்து கொள்ளும் ஐம்பது பேர்களை (மட்டும்) கோலப் போட்டிக்கு அனுமதிக்க ஆசிரியர் குழு முடிவெடுத்துள்ளது. பதிவு தொடங்கும் நேரம் காலை 10 மணி.

■ கோலம் போடுவதற்குத் தேவையான பொருட்களை அவரவரே கொண்டுவர வேண்டும்.

■ உதவியாளர் ஒருவர் அனுமதிக்கப்படுவார். அவர் வண்ணம் போன்ற பொருட்களை எடுத்துக் கொடுக்கலாமே தவிர நேரடியாகக் கோலம் போட, யோசனை சொல்லக் கூடாது.

■ கோலம் போடும் 'கட்ட அளவு' போன்ற விவரங்கள் அரங்கில் அறிவிக்கப்படும்.

முதற் பரிசு : ரூ. 500 மதிப்புள்ள பொருள்; இரண்டாம் பரிசு : ரூ. 300 மதிப்புள்ள பொருள்; மூன்றாம் பரிசு : ரூ. 200 மதிப்புள்ள பொருள்; ஆறுதல் பரிசு (5) : ரூ. 100 மதிப்புள்ள பொருள்.

கோலம் போடும் நேரம் - 30 நிமிடங்கள்
ரங்கோலி (அ) பூ மற்றும் உப்பு போன்ற அழகுப் பொருட்களால் போடப்படும் புதுமைக் கோலங்கள்.

## மகளிர் மன்றங்களுக்கான நாடகப் போட்டி : மதியம் 1.30 மணி முதல்

■ மேலே குறிப்பிட்டுள்ள மாவட்டங்களில் உள்ள மகளிர் மன்றங்கள் இந்நாடகப் போட்டியில் கலந்து கொள்ளலாம்.

■ போட்டியில் கலந்து கொள்ள விரும்பும் மகளிர் மன்றங்கள் உடனடியாகத் தங்களுடைய விருப்பத்தினைத் தெரிவித்து மங்கையர் மலருக்குக் கடிதம் அனுப்பவும்.

■ முதலில் கடிதம் எழுதும் பத்து சங்கங்கள் போட்டிக்கு அனுமதிக்கப்படும். அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்ட சங்கங்களுக்குத் தகவல் அனுப்பப்படும். தொலைபேசி தொடர்புடையவர்கள் தயவு செய்து தங்களுடைய தொலைபேசி எண்ணைக் குறிப்பிட்டு எழுதவும்.

■ நாடகத்திற்கான நேரம் 10 நிமிடங்கள். நாடகக் கரு பெண்கள் பிரச்னை, பெண் முன்னேற்றம், பெண்ணின் சாதனைகள் என இருக்கலாம்.

முதற் பரிசு - ரூ. 1000/-; இரண்டாம் பரிசு ரூ. 500/-; மூன்றாம் பரிசு ரூ. 300/-.

■ 9.12.'94 மாலை நாலரை மணிக்கு மறுநாள் நடைபெறப் போகும் குழந்தைகளுக்கான மாறுவேடப் போட்டிக்குப் பதிவு செய்து கொள்ளப்படும். முதலில் வரும் 100 குழந்தைகளின் பெயர்கள் பதிவு செய்து கொள்ளப்படும்.

## 10.12.'94 காலை 10 மணி முதல் 12 மணிவரை

அழகு, உடல்நலம் பேணுதல், உடை பராமரிப்புப் பற்றி அந்தந்தத் துறையைச் சார்ந்த நிபுணர்கள் பேசவிருக்கிறார்கள். உங்களுடைய சந்தேகங்களுக்கும் விடை அளிப்பார்கள்.

## மதியம் 12 மணி முதல் 12.30 மணிவரை - வினாடிவினா போட்டி

வினாடிவினா முறையில் பெண்களின் உடல்நலம், உணவு, அழகு சம்பந்தப்பட்ட கேள்விகள் கேட்கப்படும். இப்போட்டியில் விழாவிற்கு வரும் அத்தனை பெண்களும் கலந்து கொள்ளலாம். போட்டி நேரத்தில் அனைவருக்கும் மங்கையர் மலர் முத்திரையிடப்பட்ட தாள்கள் விநியோகிக்கப்படும். மேடையில் ஒருவர் 'மைக்'கில் கேள்வி கேட்க, விநியோகிக்கப்பட்ட தாளில் பதில் எழுத வேண்டும். எனவே, ஒவ்வொருவரும் பேனா எடுத்துவரவும். அதிக மதிப்பெண்கள் பெறுபவர்களுக்கான பரிசு : -

முதற் பரிசு - ரூ. 500/- மதிப்புள்ள பொருள்; இரண்டாம் பரிசு - ரூ. 300/- மதிப்புள்ள பொருள்; மூன்றாம் பரிசு ரூ. 200/- மதிப்புள்ள பொருள்; ஆறுதல் பரிசு (5) - ரூ. 100/- மதிப்புள்ள பொருள்.

## 12.30 முதல் 1.30 மணி வரை

பெண் சிசுக்கொலை நடக்கும் நேரத்தில் பெண் குழந்தைகளின் சிறப்பை எடுத்துரைக்கும் வகையில் இப்போட்டி.

'என் பெண் மாதிரி இல்லையாக்கும்!' என அம்மாவும்,
'எங்கம்மான்னா எங்கம்மாதான்!' என பெண்ணும் பேசலாம்.

■ சென்ற இதழ் அறிவித்த தேதிக்குள் விண்ணப்பம் அனுப்ப இயலாதவர்கள் இந்த அறிவிப்பைப் பார்த்தவுடன் நீங்கள் பேசப் போவதின் கருக்கத்தை எழுதி அனுப்புங்கள். அவற்றில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து இளம்பெண்களும், ஐந்து தாய்மார்களும் மேடைக்கு அழைக்கப் படுவார்கள். யார் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள் என்பதை விழாவிற்கு வந்து தெரிந்து கொள்ளுங் களேன்.

■ ஒவ்வொருவருக்கும் பேச ஐந்து நிமிடங்கள் ஒதுக்கப்படும்.

*(நேர நெருக்கடி காரணமாக ஐந்து, ஐந்து எனக் குறைத்திருக்கிறோம். மீனாட்சியர்களே, மன்னியுங்கள்.)*

## 1.30 முதல் 2.00 மணிவரை இடைவேளை

## 2 மணி முதல் 3 மணி வரை கூந்தல் போட்டி

■ அலங்காரம் தெரிந்தவர்கள் இப்போட்டியில் கலந்து கொள்ளலாம். இப்போட்டியில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் விழா அரங்கிற்கு முன்பு போட்டிக்காக வைக்கப்பட்டிருக்கும் பெட்டியில் தங்கள் பெயர், முகவரியை எழுதிப் போட்டுவிட வேண்டும். போட்டி ஆரம்பிக்கும் முன்பு அப்பெட்டியில் இருந்து பத்து பெயர்கள் எடுக்கப்பட்டு 'மைக்'கில் அழைக்கப்படுவார்கள். அவர்கள் மேடைக்கு வந்து தங்கள் திறமையைக் காட்டலாம்.



# காமதேனு அக்ரோ பார்ம்ஸ்

## IN

## மதுராந்தகம்

உங்களது மகிழ்ச்சிகரமான எதிர்கால நல்வாழ்விற்கு வழிகாட்டுகிறது!

நாங்கள் உழைக்கிறோம் - நீங்கள் பலன் பெறுகிறீர்கள்!

காமதேனு அக்ரோ பார்ம்ஸ் திட்டத்தின்படி உங்கள் பெயரில் ஒரு யூனிட் 6000 சதுர அடி நிலம் வாங்கி எங்களுக்கு 10 வருடங்கள் குத்தகைக்கு அளிக்கிறீர்கள். நாங்கள் முதல் வருடத்தில் இருந்து வரியில்லாத வருமானம் பெற்றுத் தருகிறோம். 10 வருட முடிவில் உங்களது முதலீட்டை விட 2½ மடங்குக்கும் அதிகமான வருமானத்தைப் பெறுவதுடன் மூன்று மடங்கு விலைமதிப்பான நிலத்தையும் சொந்தமாகப் பெறுகிறீர்கள்!

மதுராந்தகத்திற்கு அருகில் காமதேனு அக்ரோ பார்ம்ஸ் நிறுவனத்திற்குச் சொந்தமான வளமான பண்ணை நிலத்தில் விவசாய தொழில்நுட்ப வல்லுநர்களின் மேற்பார்வையில் சூரியகாந்தி மற்றும் ஏற்றுமதி மதிப்புமிக்க தாவர பணப்பயிர் வளர்க்கும் திட்டத்தை மேற்கொண்டு இருக்கிறோம்.

**எங்களது வெற்றிகரமான இரண்டாவது திட்டம்!**

ஏற்கனவே ஓம்சக்தி கார்டன் தென்னந்தோப்பு பண்ணை திட்டத்தை மேல்மருவத்தூருக்கு அருகில் வெற்றிகரமாக செயல்படுத்திய எங்களது இரண்டாவது திட்டம் இது!

* ஒரு யூனிட் 2½ கிரவுண்ட் - 6000 சதுர அடி விலை ரூ.18,750/- மட்டுமே.
* முதல் வருடமே முன் தேதியிட்ட செக் வழங்குகிறோம்.
* 1 முதல் 3-வது வருடம் வரை வருடத்திற்கு ரூ.3,500/-
* 4-வது முதல் 8-வது வருடம் வரை வருடத்திற்கு ரூ.4,500/-
* 9-வது முதல் 10-வது வருடம் வரை வருடத்திற்கு ரூ.5,500/-
* வரி விலக்கு பெற்ற வருமானம்
* விரும்பினால் 5 வருட முடிவில் கம்பெனிக்கே விற்கும் வசதி!

★ தவணை முறையில் வாங்கும் வசதி

Kamadhenu

விவரங்களுக்கு :

**காமதேனு ஹாலிடே ரிசார்ட்ஸ் (பி) லிட்**

நிர்வாக அலுவலகம்: 3, கீழ் தளம்,
ஹாங்காங் காம்ப்ளக்ஸ்,
9, ராமநாதன் தெரு, சென்னை-600 017.
போன்: 4343986 / 4937856

நான் காமதேனு அக்ரோ பார்ம்ஸ் திட்டத்தில் சேர விரும்புகிறேன். எனக்கு விண்ணப்பபாரம் / பிரதிநிதி அனுப்பவும்.

பெயர்..............................

தொழில்..............................

முகவரி..............................

—Adstart

■ அவர்களே அவர்களுக்குப் போட்டுக் காண்பிக்கலாம். தங்களுடன் அழைத்துவரும் வேறொருவருக்கும் போட்டுக் காண்பிக்கலாம்.

■ சிறந்த மூன்று கூந்தல் அலங்காரங்களை அழகுக்கலை நிபுணர் தேர்ந்தெடுப்பார். பரிசுகள் நிச்சயம் உண்டு.

## 3 மணி முதல் 4 வரை குழந்தைகளுக்கான மாறுவேடப் போட்டி

■ இப்போட்டியில் ஐந்தாம் வகுப்பு வரை படிக்கும் ஆண், பெண் குழந்தைகள் கலந்து கொள்ளலாம்.

■ போட்டியில் கலந்து கொள்ளும் குழந்தைகளின் பெற்றோர்கள் 9.12.94 அன்று மாலை 4.30 மணிக்கு விழா அரங்கில் வந்து தங்கள் குழந்தைகளின் பெயர், முகவரி, போடும் வேஷம் இவற்றைப் பதிவு செய்துகொள்ள வேண்டும். இரண்டு சீட்டுக்களில் இவ்விவரங்களை எழுதிக் கொண்டு வரவும். ஒன்றில் மங்கையர் மலர் சீலிட்டு எண் குறிப்பிட்டு உங்களிடம் தருவார்கள். மற்றொன்று அலுவலர் வசம் இருக்கும். போட்டி நேரத்தில் உங்களிடம் தரப்பட்ட சீட்டைக் காண்பித்துக் குழந்தையை மேடையேற்றவும்.

■ முதலில் வந்து பதிவு செய்து கொள்ளும் 100 குழந்தைகள் போட்டியில் அனுமதிக்கப்படுவார்கள்.

முதற் பரிசு - ரூ. 500/- மதிப்புள்ள பொருள்; இரண்டாம் பரிசு ரூ. 300/- மதிப்புள்ள பொருள்; மூன்றாம் பரிசு (5) - ரூ. 100/- மதிப்புள்ள பொருள்.

## 4.30 - 5.30 பரிசளிப்பு விழா

■ பரிசளிப்பு விழாவில் மதுரை, திண்டுக்கல், பசும்பொன், காமராஜர் மாவட்டத்தைச் சார்ந்த பிரமுகர்கள் கலந்து கொள்வார்கள்.

■ பரிசளிப்பு விழாவின் போதுதான் எல்லாப் போட்டிகளுக்குமான முடிவுகள் அறிவிக்கப்பட்டு, பரிசுகள் வழங்கப்படும்.

■ போட்டியில் கலந்து கொள்பவர்களுக்குத் தேவையான பொருட்களோ, போக்குவரத்தோ அவரவரைச் சார்ந்ததே.

■ நிகழ்ச்சி பற்றிய எந்தவொரு முடிவிலும் ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**விழா நடைபெறுகின்ற இடம் :**

**லேடி டோக் கல்லூரி கலையரங்கம்,**
**தல்லாகுளம்,**
**(ஹாஜி அஜ்மல்கான் ரோடு,**
**தல்லாகுளம் வாயில் வழியாக மட்டுமே**
**உள்ளே வரவேண்டும்.)**
**மதுரை – 625 002.**

■ தனிப்பட்ட முறையில் புகைப்படக்காரர்களோ, வீடியோக்காரர்களோ கண்டிப்பாக அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

**கடிதங்கள் அனுப்ப வேண்டிய முகவரி :**

மங்கையர் மலர்,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

# மருத்துவர் உங்கள் வீட்டிற்கே வருகிறார்!

நடுநிசி. நெஞ்சை அடைக்கிறார் போல இருக்கிறது. "ராத்திரி ஒண்ணும் பிரமாதமா கூட சாப்பிடலையே! இதென்ன பிரச்னை? இது என்ன வாய்வு காரணமாகவா? இல்லை ஹார்ட்அட்டாக்கா?"

யாரைப் போய்க் கேட்க, அந்த வேளையில் எந்த டாக்டர் இந்த வேளையில் வருவார்?

"நாங்கள் வருவோமே!" என்கிறார் டாக்டர் நடராஜன். சென்னையிலுள்ள தமிழ்நாடு மருத்துவமனையில் "ஹோம் ஹெல்த் சர்வீஸஸ்" எனும் அருமையான திட்டமொன்றை ஆரம்பித்து இருக்கிறார்கள்.

இதைப் பற்றிச் சொல்லும் போது தமிழ்நாடு மருத்துவமனையின் சேர்மன் திரு. வேலுசாமி சிரித்துக் கொண்டே விளக்கினார்...

"இந்தத் திட்டத்தை நாங்கள் அறிமுகப் படுத்தும் போது ரொம்பவும் யோசித்தோம். இதிலே நடைமுறைச் சிக்கல்கள் ரொம்பவும் இருக்கின்றன. முதலில், 'இவங்களுக்கென்ன ஆஸ்பத்திரியில் பேஷண்ட் குறைஞ்சுட்டாங்களா, பையைத் தூக்கிக்கிட்டு பேஷண்ட் வீட் டுக்கே போக ஆரம்பிச்சுட்டாங்க' என்று மதிப்பு குறைவாக நினைப்பார்கள்.

இரண்டாவது நாங்கள் போய்ப் பார்க்கும் பேஷண்ட் ஏற்கெனவே வேறொரு மருத்துவரின் சேவையின் கீழ் இருக்கக்கூடும். இதனால் அவர் எரிச்சலடையலாம். மூன்றாவது 'என்ன இவங்க நேரா பேஷண்ட் வீட்டுக்கே போறாங்க. அதனால் மருத்துவமனைக்கு வருபவர்கள் குறைந்து போவார்களோ' எனச் சந்தேகம் வரலாம்.

ஆனால் இத்தனை யையும் மீறி பொது மக்களுக்கு இதனால் பெரும் சேவை செய்ய முடியும் என்ற காரணத்தினால்தான் இந்த 'ஹோம் ஹெல்த் சர்வீஸஸ்' ஆரம்பித்தோம்..."

இது மிகவும் உண்மைதான். ஒரு மருத்துவமனைக்குப் போய் ப்ளட் செக்கெப்போ, ஈஸிஜியோ செய்து கொள்ள வேண்டுமென்றால் எவ்வளவு நிறைய நேரம் விரயமாகிறது? அதே போல வீட்டில் திடீரென காய்ச்சலோ ஏதேனுமோ வந்து விட்டால் இது மருத்துவமனையில் பார்க்க வேண்டிய சிக்கலா எனச் சந்தேகம் வருகிறது.

எல்லோரும் வேலைக்குப் போய் விடும் சந்தர்ப்பத்தில் குழந்தையைப் பார்த்துக் கொள்ள வயதான மாமியார் இருப்பார். அவருக்கே உடம்புக்கு வரலாம். குழந்தைக்கே பிரச்னை வரலாம். மருமகளுக்கு போன் செய்வதா வேண்டாமா? குழந்தையைத் தூக்கிக் கொண்டு டாக்டர் வீட்டிற்கு ஓடுவதா?

மற்றொரு வீட்டில் வயதானவர் ஃப்ளாட்டில் மூன்றாவது மாடியில் இருக்கிறார். ஆபரேஷன் ஆகி வீட்டிற்கு வந்து படுத்த படுக்கையாய் இருக்கிறார். ஆபரேஷனுக்கு அப்புறமாக செய்ய வேண்டிய மருத்துவ கவனிப்பு, படுக்கைப் புண் வராமல் பாதுகாக்க என எத்தனை இல்லை?

இப்படி எத்தனையோ சந்தர்ப்பங்களுக்கு ஒரு பெரும் உதவியாக இருக்கும் 'Care under your roof' எனச் சொல்லிக் கொண்டு நட்புக் கரம் நீட்டும் இவர்களின் சேவை.

இதனை அவ்வளவு ஆர்வத்தோடும், தொண்டு மனப்பான்மையுடனும் செய்து வருகிறார் டாக்டர் நடராஜன். இவருக்கு என்று அலுவலக நேரமே கிடையாது. பல மருத்துவ உதவியாளர்கள் புடைசூழ எந்த நேரமும் உதவிக் கரம் - மருத்துவக் கரம் -



நீட்டத் தயாராக இருக்கிறார் இவர்.

"ஒரு கணவர் மிகவும் வருத்தப்பட்டுப் பேசினார், 'இனிமேல் பிழைக்க மாட்டாள்' என மருத்துவமனையிலிருந்து அனுப்பி விட்டார்கள். என் மனைவி என் கண் முன்னாலேயே இறந்து கொண்டு இருக்கிறாள். அவளுக்கு எந்தவிதமான மருத்துவ கவனிப்புமே செய்ய முடியவில்லையே என அழுகிறேன்' என்று. நாங்கள் தினமும் போவோம். நர்ஸ் அந்தப் பெண்மணியின் உடலைச் சுத்தப் படுத்தி ஆக்ஸிஜன் வைத்து என எல்லாவற்றையும் செய்தோம். சென்ற வாரம் அவர் அமைதியாக இறந்தார். கணவருக்கும் திருப்தி. கடைசி வரை நாம் அவளைப் பார்த்துக் கொண்டோம் என்று.

அதே போல ஐ.சி.எஃப்பிலேர்ந்து ஒரு போன். என் பையன் சைக்கோ பேஷண்ட் போல நடந்து கொள்கிறான் என்று. ஒரு சைக்யாட்ரிஸ்ட்டோடு போனேன். அந்தப் பையனுக்கு மருந்து மற்றும் கவுன்சிலிங் மூலம் உதவி செய்தோம்.

ஒரு பெரியவருக்கு கிட்னி செயலிழந்து சிறுநீர் வெளியேற்றக் குழாய் வைத்திருக்கிறார்கள். அதைக் குறிப்பிட்ட வாரங்களுக்குப் பிறகு மாற்ற வேண்டும். ஒவ்வொரு முறையும் மருத்துவமனை போய் காத்திருந்து மன வேதனை. நாங்கள் வீட்டிற்கு போய் மாற்றி விட்டு வருகிறோம். இப்படி எத்தனையோ மனம் நெகிழ வைக்கும் நிகழ்ச்சிகள்" என்கிறார்.

"உங்களுக்கு எந்த வயதினர் பெரும்பாலும் போன் செய்கிறார்கள்?"

"அதிகம் வயதானவர்கள்தான். காரணம் இன்று இளம்தலைமுறையினர் பலரும் வெளி நாடுகளுக்குப் போய் விடுகிறார்கள். இங்கேயே தங்கி விடும் பெற்றோர்களுக்கு மனதில் பயம், பாதுகாப்பின்மை உணர்வு நிறைய இருக்கிறது. ஏதேனும் சின்ன உடம்பு வந்தாலும் பெரிதாக பயந்து போய் விடுகிறார்கள். நாம் அழைத்தால் வர ஒரு மருத்துவக் குழு இருக்கிறது என்றால் மனநிறைவு ஏற்படுகிறது...."

"அந்தக் காலத்தில் உங்களைப் போல வீட்டிற்குப் போய் வைத்தியம் பார்க்கும் 'குடும்ப வைத்தியர்'கள் இருந்தார்கள் இல்லையா?"

"உண்மைதான். ஆனால் அவர்களுக்கும் எங்களுக்கும் நிறைய வித்தியாசம் இருக்கிறது. உதாரணமாக ராத்திரி பதினோரு மணிக்கு போன் வந்து உடல்நலம் பாதிக்கப்பட்ட ஒரு பெண்மணியைப் பார்க்கப் போனோம். அங்கேயே ப்ளட், யூரின் எல்லாம் கலெக்ட் பண்ணி 'லேப்'புக்கு அனுப்பி விட்டோம். இரவு பதினோரு மணிக்குப் போன நாங்கள், அதிகாலை மூன்று மணிக்கு எல்லா டெஸ்ட்டுகளையும் எடுத்துப் பரிசோதித்து. அவருக்கு சர்ஜரி தேவையா இல்லையா என முடிவெடுத்து விட்டோம். எங்களுக்குப் பின்னால் ஒரு பெரிய மருத்துவமனை, பரிசோதனைக் கூட வசதிகளுடன் இருக்கிறது என்பது பெரிய விஷயம் இல்லையா?"

"நீங்கள் அப்புறம் உங்கள் மருத்துவமனைக்கு அழைத்துக் கொண்டு வந்து விடுவீர்களாக்கும்."

"நிச்சயமாக அதுதான் இல்லை" என மறுக்கிறார் வேலுசாமி. "நாங்கள் வீட்டிற்குப் போய் மருத்துவம் பார்க்கிறோமே தவிர, எங்கள் மருத்துவமனைக்கு பேஷண்ட்டுகளைப் 'பிடிக்க' இந்த முறையைக் கையாளவில்லை. மருத்துவமனைக்குச் சென்று தங்க

16 புள்ளி 2 வரிசை 2-ல் நிற்க




- உமா மகேஸ்வரி

**மைதா மாவில் தேவையான அளவு சீனி அல்லது வெல்லம், சிறிது உப்பு, 1 முட்டை (நன்றாக அடித்து) கலக்கவும். தூளாக்கிய சோம்பு வேண்டுமானாலும் சேர்க்கலாம். இதைத் தோசைக் கல்லில் தோசையாக வார்த்து சுற்றி நெய் விட்டு எடுத்தால் மாலை நேர டிபனுக்கு பிரச்னை தீர்ந்தது.**

**- வனிதா சுரேஷ்**



ளைப் பரிசோதித்துக் கொள்ள நேரமில்லாமல் நிறைய பேர் போகாமலே இருந்து விடுவார்கள். 'ரொமடீன் செக்-அப்'பையே தவற விட்டு விடுவார்கள். அப்படிப்பட்டவர்களுக்காகத் தான் இந்த சர்வீஸே தவிர, விளம்பரத்துக்காக அல்ல. அவர்கள் எந்த டாக்டரிடம் பார்க்கிறார்களோ அவர்களேதான் தொடருவார்கள். எங்கள் சேவை அவர்கள் அழைக்கும் போது மட்டுமே!"

"இதற்காக என்ன கட்டணம் வசூலிக்கிறீர்கள்?"

"ஒரு கிலோ மீட்டருக்கு ஐந்து ரூபாய் என போக்குவரத்திற்குக் கட்டணம். மற்றவையெல்லாம் சாதாரண டாக்டர் பீஸ், நர்ஸ் பீஸ் போன்றதுதான். ஆனால் மருத்துவமனைக்கு வர அவர்கள் செலவிடும் நேரம், கார்பெட்ரோலோ, ஆட்டோ சார்ஜோ இதையெல்லாம் கணக்கிட்டுப் பார்த்தீர்களானால் நிச்சயம் நாங்கள் வசூலிக்கும் கட்டணம் குறைவாகத்தான் இருக்கும்!"

"எமர்ஜென்ஸி என்று வரும் சந்தர்ப்பம் மட்டும்தான் போவீர்களா?"

90 v முதல் மோட்டார் ஓடுவதால் இது 'போலார் ஹை-பவர் வோல்டேஜ் கிரைண்டர் மோட்டார்' என அழைக்கப்படுகிறது.

"நோ நோ, எமர்ஜென்ஸி நிலைமைகளுக்காக அல்ல இந்த சர்வீஸ். உங்களால் மருத்துவமனைக்கு வர இயலாத நிலைமை எனும் போது நாங்கள் வருகிறோம் என்பது தான். ப்ளட் டெஸ்ட்டுக்காக மாதா மாதம் வர முடியவில்லையென்றால், காலையில் நீங்கள் பேப்பர் படிக்கும் நேரம் அவர்கள் வந்து எடுத்துக் கொண்டு போவார்கள் என்பது தான். அதற்காக எக்ஸ்-ரே கருவியையெல்லாம் எங்களால் தூக்கிக் கொண்டு போக முடியாது.

உங்களுக்கு மருத்துவக் கவனிப்பு இல்லை, உங்களால் மருத்துவமனைக்கு வர முடியாத சூழ்நிலை. அப்படியானால் நாங்கள் வந்து உதவுகிறோம் என்பதுதான் எங்கள் நோக்கம்" என்கிறார் டாக்டர் நடராஜன்.

மிகச் சிறந்த சேவை இது. எத்தனையோ வயதானவர்களுக்கும், வீட்டை விட்டு வர முடியாத இல்லத்தரசிகளுக்கும், வியாதியஸ்தர்களுக்கும் மிகவும் பயன்படும்.

May I help you என்பது போல May I treat you என்று சொல்லிக் கொள்ளலாம். தொடர்பு கொள்ள விரும்புபவர்கள் - 414003, 419798 எனும் தொலைபேசி எண்களில் தொடர்பு கொள்ளலாம். அல்லது தமிழ்நாடு மருத்துவமனையின் மற்ற தொலைபேசி எண்களில் தெரிவித்தால் கூட டாக்டர் நடராஜனுக்குத் தகவல் போய் விடும். அவர் ஸ்டெதாஸ்கோப் சகிதம் தயாராக இருக்கிறார்.

- **பவித்ரா**











ஹீ மேன்



# கிறிஸ்துமஸ் திருநாளில் உங்கள் வானத்து தேவதைக்கு.

உங்கள் குழந்தையின் குதூகலம் உங்கள் வாழ்வையே மாற்றியமைத்து விட்டதை அறிவீர்களா?
பொங்கும் மணிச்சிரிப்பில் கிறிஸ்துமஸ் பண்டிகை மேலும் சிறப்புறுவதை அறிவீர்களா?

இந்த ஆண்டு பாலகன் இயேசு பிறந்த திருநாளை உங்கள் பிள்ளைக்கும் நினைவில் நிற்கும் நாளாக ஆக்குங்கள். வண்ணமயமான லியோ விளையாட்டுப் பொருட்களில் ஒன்றை வாங்கிக் கொடுங்கள். தூய திருநாளில் தூய அன்பை வெளிப்படுத்த இதுவே நல்ல வழி.

## கிறிஸ்துமஸ் திருநாள்.
## தூய அன்பின் நாள்.

வழங்குவது






PLAY FAVOURITES







HTA.2592.95

# உங்கள் அன்பு கலந்த பாதுகாப்பை அவளுக்கு அளியுங்கள்!



ப்ளான் துவக்கம்
ஆகஸ்ட் 6, 1994.

இப்போது யூடிஐ வழங்குகிறது



# கிருஹலக்ஷ்மி

யூனிட் ப்ளான்

18 வயதிற்கு மேலுள்ள தனிச்சிறப்பான மகளிருக்கு:
உங்கள் அன்புக்குப் பாத்திரமான உங்கள் மகள், தங்கை, மருமகள், பேத்தி அல்லது வேறெந்த மகளிராகவோ இருக்கலாம். ரூ. 1 இலட்சம் வரை தனிச்சிறப்பான கிஃப்ட் வரிச் சலுகையுடன் கூடிய மிகக் கச்சிதமான திருமணப் பரிசை நீங்கள் வழங்கலாம்.

## சிறப்பம்சங்கள்

- காலவரையற்ற ப்ளான்
- குறைந்தபட்ச முதலீடு ரூ.3000 மற்றும் அதற்கு மேல் ரூ.1000த்தின் மடங்குகளில். உச்ச வரம்பு கிடையாது.
- 18 வயது மற்றும் அதற்கு மேற்பட்ட மகளிருக்கான எந்த ஒரு தனிநபர் அல்லது இந்து கூட்டுக் குடும்பம் முதலீடு செய்யலாம். 18 வயதிற்கு மேற்பட்ட எந்த ஒரு இந்தியப் பெண்ணும் தனக்காக முதலீடு செய்யலாம்.
- முதல் வருடத்திற்கு டிவிடெண்ட் கிடையாது. வருடாந்தர டிவிடெண்ட் 2வது வருடம் முதல் ஆரம்பமாகும். உதாரணமாக, ஆகஸ்ட் 94-ல் விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்பட்டால், டிவிடெண்ட் ஜூலை 96 முதல் முதலீட்டாளர்களுக்குக் கொடுக்கப்படும்.
- மூன்று வருடம் கழித்து எச்சமயத்திலும் என்ஏவி அடிப்படையிலான திரும்ப வாங்கும் விலையில் பணத்தைத் திரும்பப் பெறும் வசதி.
- மூலதன மதிப்புயர்வுக்கான வாய்ப்பு
- இத்திட்டத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தின்மேல் ரூ. 10,000 வரை பிரிவு 80-ன் வரைமுறைக்குள் வரிச்சலுகை.
- வழக்கமான கிஃப்ட் வரிச்சலுகை ரூ.30,000 வரை மற்றும் ஒருவரை சார்ந்துள்ள மங்கையருக்கு அவருடைய திருமணத்தின்போது ரூ. 1 இலட்சம் வரை கொடுக்கப்படும் பரிசுத் தொகைக்கு வரிச்சலுகை.

அனைத்து மியூச்சுவல் ஃபண்டுகள் மற்றும் செக்யூரிடிகளில் செய்யும் முதலீடுகள் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவையாகும். மற்றும் செக்யூரிடிகள் மார்க்கெட்டை பாதிக்கும் அம்சங்கள் மற்றும் ஆட்சித்திறம் பொறுத்து திட்டங்களின் என்ஏவி ஏறிடவும், இறங்கிடவும் செய்யும். கிருஹலக்ஷ்மி என்பது திட்டத்தின் பெயர் மட்டுமே. மற்றும் திட்டத்தின் தரத்தையோ, அதன் எதிர்கால வளர்ச்சியையோ அல்லது வருமானத்தையோ எவ்விதத்திலும் சுட்டிக்காட்டுவது ஆகாது. தயவு செய்து முதலீடு செய்யுமுன் ஆஃபர் பத்திரத்தைப் படிக்கவும்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**
உங்கள் வளமான எதிர்காலத்திற்கு

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101.
கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 214973 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 27060


• வாஸந்தி


• மாலன்


• லேனா தமிழ்வாணன்

# பெண்கள் பத்திரிகை என்றாலே சமையலும் கோலமும்தானா?

'பெண்கள் பத்திரிகை என்றாலே சமையல் குறிப்பும், கோலமும்தான் போடுவார்கள்.' என அட்டைப்படத்தைப் பார்த்து எடுத்து வைத்து விடுபவர்கள் உண்டு. அதையும் தவிர அதையும் தாண்டி எவ்வளவோ தூரம் வந்தாச்சு. இன்னொரு சாரார், 'நீங்கள் ஏன் பெரும் சாதனையாளர்கள், போராடும் பெண்களைப் பற்றியெல்லாம் போடக் கூடாது?' என்பார்கள். (இவர்கள் அனைவருமே பெண்கள் பத்திரிகையைப் பார்த்துவிட்டு படிக்காமல் எடுத்து வைத்து விடுபவர்கள்தான்.) இவர்களுக்கும் போகுமிடங்களில் எல்லாம் பதில் சொல்லிச் சொல்லி அலுத்துப் போகிறது. 'நம் வாசகர்களுக்குத் தெரியாதா என்ன, என்ன செய்திகளைத் தருகிறோம் என்று. அதனால்தானே அவர்களும் நம்மை ஆதரிக்கிறார்கள்' எனச் சமாதானப்படுத்திக் கொள்கிறோம். சரி, மற்ற பத்திரிகையாளர்கள் இதைப் பற்றி என்ன நினைக்கிறார்கள்? சிலரைக் கேட்டோம் -

## லேனா தமிழ்வாணன் : ஆசிரியர் (கல்கண்டு)

"பொதுவாகவே பெண்கள் பத்திரிகை என்று எடுத்துக் கொண்டால் சமீப காலமாகத்தான் பிரபலமாகப் பேசப்படுகிறது. சுமார் பத்து வருடங்களுக்கு முன்பு பெண்கள் மற்ற மசாலா பத்திரிகைகளுக்குத் தங்கள் படங்களைத் தரத் தயங்குவார்கள். பேட்டி, கட்டுரைகள் என்றால் சட்டென்று தலையை இழுத்துக் கொண்டு விடுவார்கள்.

அதனால் சினிமா, அரசியல் மற்றும் சமுதாயத்தில் உயர்ந்த பதவியிலிருந்தவர்களைப் பற்றியே மாறி மாறி செய்திகளும், கட்டுரைகளும், படங்களும் வெளிவந்து கொண்டிருந்தன.

அதோடு சமையல், கோலம், வீட்டுக்

குறிப்புகள் என்று முழுவதும் இல்லம் சம்பந்தப் பட்ட விஷயங்கள்தான்.

பத்திரிகை, டீவி. என்றால் ஒதுங்கிய பெண்கள் இப்போது ரொம்பவும் முன்னேறி விட்டார்கள். எல்லாத்துறையிலும் - அறிவியல், மருத்துவம், விஞ்ஞானம், அரசியல் என்று பெண்கள் இல்லாத இடமே இல்லை.

முன்பெல்லாம் பெண்கள் தங்கள் வீடு களில் நடக்கும் சிறு பூசல்களைக் கூட அய லார் அறிவதை விரும்பமாட்டார்கள். இப் போது குடும்ப விஷயம் பற்றி விவரமாகப் பேசுகிறார்கள்.

கணவன் மனைவி பற்றியும் மனைவி கணவன் பற்றியும் என்று நிறைய கட்டுரைகள் எழுதுகிறார்கள். மனம் திறந்து பேசுகிறார்கள். நிறைய விஷயங்கள் வெளிப்படுத்துகிறார்கள்.

அவர்கள் பேசி முடித்த பிறகுதான் அவர்களுக்கே தங்களின் கேரக்டர்கள் பற்றித் தெரிய வருகிறது. தன்னுடைய பலம், பல வீனம் பற்றித் தெரிகிறது. நிறைய புரிகிறது.

இந்த மாதிரியான கலந்துரையாடல் களுக்கோ பேட்டிக் கட்டுரைகளுக்கோ இப் போது பெண்கள் துளியும் தயங்குவதில்லை. கம்பீரமாக மனதில் தோன்றுவதைச் சொல் கிறார்கள்.

இந்த நிலை பெண்களின் முன்னேற்றத் தைக் காட்டுகிறது. அவர்களுக்கு ஒரு விழிப் புணர்வு ஏற்பட்டிருக்கிறது. அதற்கு ஒரு காரணம் அறிவும் பத்திரிகைகளும் என்று சொல்லலாம்.

ஆங்கிலப் பெண் பத்திரிகைகளை எடுத் துக் கொண்டால் 'சர்வதேச சந்தை' வந்து குறுக்கிடுகிறது. எல்லா மொழியினரும் ஓரளவு ஆங்கிலம் தெரிந்து வைத்திருப்பதில் அதன் விலையும், தோற்றமும் வித்தியாசப்படுகிறது. இத்தனை க்ளாமராக பத்திரிகைகள் வருகின் றனவே தவிர அவை ஆழமாக செயல்படுகின் றனவா என்பது சந்தேகம். ஆனால் மங்கையர் மலரில் 'டெப்த்' இருக்கிறது. சிந்தித்துச் செயல் படுவதாகப் படுகிறது.

பெண்கள் என்றாலே சமையல்தான் என்று பார்ாமல், மற்ற நாடுகளைப்பற்றி, மக் களைப் பற்றி, ஓரளவு நம் நாட்டு நிலைமை பற்றி என்றும் நிறைய வந்தால் நன்றாக இருக் கும்.

சமையல் சம்பந்தப்பட்ட விஷயங்கள் தவிர மற்ற விஷயங்களைப் பற்றியும் பெண் கள் புரிந்து கொள்ளும்படியாக வெளியிடு கிறார்கள்."

### வாஸந்தி : ஆசிரியர், இந்தியா டுடே (தமிழ்)

"பெண்கள் பத்திரிகைகளை நன்றாகப் பார்த்தால் சமையலறைக் குறிப்புகள் அதிகம். குடும்பப் பெண்களுக்கு இது முக்கியம்தான் என்றாலும் இதுவே முக்கியம் என்று ஆகி விடக் கூடாது. கோலம், சமையல் பெண்கள் சம்பந்தப்பட்ட விஷயம் என்ற வழக்குமாறி அனைத்துத் துறைகளிலும் பெண்கள் முன் னேற, அதைப் பற்றிய கட்டுரைகளும் கதை களும் வர ஆரம்பித்து விட்டன.

என்னுடைய பெரிய குரல் என்ன என்று கேட்டால் இந்தத் தங்கம், ஆடம்பரப் புட வைகள் வாங்க வேண்டும் என்று நடுத்தரக் குடும்பங்களில் பலர் நினைக்கிறார்கள். எப் படியாவது சீட்டு சேர்ந்தாவது நகை வாங்கி விட வேண்டும். புடவை வாங்க வேண்டும். தமிழ் நாட்டில் பெண்கள் உடுத்தும் புடவை கள் மாதிரி, அணியும் கனமான நகைகள் மாதிரி மற்ற மாநிலத்தவர் அணிவதில்லை.

இங்கு நகை, புடவைக் கடைகளில் பிதுங்கி வழியும் கூட்டத்தைப் பார்த்து நான் பிரமித்துப் போகிறேன் அதிர்ச்சி அடை கிறேன்.

பெண்களுக்குள் ஒரு விழிப்புணர்ச்சியை உண்டு பண்ண வேண்டும். இது பத்திரிகை யால் சாத்தியம். இதற்காக நம்பிக்கைகளைத் தகர்க்க வேண்டும் என்று நான் சொல்ல வில்லை. பண்டிகை விழாக்கள் வேண்டும். நகை அணியலாம், நல்ல ஆடை உடுத்தலாம். ஆனால் அதிக ஆடம்பரம் கட்டுப்படுத்தப் பட வேண்டும். இந்த ஆடம்பரங்களைப் பார்க் கும் போது, நாம் எத்தனை அறியாதவர்களைக் கொண்டிருக்கிறோம் என்று தெரிய வரும் போது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. நம் பிக்கைகளைத் தகர்த்தாமல் நமது கொள்கை களை மாற்றிக் கொள்வோம்.

அடுத்து, உலக அறிவு. நம்மில் எத்தனை

அஜீரணத்திற்கு இரண்டு தேயிலைக் கரண்டி கறுவேப்பிலைச் சாறை ஒரு கிளாஸ் மோரில் கலந்து குடிக்கவும்.

— கலா மூர்த்தி



"OLD IS GOLD
GOLD IS T.NAGAR LKS"

"LKS GOLD" IS CASH IN HAND

பொன்னின் பெருமை

பெண்ணின் பெருமை






தலைமுறை தலைமுறையாக
தரம்மிக்க நகைகளை விற்பனை
செய்து வருவதில் நிகரற்று விளங்குவது.
எல்.கே.எஸ் கோல்டு ஹவுஸ்



சென்னையில்
எங்களுக்கு
வேறு கிளைகள்
இல்லை

ONLY AT
T. NAGAR

The Big Shop

**L.K.S**
**GOLDHOUSE**

60, USMAN ROAD, T.NAGAR, MADRAS - 600 017
PHONE : 4341111, 4344444, 4345555, 4343323

ADSTART

★ OPEN ON SUNDAYS — 10 AM to 1 PM

# சரவணா ஸ்டோர்ஸ்

இப்பொழுது **தங்க நகைகள், வெள்ளிப்பாத்திரங்களுக்கு சிறப்புச் சலுகை!**

பட்டுப் புடவைகளுக்கு
**10% தள்ளுபடி**



மற்றும்
ஜவுளிகள், பாத்திரங்கள்
ரெடிமேட் ஆடைகள்,
பிளாஸ்டிக் பொருட்கள்,
மிக்ஸி, கிரைண்டர்,
குக்கர், பீரோ,
ஃபேன், கட்டில், சூட்கேஸ்,
பிளாஸ்க், ஹாட்பேக்

**சரவணா ஸ்டோர்ஸ்**

ரெங்கநாதன் தெரு
(மாம்பலம் இரயில் நிலையம் அருகில்)
தி.நகர், சென்னை 600 017

Jewels : 4347710
Textiles : 4347711
Vessels : 4346078

பேருக்கு உலக அறிவு இருக்கிறது. பக்கத்து எதிர் வீட்டுப் பிரச்னைகள் பற்றிக் கவலைப் பட வேண்டாம். ஆனால் நாம் வாழும் உலகத்தில் என்ன நடக்கிறது என்று தெரிய வேண்டாமா?

இந்த உலகத்தில் என்ன நடக்கிறது என்கிற விழிப்புணர்வை பத்திரிகைகள் அதுவும் பெண் பத்திரிகைகள் பெண்களுக்குப் புரிய வைக்க முடியும்.

தமிழ் இண்டியா டுடே எடுத்துக் கொண்டால் பெண் வாசகர்கள் மிகமிகக் குறைவு, ஏன் இல்லை என்று கூடச் சொல்லலாம். அதனால் என்னுடைய இந்தக் கருத்துக்களை தமிழ் இண்டியா டுடேயில் சொல்ல முடியவில்லை. உங்கள் பெண் பத்திரிகையில் இந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு சொல்கிறேன்.

இவை பற்றி நிறைய பெண் பத்திரிகையில் சொல்லப்பட வேண்டும். இதனால் இன்னும் நிறைய செய்ய முடியும்."

**மாலன் : பொறுப்பாசிரியர், (தினமணி)**

"என்னைப் பொறுத்தவரை சுமார் ஆறேழு வருடங்களுக்கு முன்பு என்று நினைக்கிறேன். 'பெண்கள் பத்திரிகை அவசியம் தானா' என்று என்னை வந்து கேட்ட போது அவசியம் இல்லை என்று அழுத்தமாகச் சொன்னேன். ஆனால் இப்போது பல பத்திரிகைகள் வெளி வந்து பிரபலமாகி விட்ட இந்த நிலையிலும் கூட அவசியம்தானா என்று எனக்குள் தோன்றுவது நிஜம். மற்ற பத்திரிகைகளை எடுத்துக் கொண்டால் மெஜாரிட்டி படிப்பவர்கள் பெண்கள்தான்.

பத்திரிகைகள் சமூகத்தில் பல்வேறு வகையான பாதிப்புகளை உண்டாக்கக் கூடிய மீடியா. வாசகர்களிடம் ஒரு குணம். எந்த ஒரு விஷயமும் தன்னைப் பாதிக்காத வரை கண்டு கொள்ள மாட்டார்கள். எங்கேயோ நடக்கிற மாதிரி நடந்து கொள்வார்கள். ஆனால் இந்த ரிஸர்வேஷன் முதலிடம், என்று வரும் போது குரல் எழுப்புவார்கள்.

கொஞ்ச வருஷங்களுக்கு முன்னால் பெண்கள் வேலைக்குப் போகலாமா கூடாதா என்று அதிக அளவில் கட்டுரைகளும் பட்டி மன்றங்களும் கதைகளும் வந்தன.

பெண் என்பவள் ஒரு குடும்ப மனுஷியாக இருந்ததிலிருந்து சமூக மனுஷியாக மாறி வருகிறாள். சமூகத்தில் அவளுக்கு முக்கியத்துவம் இருக்கிறது.

இந்த நிலையில் ஏதோ சமைத்தேன், உடுத்தினேன் என்று இல்லாமல் மற்ற துறைகளிலும் ஈடுபாடு ஏற்பட வேண்டும். இன்ன வேலைகள்தான் பெண்களுக்கு என்று முத்திரை குத்தப்படக்கூடாது.




அமெரிக்காவில் இருபதடிக் கம்பத்தில் ஒரு பெண் பல்பு போட்டுக் கொண்டிருக்கிறாள். இங்கு கொஞ்சம் மேலே போனால் தலை சுற்றுகிறது என்பார்கள்.

பெண்கள் செய்யும் வித்தியாசமான வேலைகளை ஆதரிக்க வேண்டும். ஊக்குவிக்க வேண்டும். எனக்குத் தெரிந்து பெண் வெல்டர் இருக்கிறார். பெண் கொத்தனார் இருக்கிறார்.

இது தவிர பெண்களுக்கு சில அடிப்படை அறிவு - ப்யூஸ்மாற்றுவது, சிலிண்டர் மாற்றுவது எல்லாம் தெரிந்திருக்க வேண்டும். இதனால் அடுத்த வீட்டு மனிதர்களை, காவலாளிகளை எதிர் பார்க்கும் நிலை இல்லை.

சமையல் என்பது மிக எளிதான விஷயம் என்று நினைத்திருந்தேன். பத்திரிகை படிப்புக்காக அமெரிக்கா சென்ற போது நானே சமைத்துக் கொள்ளும் நிலை. ஒரு டம்ளர் அரிசி எடுத்துப் போட்டால் குபுகுபுவென்று ஏகப்பட்ட சாதம் வந்து விட்டது. அளவு எதுவும் தெரியவில்லை. அப்போதுதான் புரிந்தது சமையல் ஒரு கடினமான விஷயம்தான் என்பது.

தவிர உலக ஞானம் வேண்டும்.

சிறுகதைகள், குறைவது நல்லது. அரசியல் பெண்களுக்கு ஓரளவு தெரிந்திருக்க பத்திரிகை முயல வேண்டும். இங்கு அரசியல் என்பது நாட்டு நடப்பு."

பேட்டி : **சகுந்தலா ரவி**

*இந்தக் கருத்தரங்கம் இதோடு முடியவில்லை. வாசகர்களே, நீங்கள் இதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? உங்களுடைய கருத்துக்களையும் அறிய ஆவலாக உள்ளோம். - ஆர்.)*



முதல் பார்வையிலேயே தெரிந்து விட்டது.
புது ஆள்.
அவன் இவரைப் பார்த்ததும் எழுந்து நின்றான்.
மிகச் சுத்தமாக, நவீன மோஸ்தரில் ஆடை அணிந்திருந்தான்.
அதுவே சற்று எரிச்சல் தந்தது.
பியூன் சொன்னான்.
"சார்... இது சுதாகர். புதுசா ஜாய்ன் பண்ண வந்துருக்காரு...!"
அவனை அலட்சியமாகப் பார்த்தார்.
"சார்தான் இங்க எல்லாம்... உக்காருங்க... மானேஜர் வந்துடுவார்....!" - பியூன் சுதாகரிடம் சொன்னான்.
சுதாகர் இவரைப் பார்த்துக் கொண்டே தயக்கமாய் உட்கார்ந்தான்.
இவர் அவனைத் தவிர்த்து கவனம் மாறினார்.
அலுவலகத்தில் யாரும் இல்லை. மின்விசிறிகளின் சப்தம் சுற்றிச் சுற்றி வந்தது. எல்லாரும் தாமதமாகத்தான் வருகிறார்கள். கேட்க நாதியில்லை. இந்தக் காலத்துப் பசங்க. வெறும் ஹாய்... ஊய்தான்.
நந்தினி வந்தாள்.
"குட்மார்னிங் விசு சார்...!" - புன்னகையை வீசிக் கொண்டே நடந்தாள்.
சுதாகரைப் பார்த்ததும் நின்றாள்.
அவன் எழுந்து நின்றான். அறிமுகப்படுத்திக் கொண்டான்.
அவள் சிரித்து ஏதோ சொன்னாள்.
இவர் காதில் விழவில்லை.
சனியன்.

# மதுமிதா

சிரிக்காமல் பேசவே தெரியாது.
சுதாகரைப் பார்க்க மேலும் எரிச்சல் வந்தது.
அலுவலகம் நிரம்ப ஆரம்பித்தது.
எல்லாரும் சுதாகரிடம் வந்து சகஜமாய் பேசிப் போனார்கள்.

மானேஜர் வந்து விட்டார்.
முதலில் சுதாகர் அழைக்கப்பட்டான்.
அவன் வெளியே வந்ததும் இவர் உள்ளே போனார்.
"மிஸ்டர்... விஸ்வநாதன்... புதுப் பையன் உங்களுக்குத்தான்...!"
"எதுக்கு சார்... நானே பாத்துக்கறேனே...!"
"இல்லை... வச்சுக்கோங்க... உங்க சீட்ல வேலை ஜாஸ்தியாப் போய்ட்டு இருக்கு. அதுல பாதி பிரிச்சு அவருக்குக் கொடுத்துடுங்க...!"
வெளியே வந்தார். நன்றிகெட்ட ஜென்மம். புது ஆளைப் பார்த்ததும் பழசு மறந்துடும். விரல் சொடுக்கினார்.
சுதாகர் நிமிர்ந்தான்.
"இங்கே வாய்யா...!"
வந்தான்.
நின்று கொண்டேயிருந்தான்.
நந்தினி பின்பக்கமிருந்து கட்டளையிட்டாள்.
"சுந்தர்... சுதாகருக்கு ஒரு நாற்காலி போடு...!"
எதிரில் உட்கார்ந்தான்.
யோசித்தார்.
எதைத் தருவது?

அலுவலகத்திலேயே மிக கௌரவமான சீட் அது.

எல்லாத் தொடர்பும் மேல் அதிகாரிகளின் மற்றும் தலைமை அலுவலகத்துடனும்தான்.

அதனாலேயே மேலிடத்தில் இவர் பெயர் பிரசித்தம்.

எல்லாருக்கும் இதில் சற்று பொறாமை.

இப்போது புதுசா ஒரு போட்டி கிளம்பியிருக்கிறது.

கன்னடைக்காய்ப் பயல்.

பார்க்கலாம்.

பளிச்சென முடிவு செய்தார்.

தன் அந்தஸ்தை பாதியாய் பிட்டுத் தருவது நல்லதல்ல. தனக்குச் சமமாய் அவனும் நடத்தப்படுவான்.

கூடாது.

நான் இல்லாத போது என் அருமை உணர வேண்டும்.

கற்றுக் கொண்டால் இவன் என்னை தாண்டிப் போய் விடுவான்.

இளமை நிரம்ப வேகமானது.

பளிச்சென ஞாபகம் வந்தது.

உதவியாளன் போல் வைத்துக் கொள்வோம். சுதந்திரமாய் இயங்க முடியாமல்.

அதே நேரத்தில் முக்கியத்துவம் இல்லாமலும்.

எழுந்தார்.

பீரோவைத் திறந்து பெரிய அட்டை பெட்டியைத் தூக்கி வந்தார்.

"இதுல லெட்டர்ஸ் இருக்கு... தேதி வாரியா அடுக்குப்பா...!"

சுதாகர் அட்டைப் பெட்டியைத் தூக்கினான். நிரம்ப தூசி படிந்திருந்தது. ஊதினான்.

"என்னய்யா... இது. அந்தண்டை எடுத்துட்டுப் போ..!"

அவன் முகம் மாறியது.

எழுந்து போனான்.

வேலையில் மூழ்கினார்.

தலைநிமிர்ந்த போது அவன் கடிதத்தைப் படித்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

எழுந்தார்.

அவனருகில் போனார்.

"நான் சொன்னது படிக்க இல்லே... என்னா புரிஞ்சுடப் போவுது... சொன்னதை செய்யுப்பா...!"

அவன் முகம் மாறியது ரொம்ப சந்தோஷமா இருந்தது.

நந்தினி எழுந்து இவரருகில் வந்தாள்.

"துரோணர் கட்டை விரல்தான் கேட்பார். நீங்க தலையே கேட்பீங்க போலிருக்கே...!"

கோபம் வெடித்தது.

"தபார்... உன் வேலையைக் கவனி... மரியாதையா பேச கத்துக்கோ...!"



**வழக்கமாய் தயிர் சாதத்துக்குக் கடுகு தாளித்துக் கொட்டுவதுதானே வழக்கம்? மாறுதலுக்கு, ஓமம் தாளித்துக் கொட்டிப் பாருங்களேன். வாசனையாகவும் இருக்கும்; ஜீரண சக்தியையும் அதிகரிக்கும்.**

**- எம். பாரதி**

நந்தினி அதுக்கும் சிரித்துக் கொண்டாள்.

உள்ளே உமாவின் குரல் கேட்டது.

இவரைப் பார்த்ததும் ஓடி வந்து கையைப் பற்றிக் கொண்டாள்.

"எப்படிம்மா இருக்கே?"

"நல்லாருக்கேன்பா... நீங்க எப்படி இருக்கீங்க...?"

"இருக்கேன்... மாப்பிள்ளை எங்கே?"

"ஆபீஸ் விஷயமா திருச்சி வந்தார். நானும் கூட கிளம்பிட்டேன்.. பார்த்து மூணு மாசம் ஆய்டுச்சே...!"

ஆமாம்.

உமாவுக்குத் திருமணமாகி மூன்று மாதமாகி விட்டது.

போய்ப் பார்க்கக் கூட முடியவில்லை.

உமா நிறைய பேசினாள்.

சாப்பிட உட்கார்ந்தார்கள்.

"உன்கிட்ட எல்லாரும் பிரியமா நடந்துக்கறாங்களா உமா...?"

"மாமியார்... மாமனார் தங்கம். ஆனா... இவரோட அண்ணா பெண்டாட்டிதான் கொஞ்சம் பிராப்ளம்...!"

"என்னம்மா...?"

பதறினார்.

தகப்பனின் பதற்றம்.

"ஒண்ணுமில்லே.. கொஞ்சம் ஈகோ பிராப்ளம். அந்த வீட்டுக்குள்ள முதல்ல நுழைஞ்ச ஆள். இதுவரை எல்லா அதிகாரமும் அவங்க கைல. நான் இப்ப போயிருக்கேன். தன்னோட நம்பர் ஒன் பொஸிஷன் போய்டுமோன்னு பயம்... நான் எங்க அவங்களைத் தாண்டிப் போய்டுவேனோன்னு கவலை...!"

உமா பேசிக் கொண்டேயிருந்தாள்.

"எனக்கு அவங்க மேல கோபமில்லே... பரிதாபம்தான்... தன் முக்கியத்துவம் உணரப்படவேண்டும்னு அவங்க படற கஷ்டம்... சகிக்கலை. ஒரு வேலை என்னை செய்யச் சொல்றதில்லே... ஒருநாள் நான் காப்பி போட்டுக் கொடுத்தேன். மாமி புது டேஸ்டா இருக்கேன்னு சொல்லிட்டாங்க... அன்றைக்கு

இவங்க அடித்த ரகளை... தலைவலின்னு சொல்லி ரகளை பண்ணிட்டாங்க... எல்லார் கவனத்தையும் தன் பக்கம் திருப்ப ஒரே வழி இதுதான்...!"

"இல்லம்மா... என்ன இருந்தாலும் முதல்ல வந்தவங்க மதிப்பே தனிதானே...!"

"உனக்கும் புரியலையப்பா... முன்னாடி வந்தவங்களுக்கு ஒரு கடமை இருக்கணும். பின்னால் வருபவர்களுக்கு தன் அனுபவத்தைக் கலந்து தர வேண்டும். ரோட்ல நாம நடந்து போறப்ப வாழைப் பழத் தோல் கிடந்தா பின்னாடி வர்றவன் வழுக்கிடக் கூடாதென அதை எடுத்துத் தூர எறியறோமே. அந்த மனசு எல்லா நம்பர் ஒண்ணுக்கும் இருக்கணும்... நம்பர் ஒன்னை தக்கவைத்துக் கொள்ளும் ரகசியம் அதுதான்... அது புரியாத ஆளைப் பார்த்தா எனக்குப் பரிதாபம்தான் வருகிறது."

இவரின் செவிட்டில் அறை விழுந்தது.

மானசீக அறை.

மௌனமாய்ச் சாப்பிட்டார்.

**ல**ன்ச் முடிந்து யாரும் திரும்பவில்லை.

சுதாகர் மட்டும் உட்கார்ந்திருந்தான்.

இவரைப் பார்த்து புன்னகைத்தான்.

"சுதா... இங்க வாப்பா...!"

கூப்பிட்டார்.

ஆச்சர்யமாகப் பார்த்தான்.

எழுந்து வந்தான்.

உட்காரச் சொன்னார்.

"என் வேலைல பாதி பிரிச்சுத் தர்றேன். தலைமை அலுவலகத்தோட தொடர்பு கொண்ட வேலை தர்றேன். நிறைய அனுபவம் ஏற்படும்..!"

"சார்... அந்த லெட்டர்ஸ்...!"

"தூக்கி அந்தப் பெட்டில போடு... என் பக்கத்து சீட் போடச் சொல்றேன்... என்ன சந்தேகம் வந்தாலும் கேளு...!"

சுதாகர் விழிகள் விரிய அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

# கதையல்ல நிஜம்

"என்னங்க, எனக்கு ஆஸ்டியோ போராசிஸ் வந்திருக்கு!" என்று என் மனைவி அறிவித்தாள். அவள் குரலிலிருந்து அதற்காக அவள் சந்தோஷப்படுகிறாளா அல்லது வருத்தப்படுகிறாளா என்பது தெரியவில்லை.

"உனக்கு எப்படித் தெரியும்?"

"இத பாருங்க, நாற்பது வயசுக்கு மேலேயிருக்கிறவங்களுக்கு இடுப்பிலே அல்லது முதுகெலும்பிலே சுர்ர்னு வலி வந்தால் அதற்கு ஆஸ்டியோ போராசிஸ் காரணமாக இருக்கலாம்னு இந்தப் புஸ்தகத்திலே போட்டிருக்கு. எனக்கும் நாப்பது வயசாச்சு. இடுப்பெலும்பிலே சுருக் சுருக்னு வலிக்குது!"

"இருக்கலாம்னுதானே போட்டிருக்கு?" என்று நான் நழுவ முயன்றேன்.

"இல்லீங்க. டாக்டரைப் பார்த்து ஒரு வார்த்தை கேட்டு சந்தேகத்தைத் தீர்த்துக்கலாங்க!"

லேடி டாக்டர் குடும்ப சிநேகிதி. அவர் எங்களிடம் பீஸ் வாங்குவதில்லை. ஆகவே நான் சம்மதித்தேன்.

அவர் என் மனைவியைச் சோதனை செய்து பார்த்து விட்டு,



"பயப்படுகிற மாதிரி ஒன்னுமில்லை" என்று சொல்லி என் வயிற்றில் பாலை வார்த்தார்.

"ஆஸ்டியோ போராசிஸ் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள்" என்றேன் நான்.

"ஆஸ்டியோ போராசிஸ் என்றால் எலும்புகளில் நுண்துளைகள் என்று அர்த்தம். மரத்தில் கறையான் துளை போட்டு மரத்தை வலுவிழக்கச் செய்கிறதைப் போல சில காரணங்களால் எலும்புகளிலும் நுண்ணிய துளைகள் ஏற்பட்டு அவை வலுவிழந்து விடுகின்றன. பெண்கள் இதனால் அதிக அளவில் பாதிக்கப்படுகிறார்கள். ஆண்களுக்கும் அது வருவதுண்டு. ஆனால் மாதவிலக்கு நிற்கிற சமயத்தில் உடலில் எஸ்ட்ரொஜன் உற்பத்தி திடீரெனக் குறைந்து போவதால் எலும்புச் சிதைவு வேகம் அதிகமாகி விடுகிறது. இதன் காரணமாகப் பெண்களுக்கு இந்தக் கோளாறு அதிக அளவில் ஏற்படும். துரதிருஷ்டவசமாக ஆரம்ப நிலையிலேயே இந்தக்

கோளாறைக் கண்டு பிடிக்க முடிகிறதில்லை. சத்தம் போடாமல் அது உடலில் பரவி எலும்புகளெல்லாம் காய்ந்த கன்னியைப் போல ஒடிகிற நிலை வரும் போதுதான் வெளித் தெரிகிறது."



"பொதுவாக 50 வயதுக்கு மேற்பட்ட பெண்களையே எலும்புக் கறையான் தாக்குகிறது என்றாலும், எல்லா வயதுப் பெண்களும் அதைப் பற்றித் தெரிந்து கொள்வது அவசியம். இடுப்பு, மணிக்கட்டு, விலா எலும்புகளிலும் முதுகெலும்பிலும் முறிவு ஏற்படுவதற்கு எலும்புக் கறையான் ஒரு முக்கிய காரணம். இடுப்பெலும்பு முறிந்து ஆஸ்பத்திரியில் படுத்த படுக்கையாகக் கிடக்கிற போது பல சிக்கல்கள் தோன்றி மரணம் கூட ஏற்படுகிறது. முதுகெலும்பு அல்லது இடுப்பெலும்பில் முறிவு ஏற்பட்டால் நீண்ட காலத்துக்கு ஆஸ்பத்திரியில் இருக்க வேண்டியிருக்கிறது. பல சமயங்களில் ஆஸ்பத்திரியிலிருந்து வெளி வந்த பிறகும் சக்கர நாற்காலியே கதி என்றும் ஆகி விடுவதுண்டு."

"ரொம்பப் பயமுறுத்தறீங்களே!"

"பயப்படவே வேண்டாம். எலும்புக் கறையானைத் தடுக்கவும் குணப்படுத்தவும் முடியும்."

"உடம்பின் எலும்புகள் சதா புதுப்பிக்கப்பட்டுக் கொண்டேயிருக்கின்றன. ஆஸ்டியோகிளாஸ்டுகள் என்ற எலும்புத் தின்னி செல்கள் எலும்பைக் கரைத்து பிளாஸ்டுகள் என்கிற எலும்பாக்கி செல்கள் புதிய எலும்புத்திசுக்களை உருவாக்கி அந்த ஓட்டைகளை அடைத்துக் கொண்டேயிருக்கின்றன. குழந்தைப் பருவத்திலிருந்து சுமார் 20 வயது வரை எலும்பு தின்னிகளை விட எலும்பாக்கிகள் வேகமாக வேலை செய்கின்றன. அதனால் உடலில் எலும்புகள் வளர்ச்சி பெறுகின்றன. முப்பது வயதுக்குப் பிறகு எலும்புத் தின்னிகளின் கை ஓங்கி உடல் எலும்பு வளர்ச்சி நின்று போகும்."

"முப்பது வயது வரை உடலில் நிறைய எலும்பு வளர்ச்சி ஏற்படும்படி ஏற்பாடு செய்தால் பிற்காலத்தில் கஷ்டப்படாமலிருக்கலாம். வாட்ட சாட்டமாக இருப்பவர்களை விட ஒல்லியாக, சிறிய உடலுடனிருக்கிற பெண்களை எலும்புக் கறையான் அதிகம் பாதிக்கிறது. புகை பிடித்தலும், மது அருந்துதலும் எலும்புக்குத் தீங்கு செய்யும். புகை பிடித்தல் எஸ்ட்ரோஜன் அளவையும் குறைப்பதால், அது ஒரு இரட்டை அபாயம். அதிகமாகக் காப்பி குடித்தாலும் எலும்புக் கறையானுக்குச் சாதகமான சூழ்நிலை ஏற்படும். சில கார்ட்டிகோஸ்டீராய்டு மருந்துகளும் உடலில் கால்சியம் உட்கவரப்படுவதைத் தடுத்து எலும்புக்குச் சேதம் விளைவிக்கும்."




"உடம்பிலுள்ள கால்சியத்தில் கிட்டத்தட்ட 99 சதவீதம் எலும்புகளிலும் பல்லிலும் தானிருக்கிறது. திசுக்களிலுள் ரத்தத்திலும் பரவியிருக்கிறது. ஹார்மோன் உற்பத்தி, தசைகள் சுருங்கி விரிவது, இருதயம் துடிப்பது ஆகியவற்றுக்குக் கால்சியம் உதவுகிறது. உடலில் ஓடும் ரத்தத்தில் கால்சியத்தின் அளவு குறைந்தால் உறுப்புகள் எலும்புகளி

லிருக்கிற கால்சியத்தைப் பிடுங்கத் தொடங்கும். அது எலும்புகளைப் பலவீனப்படுத்துகிறது.''

''நடுத்தர வயதை எட்டும் போது எலும்புச் சிதைவு ஏற்படவே செய்யும். ஆகவே சிறு வயதிலேயே உடலில் நிறைய எலும்பை வளர்த்துக் கொண்டு விடுவதுதான் உத்தமம். கால்சியத்துடன் 'டி' வைட்டமினையும் சேர்த்துச் சாப்பிட வேண்டும். அது சிறு குடலில் கால்சியம் உட்கவரப்படுவதை ஊக்குவிக்கிறது. தினமும் 1200 மில்லி கிராம் கால்சியம் சத்து தரக்கூடிய உணவை இளைஞர்கள் சாப்பிட்டால் பிற்காலத்தில் எலும்புக் கறையானைத் தடுக்கலாம்.''

''மாத்திரையாகச் சாப்பிடுவதை விட பால், தயிர், மோர், கரும்பச்சை நிறக் காய்கறி களைச் சாப்பிட்டுத் தேவையான கால்சியத்தைப் பெறுவதே மேல். அவற்றில் மற்ற சத்துகளும் கூடுதலாகக் கிடைக்கின்றன. மேல் நாட்டில் வேகவைத்த முட்டையை ஓட்டுடன் அரைத்துப் பாலில் கலந்து குடிப்பது இப்போது பாஷனாகி வருகிறது. முட்டை ஓடு பூராவும் கால்சியம்தான்.''

''உடற்பயிற்சி செய்தால் எலும்புகள் வலுவடைவதுடன் பெரிதாகவும் செய்யும். அதன் மூலம் பிற்காலத்தில் எலும்புக் கறையான் வாய்ப்பைக் குறைக்க முடியும். முதியவர்களும் நடப்பது, சைக்கிள் விடுவது, நீந்துவது போன்ற பயிற்சிகளைச் செய்வது நல்லது.''

மாத விலக்கு நின்று முதல் ஐந்தாண்டுகளுக்குச் சராசரியாக ஆண்டு தோறும் உடல் எலும்பில் ஐந்து சதவீத அளவைப் பெண்மணிகள் இழக்கிறார்கள். அதன் பிறகு அது ஒரு சதவீதமாகக் குறைகிறது. உடலில் எஸ்ட்ரோஜன் உற்பத்தி குறைவது அதற்கு ஒரு காரணம். மாத விலக்கு நிற்கிற சமயத்தில் எஸ்ட்ரோஜனை ஊசி மூலம் உடலில் செலுத்துவதைச் சில மருத்துவர்கள் பரிந்துரைக்கிறார்கள். அதன் மூலம் எலும்பு முறிவுகள் குறையும். ஆனால் எஸ்ட்ரோஜன் மார்பகப் புற்று நோயையும் கருப்பைப் புற்று நோயையும் ஊக்குவிக்கக் கூடும் என்பதால் பல மருத்துவர்கள் அதை ஏற்கத் தயங்குகிறார்கள். ஆஸ்டியோகிளாஸ்டுகள் எனப்படும் எலும்பு தின்னி செல்களின் செயல்பாட்டைத் தணிக்கக் கூடிய சில மருந்துகளைத் தினமும் ஊசி மூலம் செலுத்துவதைச் சில மருத்துவர்கள் ஆதரிக்கிறார்கள். கல்சிடோனின், எடிட்ரோனேட் என்று இரண்டு மருந்துகள் அவ்வாறு செலுத்தப்படுகின்றன.

''எக்ஸ்ரே, ஸ்கானிங் மூலம் எலும்புக் கறையான் இருக்கிறதா என்று கண்டு பிடித்துக் கொள்ளலாம். ஐம்பது வயதுக்கு மேற்பட்ட பெண்கள் அவ்வாறு சோதித்துக் கொள்வது அவசியம். எலும்புக் கறையான் இருப்பதாகத் தெரிய வந்தால் மிகுந்த எச்சரிக்கையுடன் நடமாடி, வழுக்கி விழுவது, இடித்துக் கொள்வது போன்றவற்றைத் தவிர்க்க வேண்டும். குனிந்து, நிமிர்வது, இடுப்பை வளைத்துத் திரும்புவது ஆகியவற்றைக் குறைக்க வேண்டும். அல்லது மிக மிக மெதுவாகச் செய்ய வேண்டும். கால்சியம் நிறைந்த உணவு வகைகளையும் டி வைட்டமின் நிறைந்த உணவுகளையும் சாப்பிட வேண்டும்.''

## முதல் உதவிப் பெட்டி

வீட்டில் எப்போதும் ஒரு சிறிய டப்பாவை முதலுதவிப் பெட்டியாக தயாரித்து வைத்து விடுங்கள். சிறு வாண்டுகள் இருக்கும் வீட்டிற்கு இது மிக மிக அவசியம்.

டப்பாவில் குறைந்தது நான்கு ஜான்சன் & ஜான்சன் பாண்டேஜ். கொஞ்சம் பஞ்சு. தீ புண் பட்டால் தடவ மருந்து. 'ஆன்டிசெப்டிக்' மாத்திரைகள். கட்டுபோட துணி. நூல். சிறிய கத்திரி போன்றவற்றை எடுத்து வைத்துவிடுங்கள். சிறிய பாட்டிலில் 'டெட்டால்' வைத்திருப்பதும் நல்லது.

இந்த முதலுதவி பெட்டியை எல்லோர் கண்ணிலும் படும்படியாக ஒரு இடத்தில் வைக்கவும். சுட்டுக் கொண்ட பிறகு 'பர்னால்' எங்கே வெச்சேன்... பஞ்சு....எங்கே இங்கேதான் இருந்ததே! என்ற பாட்டை பதட்டத்தில் பாடுவதைத் தவிர்க்கலாம்.

— ஆர். சீதா.

# T.S.S. NIDHI LTD. ESTD 1973



THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Off.: 230, R.K. Mutt Road, Mylapore, Madras 600 004 ☎ 4942303 / 4943365

BRANCHES: THIRUVANMIYUR : 112, Thiruvalluvar Salai, Kamaraj Nagar, Madras - 41. ☎ 410058
TONDIARPET : 667, T.H. Road, Madras - 81. ☎ 5950472
SAIDAPET : 11, Jones Road, Madras - 15. ☎ 4851468

## FIXED DEPOSIT SCHEME

| Period (Months) | 12 | 24 | 36 | 60 |
|---|---|---|---|---|
| Rate of Int. P.A. | 17% | 18% | 19% | 20% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan) For Deposit of Rs.1,000/-

| Period (Months) | 12 | 24 | 36 | 45 | 67 |
|---|---|---|---|---|---|
| Maturity Value | 1190 | 1425 | 1760 | 2025 | 3025 |

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME

Minimum Deposit Rs.10,000/- Period - 12 months

Interest payable monthly **19.5%** p.a. Interest payable annually **21%**

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS)

## T.S.S. SPECIAL DEPOSIT SCHEME

For Deposit of Rs.10,000/-

| Period (Months) | Maturity Value |
|---|---|
| 120 | Rs.66,000 |
| 180 | Rs.1,82,000 |

## RECURRING DEPOSIT SCHEME

MONTHLY DEPOSIT Rs. 100/-

| Period in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| Maturity Value | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Week Days | | Sunday | Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

## HIGHLIGHTS

* Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
* Company is in 21st year of service.
* Transaction with members only (Rupees two only for membership)
* Premature repayment facility as per terms and conditions.
* Monthly Interest Warrants would be despatched in advance for the year of Deposits.

## LOANS

* A) Jewel loans granted on Gold ornaments at Rs.300/- per gms. (Rs.2400/- per 8 gms.)
  * No Ceiling
  * No Charges
  * No Interest Tax
  * Recurring Deposit not required
  * Your Jewels are insured at our cost.

B) Property Mortgage Loans granted on RD basis within Madras city limits.

P.S. SAMBASIVAM, Secretary — G. KUMARAVELU, Vice-President — K.R.V. RAMANI, President

# பாரதத்திலும் பெண்மையின்

இந்திய இராணுவம், தனது தரைப்படைப் பிரிவில் அதிகாரிகளாகப் பணியாற்றத் தேர்ந்தெடுத்த மாணாக்கர்களுக்குத் தேவையான பயிற்சி முறைகளை கற்பிக்கும் "அதிகாரிகளின் பயிற்சிக் கல்லூரி" ஒன்றை 1963 ம் ஆண்டு ஆரம்பித்தது. நமது இந்திய இராணுவம், மருத்துவம் போன்ற சேவைத் துறைப் பகுதியில் ஏற்கெனவே பெண்களை ஈடுபடுத்தியிருந்தாலும், ஆண்களுக்கு இணையாக பிற துறைகளிலும் சந்தர்ப்பம் அளிக்க முன் வந்துள்ளது கடந்த இரண்டு வருடங்களாகத்தான். இருகரம் நீட்டி வரவேற்கத் தக்க இந்தச் சிறப்பான விஷயத்தை வலுவாகப் பிடித்துக் கொண்ட, பாரதப் பெண்களில் பலர், ஏற்கெனவே அதிகாரிகளுக்குரிய பயிற்சிகளை இங்கே வெற்றிகரமாக முடித்துவிட்டு தற்போது நாட்டின் பல பாகங்களில் பொறுப்பான பதவிகளை வகித்து வருகின்றனர். அவ்வகையில் சாகசம் புரிய ஓர் உன்னத லட்சியத்தோடு இந்திய இராணுவ தரைப் படைப் பிரிவில் இடம் பெற்று அதிகாரிகளுக்குரிய கடும் பயிற்சிகளை அனாயசமாய்



மேற் கொண்டு வருகிறார்கள் சில வீராங்கனைகள்.

அக்டோபர் மாத நடுவில் ஒரு நாள் நாம், புனித தாமஸ் மலைக்கருகில் உள்ள இராணுவத் தரைப்படைப் பிரிவின் 'அதிகாரிகளின் பயிற்சிக் கல்லூரிக்குள்' நுழைந்தோம். முன்னரே அனுமதி பெற்றிருந்ததால், அங்கிருந்த எச்சரிக்கை பலகை நம்மை அச்சுறுத்தவில்லை. அடர்த்தியான கூந்தலின் நடுவே எடுத்த நேர்வகிட்டைப் போல வளைவே இல்லாத மிக நீண்....ட நேரான தார்ப்பாதை. அவ்வப்போது சர் சர் என்று செல்லும் இராணுவ ஜீப்கள். ஆங்காங்கே இருந்த ர்ர நிழலின் அடியில் சன்னமான குரலில் ஹிந்தியில் உரையாடும் ஜவான்கள் ற்றபடி எங்கும் நிசப்தம், தூய்மை, மைப்புரவு. இந்தச் சூழ்நிலை மரி

# கொடி பறக்குது



யாதை கலந்த ஒரு மிடுக்கான மனநிலையை, நமக்குள் ஏற்படுத்தியது.

பயிற்சி பெற்றுவரும் பெண்களைப் பேட்டி காணும் அனுமதியைப் பெற பொறுப்புள்ள பதவி வகிக்கும் பெரிய அதிகாரியை அணுகினோம். அவர் மனமுவந்து அதற்கு அனுமதித்ததுடன், அதற்குரிய வசதிகளையும் செய்து கொடுத்தார். அவரிடம் நாம், "ஆண் ஆளுமை அதிகம் உள்ள துறை இந்த இராணுவத் துறை. அதுமட்டுமில்லாமல் கடுமையான பயிற்சிகள், பதவி கிடைத்தாலும் நாட்டின் எந்தப் பகுதியிலும் பணியாற்ற வேண்டிய சூழ்நிலை, பயிற்சிக் காலம், அதன் பின் பணியாற்றும் காலம் வரை (5 ஆண்டுகள்) திருமணம் புரியாமை இப்படிப் பல சட்ட திட்டங்கள் இருந்தும் ஆயிரக் கணக்கான பெண்கள் இத்துறைக்கு விண்ணப்பிக்கிறார்களே" என வினவிய போது....

"ஒழுக்கம்! செய்கின்ற வேலையில், குணங்களில், மரியாதை தருவதில், சேவை புரிதலில் இப்படி எங்கும் எதிலும் ஒழுக்கம். சாதாரண மனிதனிடம் அதிகம் காண முடியாத இந்தப் பண்பினை விரும்புபவர்கள், ஓர் உயர்ந்த லட்சியத்திற்காக தன் வாழ்க்கையை அர்ப்பணிக்க விரும்புகிறவர்கள் இத்துறைக்கு வர விரும்புகிறார்கள். இத்துறைக்கு பணிபுரிவதற்குரிய கல்வித் தகுதி வெறும் +2 தான். இருந்தும் இங்கு சேர்ந்திருக்கும் மாணவிகளில் பெரும்பாலானவர்கள் முதுகலை விஞ்ஞானத்திலும் கலையிலும் பிற துறைகளிலும் முதுகலைப் பட்டம் பெற்றவர்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். இவ்வளவு ஏன் இராணுவத்தின் மிடுக்கான உடை மீது மையல் கொண்டு இதில் சேர விரும்பும் மாணவிகள் ஏராளம்" என்றவரிடம்,

"அமெரிக்கா, நடந்த வளைகுடாப் போரில் பெண் வீராங்கனைகள் நேரிடையாக தரைப்படைப் பிரிவில் (எதிரிகளைத் தாக்கும் பிரிவில்) பணியாற்ற அனுமதித்தது. இந்தியாவும், அத்தகைய நிலை வந்தால் நம் பெண் வீராங்கனைகளை எதிரிகளை நேருக்கு நேர் சந்தித்துப் போரிடும் பணியில் ஈடுபடுத்துமா? அந்தப் பெருமை பெண்களுக்குக் கிடைக்குமா?" என்று நாம் கேட்டதற்கு.

"பயிற்சிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பெண் அதிகாரிகளுக்குத் துப்பாக்கிச் சுடும் பயிற்சி, அடர்ந்த காடுகளில் பதுங்கி எதிரிகளை எவ்வாறு தாக்குவது என்பதிலிருந்து மிகுந்த தொழில் நுட்ப முறையில் தயாரிக்கப்பட்ட இராணுவ பீரங்கிகள், டாங்குகள் போன்றவை எவ்வாறு இயக்குவது என்பது வரை அனைத்தும் கற்பிக்கப்படுகிறது. பயிற்சி பெறும் போது எந்த நிலையிலும், எந்த அளவிலும் ஆண் என்றும் பெண் என்றும் பாகுபாடு இங்கு கண்டிப்பாகக் கிடையாது. ஆயினும் தற்போது தரைப்படைப் பிரிவில் எதிரி



• தீக்ஷா



• ஜக்தா



• ஜெயந்தி



• ஹசீனா



**❁ உடம்புக்குத் தேய்க்கும் பூசு மஞ்சள் தூளில் ஒரு வில்லை/இரண்டு வில்லைகள் சந்தனத்தைப் பொடி செய்து கலந்து வைத்துக் கொண்டால் சந்தன வாசம் நம் உடம்பில் வீசும்.**

**— ஆர். சீதா**

களைத் தாக்கும் பணியில் இருக்கும் போர் வீரர்களில் பெரும் பாலானவர்கள் rural area வைச் சேர்ந்தவர்கள். தங்கள் பணியில் பெண்களும் சமமாக பங்கு கொள்வதை ஏற்கும் மனப்பக்குவத்தை அவர்கள் பெற இன்னும் சிறிது காலம் ஆகலாம். அவ்வளவுதான். ஏன் தற்போது பணியில் இருக்கின்ற பெண் அதிகாரிகளின் சிறப்பான சேவையினை பாராட்டியதோடு மட்டுமில்லாமல், அதனை அங்கீகரிக்கும் வகையில் நமது இந்திய இராணுவம் பயிற்சி பெறும் அதிகாரிகளின் எண்ணிக்கையை அதிகரிக்க உத்தேசித்துள்ளது. மகிழ்ச்சிகரமான விஷயமில்லையா!" என்று நம்மை திருப்பிக் கேட்டார்.

மாணவிகளுக்குரிய பயிற்சி முறைகளைப் பற்றி கல்விப் பகுதியில் பணியாற்றும் அதிகாரி ஒருவர் கூறிய தகவல் : வேலை வாய்ப்புச் செய்தித்தாள் மூலம் விண்ணப்பித்த ஆயிரக்கணக்கான மாணவிகளில் எழுத்துத் தேர்விலும் பின்னர் நடை பெறும் நேர்காணலிலும் வெற்றி பெற்ற 25 பேர் பல மருத்துவ பரிசோதனைகளுக்குப் பிறகு பயிற்சி பெற தகுதி உடையவர்களாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். பயிற்சி பெறும் காலம் 24 வாரங்கள். பயிற்சி முடிந்தவுடன் தொடர்ந்து 5 வருடங்கள் அவரவர்களின் தகுதிக்கேற்ப Signals, AIC, ADC, ASC, EME, JAG (இராணுவப் பதவிகள்) போன்ற பணிகளில் அமர்த்தப்படுவார்கள். ஒவ்வொரு நாளும் சூரியன் உதயமாகும் போதே (காலை மணி ஆறுக்குள்) இவர்களின் பயிற்சியும் ஆரம்பமாகிவிடும். முதல் கட்டப் பிரிவு பெரும்பாலும் உடற் பயிற்சிக்கு ஒதுக்கப்படும். அதனைத் தொடர்ந்து அவரவர்கள் விரும்பி எடுத்துக் கொண்ட பாடப்பிரிவில் விரிவுரை + செயல் முறை பிரிவு. சரித்திரம், பூகோளம் விஞ்ஞானம் என்று அனைத்துப் பாடங்களும் இராணுவச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டுதான் கற்பிக்கப்படும். மதிய நேர ஓய்விற்குப் பிறகு படிப்பில் சற்று பின் தங்கிய மாணவிகளுக்கு extra-coaching class. மாலை நூல் நிலையம், பிற பொழுது போக்குகளை அடுத்து இரவு சாப்பாடு பின் உறக்கம்.

"பாடம் நடத்தும் போது கவனிக்கவில்லை. இரவில் படித்துக் கொள்ளலாம்" என்று தள்ளிப் போடும் வேலையெல்லாம் இங்கே செல்லுபடியாகாது. அதுமட்டுமல்ல காலைப் பயிற்சி ஆரம்பமானதிலிருந்து இரவு படுக்கச் செல்லும் வரை இன்னின்ன நேரத்திற்கு, இந்தந்த பகுதிக்கு இந்த உடையில்தான் (அனைவரும் ஒரேமாதிரியாக) இருக்க வேண்டும் என்கிற ஒழுக்கத்தையும் இங்கே கடைபிடிக்க வேண்டும். உடற்பயிற்சியுடன், எந்தச் சூழ்நிலையிலும் பதற்றமில்லாமல் பணியாற்றத் தகுந்த மனப் பயிற்சியையும் கொடுக்கும் இராணுவத் துறையின் தாரக மந்திரம் 'Serve with honour'.

இல்லத்தரசிகளின் வேலைச் சுமையைப் பெரிதும் குறைக்கும் வெட்கிரைண்டர்களின் இதயம் போன்ற பாகம் அதன் மோட்டார்தான். அதனால்தான் போலார் மோட்டார்கள் பெண்களின் சிரமங்களைப் புரிந்து கொண்டு லோ-வோல்டேஜ் ஆக மின்சாரம் இருந்தாலும் வேலை செய்யும். ட்யூப்லைட் எரியாத நிலையிலும் போலார் மோட்டார் பொருத்திய கிரைண்டர் வேலை செய்யும் என்றால் பாருங்களேன்!

கனமான இராணுவ கித்தானால் ஆன டெண்டின் கீழ் மாணவிகளின் பயிற்சி வகுப்பு நடந்து கொண்டிருந்தது. அன்னியர்கள் நாம் திடீரென்று அங்கே சென்ற போதும் ஒரு ஊசி முனை அளவு கூட தங்கள் தலையைத் திருப்பாது விரிவுரையாளர் மீதே தங்கள் முழு கவனமும் செலுத்திக் கொண்டிருந்த அப் பெண்களின் தீவிரம் நம்மை வியப்பில் ஆழ்த்தியது. (ஏதோ ஒரு சர்குலரை எடுத்துக் கொண்டு ஆபீஸ் ப்யூன் வந்தால் போதும். அனைத்து மாணவிகள் தலையும் அவர் பக்கம் திரும்பும் நம் காலேஜ் வழக்கம் உடனே நம் நினைவில் நெருடியது.)

ஆங்கிலத்தில் முதுகலைப் பட்டம் பெற்ற குமாரி L.C. ஜுக்தா சிங் பஞ்சாப் மாநிலத்தைச் சேர்ந்தவர் இராணுவத் துறையின்



சந்தமாமா விஜயா
கம்பைன்ஸ்

சென்னை
ஆல்பட் A/c
அபிராமி A/c
கிரவுன்
நாகேஷ் A/c
AVM ராஜேஸ்வரி A/c
தினசரி 4 காட்சிகள்
மற்றும் தமிழக மெங்கும்





கமல்ஹாசன்
நடிக்கும்

# நம்மவர்

B. வெங்கட்ராம ரெட்டி
சேதுமாதவன்



ஒழுக்கமான வாழ்க்கைக்காகவே இதில் பணி புரிய விரும்பி வந்ததாகக் கூறுகிறார்.

இராணுவத் துறையில் பணியாற்றும் தனது சகோதரரின் தேச சேவை மனப்பான்மையால் ஈர்க்கப்பட்டு இத்துறைக்கு விண்ணப்பித்தவர் ராஜஸ்தானைச் சேர்ந்த L.C. தீக்ஷா சசோதியா. "பிறந்து விட்டோமே என்று இந்தப் பூமியில் வெறுமே இருந்து விட்டுப் போக எனக்கு விருப்பமில்லை. வாழ்ந்து விட்டுப் போக நினைக்கிறேன்" என்று கூர்மையாய் பேசினார் குமாரி தீக்ஷா.

"பள்ளி அளவிலேயே என்.சி.சி.யில் பல சான்றிதழ்களைப் பெற்றவள் நான் அப்போதிலிருந்தே இராணுவ உடையின் மீது எனக்குத் தீரா மோகம். இது வரை யாரும் எங்கள் குடும்பத்தில் இராணுவத்தில் பணியாற்றியதில்லை. மிடுக்கான உடுப்பும், மதிப்பான உத்தியோகமும்தான் இப் பணியில் சேர என்னைத் தூண்டின" இப்படிக் கூறுபவர் பௌதிக முதுகலைப் பட்டம் பெற்ற, குமாரி ஹசீனா, இவர் கேரளாவைச் சேர்ந்தவர்.

இராணுவத்துறையிலேயே எக்ஸிகியூட்டிவாக பணியாற்ற விரும்பும் கல்கத்தாவைச் சேர்ந்த ஜெயந்தி சென் குப்தாவிடம் "இப்போதே தங்களுக்கு 25 வயது. பயிற்சி காலம் முடிந்து பணியில் இருக்கும் 5 வருடங்களுக்கு மணம் செய்து கொள்ள முடியாது. அப்படியென்றால் மண வாழ்க்கையில் தங்களுடைய திட்டம்" என்று நாம் கேட்டதற்கு குமாரி ஜெயந்தி, "திருமணம்தான் வாழ்வில் ஓர் உன்னத லட்சியம் என்று நான் நினைக்கவில்லை. மேலும் குறிப்பிட்ட காலத் திற்குப் பிறகு மணம் புரிந்தாலும் ஓர் உன்னத பணி நிமித்தமாக பிரிந்து வாழ்வதில் பெரிதாக என்ன இழந்து விடப் போகிறோம். ஏன் மேலை நாடுகளில் பணிபுரியும் தங்கள் கணவன்மார்களைப் பிரிந்து எத்தனை பெண்கள் வாழ்கிறார்கள் இங்கே" என்றார்.

இராணுவத் துறையின் தரைப்படைப் பிரிவில் 5வது பிரிவாக அடியெடுத்து வைத்திருக்கும் இந்தக் கன்னிகைகளில் பெரும்பாலோனோர் இருப்பினும் இராணுவ வலிமைக்குத் தோள் கொடுக்க வந்திருக்கும் இந்த வீராங்கனைகளைப் பார்க்கையில், "மென் தோள், மான், மயில்' என வர்ணிக்கும் கவிஞர்களின் நினைவு வந்தது. இவர்கள் வலிமையான தோளில் துப்பாக்கி ஏந்தும் வீராங்கனைகள்!

— கீதா மோஹன்

படங்கள் : ஓம் சுப்ரமணியம்

## மேஷ ராசி :

அசுவனி, பரணி, கிருத்திகை 1- ஆம் பாதம்.

கடந்த ஆண்டில் ஏற்பட்ட குருபெயர்ச்சியால் சில நல்ல காரியங்களும் தொழிலில் மேன்மையும் ஏற்பட்டிருக்க வேண்டும். அப்படி ஏற்படவில்லை என்றால் ஜாதகத்தில் கிரக அமைப்பும் தசாபுக்தியும் சரியில்லை என்று பொருள். இந்த ஆண்டு அஷ்டமத்தில் குரு அத்துடன் இராசியிலேயே கேது. 7ல் ராகு. சனி 11ல் இருப்பது உங்களுக்குச் சாதகமான சூழ்நிலை - அத்துடன் இராசிநாதனாகிய செவ்வாய் நீச்சமடைந்து, குருவால் பார்க்கப்படுவது நல்லது. அதனால் அன்றாடப் பணிகளில் தடைகள் ஏற்பட நியாயமில்லை. மாதத்தின் முற்பகுதியில் பெண் ஒருத்தியால் மனச்சஞ்சலத்திற்கு இடமுண்டு. வீடு கட்டும் யோகம் அல்லது வேறு விதமான சுபவிரயம் ஏற்படலாம். உடல்நிலை பாதிக்கப்பட்டுச் சரியாகலாம். செவ்வாய் அத்தகைய நிலையை உருவாக்கினாலும் விபரீதமாக ஒன்றும் ஏற்பட்டு விடாது. பணியில் உள்ளவர்களுக்கு எதிர்பார்க்கும் பதவி உயர்வு வரத் தாமதமாகலாம். சூரியனால் ஏதேனும் உஷ்ணசம்பந்தமான நோய்கள் ஏற்படலாம், என்றாலும் சுக்கிரனால் குடும்பத்தில் சுபிட்சமும் அமைதியும் ஏற்படும்.

## ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 - ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 - ஆம் பாதங்கள்.




டிசம்பர்'94

நல்லதொரு காலகட்டம் ஆரம்பமாகிறது. சுபநிகழ்ச்சிக்கு வாய்ப்பு உள்ளது. திருமண சம்பந்தமான கோட்சார பலம் கூடி வந்துள்ளது. 3ல் செவ்வாய் நீச்சமானாலும், குரு பார்வை பெறுவதால் நில சம்பந்தமான வழக்கில் வெற்றி கிடைக்கும். அல்லது வீட்டு மனை வாங்கலாம். சுக்கிரன் உதவும் நிலையில் இல்லை. அதனால் குடும்பத்திலும் சரி, தாம்பத்திய உறவிலும் சரி சிறு சிறு பிரச்னைகள் தோன்றுவதற்கு வாய்ப்பு உள்ளது. எனவே அவசரப்பட்டு எந்தப் பிரச்னையிலும் திடீர் முடிவு எடுக்க வேண்டாம். நல்ல இடம் என்றும், தெரிந்தவர்கள் சொன்னார்கள் என்றும் திருமணம் ஒன்றை நிச்சயம் செய்ய இருக்கிறீர்கள். நல்ல விதமாக நடக்கும் என்றாலும் சற்று தீர விசாரித்துத் தீர்மானிப்பது உசிதம் எனத் தோன்றுகிறது. குறிப்பாக உங்களுக்கு வேண்டிய பெண் ஒருத்தியே கூட அத்தகைய சம்பந்தத்தைக் கொண்டு வரலாம். அப்படி வரும் போது, இன்னும் நன்கு சிந்தித்து முடிவெடுப்பது நல்லது. சுக்கிரன் அப்படிப்பட்ட பாதகமான சூழ்நிலையில் சஞ்சரிக்கிறார். 6, 7ல் சுக்கிரன் இருப்பது சரியில்லை. ஸ்ரீலக்ஷ்மி ஸ்தோத்திரம் கனகதாரா ஸ்தோத்திரம், வெள்ளிக் கிழமை சுக்கிரனுக்கு அர்ச்சனை செய்வது நல்லது. இது எத்துறையினர்க்கும் ஏற்ற பரிகாரமாகும்.

## மிதுன ராசி :

மிருகசீரிஷம் 3,4 - ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 -ஆம் பாதங்கள்:

குரு 6ல் இருப்பதும், 5ல் இராகுவும், 2ல் நீச்ச அங்காரகனும் உங்களுக்குச் சாதகமான நிலையில் சஞ்சரிக்கவில்லை என்றாலும், கேது உங்களுக்கு உரியதைப் பெற உதவுவார்.

எனவே கணபதி ராயனைத் தொழுங்கள். கஷ்டங்கள் உங்களைத் தேடி வந்தாலும், அவன் அருள் இருந்தால் அனைத்தும் உங்களை விட்டு ஓடி விடும். 9ல் உள்ள சனி எழுத்தாளர்களுக்கும் அரசியல்வாதிகளுக்கும் பிரச்னைகளை உண்டாக்கலாம். காரண காரியமின்றி அரசு, காவல்துறை விசாரணைக்கு உட்பட வேண்டி வரலாம். ஆனால் மாதத்தின் முற்பகுதியில் சுக்கிரனும், பிற்பகுதியில் சூரியனும் உங்களுக்கு உறுதுணையாக இருப்பார்கள். அதனால் இழந்த செல்வாக்கைத் திரும்பப் பெறுவீர்கள். ஆன்மீகத்தில் சிறந்து விளங்கும் ஞானி ஒருவரைச் சந்திப்பீர்கள். அதனால் நன்மை உண்டு. உடல்நிலையில் சற்று கவனம் செலுத்த வேண்டி வரலாம். வெளியிலிருந்து வரும் செய்தி ஒன்று உங்களுக்குத் துயரத்தை அளிக்கலாம். விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தைப் புதன் கிழமையன்று படிப்பதை வழக்கமாகக் கொள்வது நல்லது. அலுவலகத்தில் பணிபுரிபவர்கள் மற்றும் வெளியூர் செல்பவர்கள் கைப்பொருளை இழக்க வேண்டி வரலாம். வீட்டை விட்டுச் செல்லுமுன் வினாயகரைத் தொழுது, மனத்தில் நினைந்து செல்லுவது நல்லது. இது இந்த இராசியைச் சேர்ந்த அனைவருக்கும் பொருந்தும்.

## கடக ராசி :

புனர்பூசம், 4-ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

நல்லதொரு மாதம். சுக்கிரன் சுகத்திற்கும், சுபநிகழ்ச்சி ஒன்றுக்கும் காரணமாக இருக்கிறார். அவரால் செல்வாக்கும் தனலாபமும் உண்டு. சென்ற ஆண்டில் இருந்த நிலை வேறு. இந்த ஆண்டின் குருபெயர்ச்சி உங்களுக்குச் சாதகமாக அமைந்துள்ளது. குருவின் பார்வையால் நீச்சம் பெற்றுள்ள செவ்வாய் கெடுதலை விட நன்மைதான் அதிகம் செய்ய வேண்டும். ரியல் எஸ்டேட், ஷேர் மார்க்கெட், வெளிநாட்டு விவகாரம், அரசியல் ஆகிய அனைத்துத் துறையிலும் வெற்றி கிடைக்கும். அஷ்டமத்தில் சனி இருந்தாலும், இராசிக்குக் குரு பார்வை இருப்பதால் பாதகம் செய்ய மாட்டார். ஒரு தொலைதூரப் பிரயாணம் ஏற்படும். மக்கள் நலன் நன்றாகவே இருக்கும். புத்திரகாரகனாகிய குருவின் பார்வை உள்ளதால் இந்த ராசியைச் சேர்ந்த குழந்தைகளின் கல்வி நலன் நன்றாக இருக்கும். தாயாரின் உடல்நிலை சற்று கவலையைத் தரலாம். மாதத்தின் பிற்பகுதியில் புதனாலும், சூரியனாலும் வழக்கொன்றில் உங்களுக்கு வெற்றி உண்டு. அது நீங்கள், உங்கள் பதவி சம்பந்தமாக அரசுக்குச் செய்துள்ள முறையீட்டில் உங்களுக்குச் சாதகமான முறையில் தீர்ப்பளிப்பதன் மூலமும் ஏற்படலாம். அல்லது நீதித் துறையில் நிலுவையிலிருக்கும் வழக்கில் ஏற்படும் வெற்றியாகவும் அமையலாம். பழனி முருகனை நினையுங்கள். நல்லதொரு மாதம் எனலாம்.

பஜ்ஜி போடும் போது, பஜ்ஜி மாவுடன் ஒரு வெங்காயம், 2 பல் பூண்டு, 2 லவங்கம், 8 சோம்பு இவற்றை நன்றாக அரைத்துக் கலந்து பஜ்ஜி சுட்டால் சுவையாக இருக்கும்.

- ஜி. கன்யாகுமாரி



## சிம்ம ராசி :

மகம், பூரம், உத்திரம் 1- ஆம் பாதம்.

சுக்கிரனால் சுகமுண்டு. குழந்தைகள் நலன் நன்கு அமையும். ராகுவால் எந்தப் பிரச்னையிலும் உங்களுக்கு வெற்றி கிடைக்கும். குறிப்பாக வழக்குகள், அரசியல் சம்பந்தமான பிரச்னைகள், மற்றும் உங்களுக்கு முறைப்படி சேர வேண்டிய குடும்பச் சொத்துக்கள் சம்பந்தமான சிக்கல்கள் ஆகியவைகளில் உங்களுக்குச் சாதகமான முறையில் முடிவு ஏற்படும். முன்பு இருந்ததை விட அதிகமான அளவில் உங்களுக்கு மேல் அதிகாரத்தில் உள்ளவர்களிடம் உங்களுக்குச் செல்வாக்கு அதிகரிக்கச் சுக்கிரன் உதவுகிறார். உடல்நிலையும் மனநிலையும் திருப்தியளிக்கக்கூடிய வகையில் அமையும். புதியதொரு பதவி கூட எதிர்பார்க்கலாம். நடிப்புத் துறையினர், பத்திரிகைத் துறையினர், வாசனைத் திரவிய வியாபாரிகள், அத்தகைய அலுவலகங்களில் பணிபுரிபவர் ஆகியவர்களுக்கு நல்லதொரு காலகட்டம். கலைஞர்களுக்குச் செல்வாக்கும், பாராட்டும் கிடைக்கும். ஆட்சியில் உள்ள சனீஸ்வரர் உங்களுக்கு இந்த மாதத்தில் ஒரு தொலைதூரப் பிரயாணம் ஏற்படுவதற்கான வாய்ப்பை ஏற்படுத்துவார். அது கண்டம் விட்டு கண்டம் செல்லும் (Continental Tour) ஆகவும் அமையலாம். 9ல் உள்ள கேது உடல்நலத்திற்குச் சற்று ஊறு விளைவிக்கலாம். வினாயகருக்கும், கேதுவுக்

கும் அர்ச்சனை செய்தால் கூடுதல் நன்மை உண்டு. உடல்நலமும் நன்றாக இருக்கும்.

## கன்னி ராசி :

உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 - ஆம் பாதங்கள்.

மாதம் முழுவதும் சுக்கிரன் நல்ல நிலையி லேயே சஞ்சரிக்கிறார். அதனால் குருபெயர்ச் சிக்கு முன்பு இருந்தது போலவே சுபநிகழ்ச்சி ஏற்பட வாய்ப்பு உள்ளது. திருமணத்திற்காகக் காத்திருந்து, கைகூடி வராத அந்த சுபநிகழ்ச் சிக்கு, இந்த மாதத்தில் முயற்சி செய்தால் வெற்றி உண்டு. 2ம் இடத்தில் உள்ள இராகு சில சோதனைகளைத் தரலாம். பொருளைத் திருடர்களுக்குப் பறிகொடுத்தல், தொழிலில் சிறு நஷ்டம், இடமாற்றம் என ஏதோ ஒரு விதத்தில் அத்தகைய சோதனை ஏற்படலாம். புதன் மாதத்தின் பிற்பகுதியில் உதவுகிறார். சூரியனோ முற்பாதியில் உங்களுக்குப் புதிய தொரு பதவி அல்லது பதவி உயர்வு தர இருக்கிறார். அதனால் தனலாபமும் உண்டு. மதிப்பும் உண்டு. 6ல் உள்ள சனி தொழிலில் மேன்மையைத் தருவார். அதனால் இரும்பு, கருப்புக்கல், கட்டுமானப்பொருட்கள் ஆகி யவை சம்பந்தமான வியாபாரிகளுக்கு இலா பம் உண்டு. பணிபுரியும் பெண்களுக்குப் பதவி உயர்வு உண்டு. 8ல் உள்ள கேது சிறு சிறு காயம், அல்லது இரத்தப் போக்கு போன்றதொரு தொல்லைகளைத் தரக்கூடும். 11ல் நீச்சமடைந்துள்ள செவ்வாய் குரு பார்வை காரணமாக உங்களுக்கு மனோதைரியத்தை யும், மகிழ்ச்சியையும் பெற உதவுவார். எனவே பாம்புக் கிரகங்களுக்குரிய பரிகாரமாகக் காளஸ்தி, சூரியனார் கோயில், திருநாகேச வரம் போன்ற ஸ்தலங்களில் உள்ள இராகு, கேதுக்களுக்கு அர்ச்சனை செய்வது நல்லது.

## துலா ராசி :

சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

இராசிநாதனும், குருவும்தான் உதவும் நிலை. மற்ற எல்லா கிரகங்களும் அசுப பல னைத் தரும் நிலைதான். மாதத்தின் பிற்பகுதி யில் சூரியன் உங்களுக்கு உடல் ஆரோக்கியம், வழக்குகளில் வெற்றி என உதவலாம். மற்றபடி அனுபவித்துக் கழிக்கும் மாதமே. பிரயாணத் தின் போது உங்களையும், உங்கள் உடமை களையும் பாதுகாப்பது அவசியம். தொலை தூரப் பிரயாணங்களைத் தவிர்ப்பது நல்லது. அப்படி கட்டாயம் செய்ய வேண்டிய நிர்ப் பந்தம் வந்தால் ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்தோத் திரத்தைக் கூறி, வணங்கி, பிறகு பிரயாணம் செய்யலாம். அவரது அருள் உங்களுக்கு உறு துணையாக நிற்கும். தெய்வம், அருள் இவை எல்லாம் நம்புபவர்களுக்குத்தான். மற்றவர் களுக்கு அவர்களது மனநிலை பொறுத்துத் தான் அமையும். இடமாற்றம் ஒருசிலருக்கு கிடைக்கும். கூடியமட்டும் இருக்கும் இடத்தி லேயே இருப்பது சுகம். மற்றபடி இரண்டாம் இடத்தில் உள்ள குரு சத்ரு ஜெயத்தையும், தன இலாபத்தையும் தர இருக்கிறார். எனவே கவலையின்றி காரியங்களைப் பாருங்கள்.

## விருச்சிக ராசி :

விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

தற்சமயம் சுக்கிரனும் கேதுவும்தான் உத வும் நிலையில் உள்ளனர். விருச்சிகத்தில் தசாபுக்திப் படியும் ஸ்தான பலத்தின் படியும் குரு நல்லவர்தான். கோட்சாரப்படி ஜாத கருக்கு இடமாற்றம் தருவார் என்பர். அதன் படி பார்க்கும் போது நீங்கள் பணிபுரியுமிடத் திலிருந்து வேறு இடத்திற்கு மாற்றம் வரலாம். 6ம் இடத்திலுள்ள கேதுவின் நிலை உங்களுக் குச் சாதகமாக இருப்பதால் அத்தகைய மாற் றம் கூடுதலான நன்மையையே தரும். மாத ஆரம்பத்தில் 12ல் உள்ள சுக்கிரன் குடும்ப சுகத்திற்கும் தனலாபத்திற்கும் உத்திரவாதம் அளிப்பதுடன் மாதத்தின் பிற்பகுதியில் தனுசு வுக்கு வரும் அதே சுக்கிரன் தாம்பத்திய உற வுக்கும், மன மகிழ்ச்சிக்கும் காரணமாக நிற் கிறார். மற்றபடி எந்த கிரகமும் உதவும் நிலை யில் இல்லை. இராசிநாதனை குரு பார்ப்ப தால், அவரால் எத்தகைய கெடுபலனும்



**பிசுக்குள்ள தலையில், விரத நாட்களில் தண்ணீர் ஊற்றிக் கொள்ளாதீர்கள். பிசுக்கில் பிடித்த ஈரம் சீக்கிரம் காயாது. தலைக்குத் தண்ணீர் ஊற்றிக் கொள்ள நேர்ந்தால், ஷாம்பு அல்லது சீயக்காய் போட்டு அலசி விடுங்கள். அப்போதுதான் தலை சீக்கிரம் காயும்.**

**- ஆர். ஜோதிஅஞ்சலி**

ஏற்பட நியாயமில்லை. இராகுவுக்கும், புதனுக்கும், சூரியனுக்கும் அர்ச்சனை செய்வது நல்லது. ஞானகாரகனாகிய குரு இராசியில் இருப்பதால் மகான்களின் சமாதிக்குச் சென்று தியானம் செய்வது, மற்றும் ஆன்மிகத் துறையில் உள்ளவர்களைச் சந்தித்து ஆசி பெறுவது போன்றவற்றால் மனத்தில் நிம்மதி உண்டாகும்.

## தனுசு ராசி :

மூலம், பூராடம், உத்திராடம் 1- ஆம் பாதம்.

இராசிநாதன் விரயத்திலிருந்தாலும், இலாபஸ்தானத்தில் உள்ள இராகு தனலாபம் ஏற்படக் காரணமாக இருக்கிறார். மற்றும் மாதம் பூராவும் சுக்கிர சகாயம் இருக்கும் போது குடும்பத்தில் அமைதியும், சுபநிகழ்ச்சிக்குரிய வாய்ப்பும் உள்ளது. எனவே கவலை தேவையில்லை. அத்துடன் 3ல் உள்ள சனி உங்களது தொழிலில் ஆக்கப்பூர்வமான முன்னேற்றத்தைத் தருவார். பூராட நட்சத்திரத்தில் பிறந்துள்ளவர்களுக்கு நட்சத்திர நாயகனாகிய சுக்கிரன் மேலான நிலையில் சஞ்சரிப்பதால் தடைபட்டுக் கொண்டிருக்கும் சுபநிகழ்ச்சிகள் தோஷம் நீங்கி, நன்முறையில் நடந்தேறும். எனவே திருமணத்திற்காகக் காத்திருக்கும் பெண்களுக்கு முயற்சி செய்தால் உடன் திருமணம் கைகூடி வரும். பணிபுரியும் பெண்களுக்குக் கூட பதவி உயர்வோ, கேட்ட இடத்தில் இடமாற்றமோ கட்டாயம் கிடைக்கும். மற்றபடி இதர கிரகங்களின் சஞ்சாரம் சரியில்லை என்பதால் வம்பும் வழக்குகளும் தேடி வந்தாலும், அமைதியுடனும், பொறுமையுடனும் அவற்றை எதிர்கொள்வது நல்லது. இந்த மாதத்தில் நீங்கள் கடைபிடிக்க வேண்டிய மூன்று குணங்கள், கண்ணியம், கடமை, கட்டுப்பாடு. இதன்படி நடப்பதே நல்ல பரிகாரமாகும். நோய் நொடி வரும் போது அலட்சியம் செய்யாமல் உடன் மருத்துவரை நாடுவது நல்லது. ஏற்றத் தாழ்வுகள் நிறைந்த மாதமே.

## மகர ராசி :

உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.

இலாபஸ்தானத்தில் குரு. மாதத்தின் பிற்பகுதியில் சுக்கிரனாலும், முற்பகுதியில் புதன் சூரியனாலும் தனலாபம் உண்டு. அது தொழிலிலும் வரலாம். அல்லது எதிர்பாராத விதத்திலும் வரலாம். 2ல் சனி ஆட்சி; இராசிநாதன் ஆட்சியில் இருக்க அவரால் இடர் வருவதற்கு வாய்ப்பில்லை. ஆனால் 7ல் அங்காரகன் நீச்சன். குருபார்வை இருந்தாலும், குடும்பத்தில் சிறு சிறு சண்டைகள், வாக்குவாதம் வரலாம். எனினும் பெரியதொரு பாதிப்பு ஏற்படாது. சுபநிகழ்ச்சி ஒன்று நடக்க இருக்கிறது. உங்களது திருமணமாகக் கூட இருக்கலாம். சஷ்டியப்த பூர்த்தியாக இருந்து, அறுபதாம் ஆண்டுத் திருமணமாகக் கூட அது அமையலாமே! கன்னிப் பெண்களுக்குக் கட்டாயம் சுக்கிரனது அருளால் திருமணம் கைகூடி வரலாம். அத்தகைய சுபநிகழ்ச்சி மாதத்தின் பிற்பகுதியில் நடக்கலாம். முற்பகுதியில் ஒரு பெண்ணால் சிறு தொல்லைகள் ஏற்படலாம். அந்தப் பெண் உங்கள் மேலதிகாரியாகவும் இருக்கலாம். அல்லது வேலைக்காரராகவும் இருக்கலாம். எனவே எந்த இடத்திலும் பொறுமை அவசியம். மகர ராசிக்காரர்களுக்கு இந்த மாதத்தில் இழந்த ஒன்றைப் பெறும் வாய்ப்பு சூரியனால் ஏற்படும். மாதம் பூராவும் அவனது அருள் உண்டு.

## கும்ப ராசி :

அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

இராசிநாதன் ஆட்சியில் இருப்பதால் கெடுபலன்கள் குறைவு. கேது 3ல் இருக்கின்ற காரணத்தால் தனலாபமும், எதிரிகளின் முயற்சியில் தோல்வியும் ஏற்பட்டு மனத்தில் நிம்மதி இருக்கும். 3ல் கேது இருந்தால்



பாஸந்தி, பால்கோவா, ஐஸ்கிரீம் போன்றவையெல்லாம் பிளாஸ்டிக் கன்டெயினர்களில் கிடைக்கின்றன. சாப்பிட்ட பின், கன்டெயினர்களை தூக்கிப் போடாமல் பத்திரமாய் வைத்திருங்கள். வெளியூர் போகும் சமயங்களில் உணவு ஐட்டங்களை எடுத்துச் செல்ல அவற்றைப் பயன்படுத்திக் கொண்டு, சாப்பிட்ட பின், தூக்கிப் போட்டு விடலாம். இது என் அனுபவம்.

- எம். பாரதி



*குளிர்காலங்களில் கை, கால்களிலுள்ள மேல் தோல் வறண்டு, கோடு கோடாகக் காட்சி தரும். சோப்பு உபயோகிக்காமல், குளிக்கும் முன்பு தேங்காய் எண்ணெய் தடவிக் கொண்டு பயறு அல்லது கடலை மாவைத் தேய்த்துக் குளிப்பதால் சருமம் குளிரினால் பாதிக்கப்படாது.*

*- ஆர். கீதாஞ்சலி.*

---

முருகன் அருள் உண்டு. அதே சமயம் 6ல் செவ்வாய் நீச்சமானாலும், உங்கள் முயற்சியில் வெற்றி உண்டு. அது வேலை தேடும் விஷயத்திலும் ஏற்படலாம். அல்லது வீட்டு மனை ஒன்று வாங்குவதிலும் உண்டாகலாம். குறைந்தபட்சம் நீண்ட நாட்களாகத் தொல்லை தருகின்ற சில கடன்கள் அடைக்கக்கூடிய வாய்ப்பும் முருகனது அருளால் வரலாமே. சூரியனும், புதனும், மாதத்தின் முற்பகுதியில் சுக்கிரனும் உதவும் நிலையில் உள்ளார்கள். எனவே இந்த மாதத்தில் நீங்கள் எதிர்பார்க்கும் தனலாபமோ, அதிருஷ்டமோ அல்லது வீடு, வாகன யோகமோ, மகள் அல்லது மகனின் திருமணமோ கைகூடி வரும். 10ல் உள்ள குருவுக்குச் சனியின் பார்வை. ஸ்தான பலத்தில் பலவீனமடைந்த சுபரான குருவை, பாவி எனக் கருதப்படும் சனீஸ்வரன் பார்ப்பதால் குரு ஜாதகருக்கு பதவி இழப்பையோ, பண நஷ்டத்தையோ ஏற்படுத்த மாட்டார் என எண்ணி தைரியமாகப் புது முயற்சிகளில் இறங்கலாமே! வேலுண்டு, ஜயமுண்டு, பயமில்லையல்லவா?

## மீன ராசி :

பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

பூரட்டாதியின் நாயகனாகிய குரு மீனத்தைப் பார்ப்பதால் எந்தவித முயற்சியிலும், எந்த இடத்திலும், எத்தகைய நேரத்திலும் வெற்றி உண்டு. மாதம் பூராவும் சுக்கிரனது அருள். எனவே இலட்சுமிகடாட்சத்திற்குக் குறைவில்லை. தட்டிச் சென்ற திருமணமா, கைநழுவிப் போனப் புது ஒப்பந்தமா, அல்லது திரும்பி வர வேண்டிய பணம் வராமல் தாமதமா? எதுவானால் என்ன? எந்த வகையிலும் உங்கள் மனம் மகிழும் வண்ணம் நீங்கள் எதிர்பார்த்தது நடக்கும். வராது என்ற வாய்ப்புத் தானாக வந்து கதவைத் தட்டும். தட்டிச் சென்ற திருமணம் கொட்டு மேளம் கொட்ட ஜாம் ஜாம் என்று நடக்கும். குறிப்பாக மாதம் பூராவும் புதனும், பிற்பகுதியில் சூரியனும் உங்களுக்கு உதவ இருக்கிறார்கள். கட்டிடக் கலைஞரானால் புது ஒப்பந்தங்கள் ஏற்படும். எனினும் விநாயகரையும், தக்ஷிணாமூர்த்தியையும் அர்ச்சித்து வழிபடுங்கள்.

## மனச் சிதைவு ஏற்படுவது ஏன்?

ஒரு சமயம் எமதர்மர் எருமை வாகனத்தில் அமர்ந்து பூலோகத்துக்கு வந்தார். அது சமயம் சுண்டெலி ஒன்று தன் வளையிலிருந்து பயத்துடன் அவரைப் பார்த்தது. காலன் அதைப் பார்த்து, "நீ இங்குதான் இருக்கிறாயா?" என்று கேட்டு விட்டு பதிலை எதிர்பார்க்காமல் எதிர்புறமாகச் சென்று விட்டார். எலிக்கு இப்பொழுது கிலி பிடித்துக் கொள்ள அது தன் கழுகு நண்பனைப் பார்த்து நடந்ததைக் கூறி, எமன் தன்னைப் பார்த்து விட்டதால், திரும்பி வரும் போது அவர் கட்டாயம் தன்னை எடுத்துக் கொண்டு விடுவார் என அழுதது. அதனால் கழுகு, எலியைக் கொண்டு போய், காலன் தன் கோட்டைக்குள் காலடியே வைக்கக் கூடாது என வரம் கேட்டு வாங்கி வந்த அரக்கனது கோட்டையில் விட்டு விட்டது. எலிக்கு இப்போது பயம் போய், பசி வந்து விட்டது. இரை தேடிக் கொண்டிருந்த அந்த எலியைக் கவனித்துக் கொண்டிருந்த பூனை ஒன்று, திடீரென்று அதன் மீது பாய்ந்து கவ்விக் கொண்டு கோட்டைக்கு வெளியே வந்து அதைக் கபளீகரம் செய்து விட்டதுடன், நண்பனைப் பார்க்க வந்த கழுகிடம் எலியைத் தின்று விட்டதாகக் கூறி கோட்டைக்குள் ஓடி விட்டது. இவ்வாறு எலி வீணான கற்பனையினாலும், அச்ச உணர்வாலும் தன் சாவைத் தானே வலிய தேடிக் கொண்டதைப் போல, சிலர், வீணான கற்பனையில் மூழ்கி, சித்தப்பிரமை, மனச்சிதைவு போன்றவற்றை உண்டாக்கிக் கொண்டு வீணாவதைப் பார்க்கிறோம். அப்படிப்பட்டவர்களின் நிலையை, அவர்களது கைரேகைகளைக் கொண்டோ ஜாதகத்தைக் கொண்டோ முன்கூட்டி அறிந்து விட முடியும்.

சாதாரணமாக மேற்கண்ட மனச்சிதைவு பெரும்பாலும் 15 வயதுக்கு மேல் உள்ளவர்களிடம்தான் அதிகம் காணலாம். நடக்க முடியாத, அல்லது தகுதியற்ற கற்பனையை



**<u>தயாரிப்பாளருக்கு யோசனை :</u>**

**காலிங்பெல்லை அடிக்கும் போது வீட்டிலிருக்கும் ஒரே பெண்மணி அடுப்பி லிருப்பதை அப்படியே விட்டு விட்டு வர முடியாமலோ, பாத்ரூமிலோ, ஆடை உடுத்திய படியோ இருக்கக்கூடும். அதற்குள் மூன்று, நான்கு முறை அது ஒலிக்கப்பட்டு எரிச் சலை ஏற்படுத்தும். (நாளியங்கித் தொட்டிப் பூட்டானால் வீட்டில் யாராவது இருக் கிறார்களா, பூட்டிக் கொண்டு வெளியில் சென்றிருக்கிறார்களா என்று கூட வந்த வர்கள் அறிய முடியாமல் அவர்களுக்கும் குழப்பம் நீடிக்கும்.) எனவே மணி ஒலித்த தும், வீட்டுக்குள் வசதியான இடத்திலிருந்து ஒரு பட்டனை அழுத்தினால் வாயிலில் பட்டன் அருகில் ஒரு சிறு வண்ண அமைப்பு ஒளிரும்படியாகவோ, மெல்லிய பதில் ஓசை எழும்படியாகவோ அமைத்தால், வந்தவர்களுக்குக் குழப்பத்தையும், உள்ளிருப் பவர்களுக்கு எரிச்சலையும் தவிர்க்கலாம்.**

— அ. ஷண்முகசுந்தரம்.

---

வளர்த்துக் கொண்டு, தாழ்மையுணர்ச்சிக்கு ஆளாகி, தனக்கு இந்த உலகமே துரோகம் செய்து விட்டதாக எண்ணி, காரண காரி யமில்லாமல் கோபப்படுவது, உரத்த குரலில் சத்தமிட்டு பேசுவது, மரியாதைக்குறைவாக நடந்து கொள்வது போன்ற குணங்களுடனும் முரட்டுப் பிடிவாதத்துடனும் இளமையை வீணடித்துக் கொள்ளும் குழந்தைகளின் பெற்றோர்களின் மனம் வருந்துவதைப் பார்க் கிறோம். அப்படிப்பட்ட குழந்தைகளின் கை களில் புத்திரேகை சிதைவடைந்தோ அல்லது சங்கிலித் தொடராகவோ (x-y) காணப்படும். ஜாதகத்தில் சந்திரன் 4ல் நீச்சமடைந்தோ அல்லது 10ல் உச்சமடைந்தோ காணப்படு வதுடன், தனுசு ராசியில் ராகு இருந்து சிம்ம லக்கினமாகவோ அமைந்திருக்கும். குறிப்பாக மேற்படி ராகுவின் தசை 15 வயதுக்கு மேல் ஆரம்பித்திருக்கும், அத்துடன் புத்திரேகை மிகவும் சாய்வாகச் சென்று சந்திரமேட்டில் (m-n) முடிவடைந்து அங்கு பல சிறு ரேகைகள் தாறுமாறாகக் காணப்படும். இப்படிப்பட்ட வர்களுக்குக் கல்வியில் ஆர்வம் குறைந்து காணப்படும். அத்துடன் 6ம் இடத்தில் சுக்கி ரன் குருவுடன் சேர்ந்து மகரத்திலும் இருப் பார். இப்படிப்பட்டவர்களுக்கு தாய்மொழி அல்லது பிராந்திய மொழியில் ஈடுபாடு குறைந்து அன்னிய மொழியிலும், அந்த மொழியில் உள்ள இசைக் கலையிலும் நாட் டம் அதிகம் ஏற்படும். இவர்களுக்கு சுற்றமும் பகையாகத் தெரியும். உற்ற பெற்றோர்களிடம் பயம், மரியாதை என்பதைக் காண முடியாது. உதாரணத்திற்காக மட்டுமே ஒருவித ஜாதக அமைப்பு தரப்பட்டுள்ளது.

குறிப்பாக மேற்படி குழந்தைகள் உண்மை யிலே திடீரென நன்கு படித்து நல்ல மதிப் பெண்கள் பெற்ற சமயம், நீ படிச்சா இந்த அளவுக்கு மார்க் வாங்கினாய்? என யாராவது கேட்டால் அவர்களுக்குத் தன் திறமையில் மற்றவர்களுக்குச் சந்தேகம் இருக்கிறதே என ஏற்படும் தாழ்வு மனப்பான்மையே மனச் சிதைவுக்குக் காரணமாகக் கூட அமையலாம். அப்படிப்பட்ட குழந்தைகள் தான் யாரை என்ன வேண்டுமானாலும் பேசலாம். ஆனால் தன்னை, குறிப்பாக வகுப்பறையிலோ, மற்ற இடத்திலோ பிறர் முன் அலட்சியப்படுத்திப் பேசுவதை வெறுப்பார்கள். எனவே மேற்படி மனச்சிதைவு அடைந்துள்ள குழந்தைகளின் நிலைக்குக் கிரகக் கோளாறும் காரணம் என்பதை அறிவதுடன், அக் குழந்தைகளிடம் பயமுறுத்திப் பேசுதல் போன்றவற்றை விட்டு, அனுதாபம், பரிவு, அன்பு இவைகளை அடிப் படையாகக் கொண்ட (Sympathetic approach) இரக்க உணர்வுடன் பழகுவது நல்லதொரு பயனைத் தரும். குரு, இராகு, சந்திரன் ஆகிய வர்களுக்கு அர்ச்சனை செய்வதும் பயன் தரும். அதோடு ஆரம்பத்திலேயே மருத்துவ மனைக்கு அழைத்துச் சென்று மின் அதிர்ச்சி தருவது போன்ற சிகிச்சை முறை மேற் கொள்ளாமல், மன இயல் முறையில் அன்பா கப் பேசி மாற்றம் ஏற்படுத்தும் அனுபவமிக்க மன இயல்மருத்துவ நிபுணர்களை நாடுவதும் நல்லது.

**- ஜெயலட்சுமி கிருஷ்ணன்**






## தொழில் நுட்பம்

**பேட்டர்ன் செலக்டர் டயல்**
வகைவகையான பேட்டர்ன்களில் இருந்து தேர்ந்தெடுக்க ஒரு டயல் சுழற்றினாலே போதும்.

**முகப்பு பிளேட்டில் தகவல்கள்**
கடினமான புத்தகங்கள் இல்லை. ஒரு பார்வையிலேயே வேண்டியதை அறியலாம்.

**தையல் செலக்டர்**
ஸிக்-ஸாக் முதல் நேர்த்தையல் வரை ஒவ்வொரு முறையும் புது டிசைன் உருவாக்கலாம்-ஆட்டோமேட்டிக் காஜா வசதியும் உண்டு.

**உள்ளமைப்பு விளக்கு**
தையல் மீது வெளிச்சம் விழுவதால் சிரமமின்றி தைக்கலாம்.

**ஸ்நாப்-ஆன் பிரஸ்ஸர் ஃபுட்**
பிக்கோ, கார்டிங், ஜிப் வைப்பது, பித்தான் வைப்பது, காஜா போடுவது, எந்த வேலையானாலும் பிரஸ்ஸர் ஃபுட்டை அழுத்தி மிக எளிதாகச் செய்யலாம்.

**டைமண்ட் வடிவ ஃபீட் டாக்ஸ்**
ஸிக்-ஸாக் ஸ்ட்ரெட்ச் தையல் அல்லது மிகவும் உறுதியான மூன்று தையலை மிகவும் செளகரியமாகத் தைக்கலாம்.

**ஃப்ரீ ஆர்ம்**
கை கஃப்புகள் அல்லது சல்வார் ஹெம்களைக் கூட சிரமமின்றி தைத்திட அகற்றத்தக்க ஆர்ம் உதவுகிறது.

**லேசான எடை**
கையடக்கமானது. எளிதில் எடுத்துச் செல்லலாம். எனவே, பத்திரமாக எடுத்துவைத்து வேண்டும்போது வெளியே எடுக்கலாம்.

**உள்ளமைப்பு மோட்டார்**
பலமணி நேரமானாலும் சிரமமின்றி தைக்கலாம்.

## தையலை சுலபமாக்கிடும்

ஒரு டயலைச் சுழற்றுங்கள். உஷா ஒண்டர்ஸ்டிட்ச் வழங்கிடும் அதன் வலுவான அம்சங்கள் அனைத்தையுமே. எனவே, மிகமிகக் கஷ்டமான தையல்களைக் கூட இப்போது ஒண்டர் ஸ்டிட்ச் செய்கிறது இதனால் மிகவும் சிக்கலான டிசைன்களைக் கூட நீங்கள் உருவாக்கலாம்-சுலபமாக.

புதிய உஷா ஒண்டர்ஸ்டிட்ச். இப்போது தன்னேரில்லாத ஒரு ஸ்டைலுடன் தைக்க உதவுகிறது.

wonder STITCH

USHA JANOME JAPAN

இவ்வளவு சுலபமான தையல், இதற்கு முன்பு இல்லை.

ULKA 20003 TAM

ஃபாதிமாஸ் ஜுவல் ஹவுஸ் மங்கையர் மலருடன் நடத்திய சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற கதை.

# அன்னைத் தேடி...

-நந்தினி

பீரோவைத் திறந்து, மெல்ல புடவைகளை வருடிக் கொடுத்தாள். கொஞ்சம் நாப்தலீன் உருண்டைகள், கொஞ்சம் டால்கம் பவுடர், கஸ்தூரி மஞ்சள் என்று கலந்து பிரத்யேகமாய் ஒரு வாசனை - அம்மாவின் வாசனை, ஏதோ அம்மா பக்கத்திலிருப்பது போல - சட்டென்று திரும்பிப் பார்த்தாள் காயத்திரி. அந்த வெறுமை புதிதாய் தாக்கியது.

அம்மாவின் சந்தோஷமான குரல் கூட இன்னும் காதுகளில் ஒலிப்பது போல் ஒரு பிரமை - "குட்டிம்மா! எல்லாம் நல்லபடியா முடிஞ்சதும்மா. வர்ற 20 ஆம் தேதி நிச்சய தார்த்தம் வைச்சுக்கலாம்னு சொல்லிட்டாங்க. நான் வர கொஞ்சம் லேட்டாகும். வீட்டைப் பூட்டிகிட்டு படுத்துடுங்க. கேஸை மூடியிருக்கியான்னு பார்த்துட்டு படுத்துக்க. காலம் கெட்டு கிடக்கு."

சந்தோஷமும் பரபரப்பும் பொங்கி வழிந்த குரல். கடைசி வரை பிள்ளைகளின் பத்திரத்திற்கு அக்கறைப்பட்ட குரல். துக்கம் பந்தாய் தொண்டையை அடைத்தது.

ஒவ்வொரு சேலையாய்ப் பிரித்துப் பெட்டியில் அடுக்கத் தொடங்கினாள். அழுத்தமான நீலம், வெளிர் நீலம், பிரில் இங்க் நீலம்... வகை வகையான நீலங்கள். "ஆமாண்டி! நான் நீலப்பிசாசுதான்" என்பாள் அம்மா, சிரித்துக் கொண்டே. அன்று கூட நீலக்கலர் தான். அழுத்தமான நீலத்தில் சிவப்புக் கரையிட்ட பட்டுப்புடவை. தெரிந்தும் தெரியாமல் மெல்லிதாய் ஒரு பொட்டு. தூக்கிப் போட்ட கொண்டையுடன், தோளில் நீண்டு தொங்கும் பையுடன், அவள் கன்னங்களில் தட்டி விடை பெற்றுக் கொண்டு, செருப்பு சப்தமிட போனவள்தான். திரும்பி வந்தது - சிதைந்து போன அவள் கைப்பை மட்டுந்தான். கடைசி நேரத்தில் கூட அவள் கையைப் பிடித்துக் கொண்டு, சிரமப்பட்டு புன்னகைத்து, "குட்டிம்மா! தைரியமா இருக்கணும்மா" அம்மா! அம்மா! உள்ளுக்குள் ஒரு கேவல் எழுந்தது.

அம்மாவின் கடைசி மூச்சு பிரிந்த பொழுதே, காயத்திரியின் உள்ளுக்குள் ஏதோ உறைந்துவிட்டது. லேசாகத் திறந்த வாய், நிலைத்து நின்று விட்ட கண்கள், அப்படியே உறைந்து விட்ட புன்னகை -

அம்மா இனி வரமாட்டாள். அவள் தோளில் கைகளை மாலையாக்கிக் கொண்டு, கதை பேச காத்திருக்க மாட்டாள். முறுக்கும் குலோப்ஜாமூனும் செய்து, பாத்திரத்தில் அடுக்கிக் கொண்டு, அவள் வரவுக்காக உள்ளும் வெளியுமாக அலையமாட்டாள். "குட்டிம்மா... ஜாக்கிரதை! போனவுடனே லெட்டர் போடு" என்று கவலையுடன் கையசைத்து விடை கொடுக்கமாட்டாள். அப்பா போன





கவலையே தெரியாமல், தாய்க்குத் தாயாய், தந்தைக்குத் தந்தையாய் நின்று வளர்ந்த அம்மா இனி வரவே மாட்டாள். அது ஒன்றுதான் நிஜம்.

"அக்கா... அக்கா," உள்ளிருந்து ஜெயந்தி கூப்பிடுவது கேட்டது. ஆயா சத்துடன் பெட்டியைப் பூட்டி விட்டு எழுந்தாள். வாசல்புறத்தில் ஜெயந்தி நின்றிருந்தாள். 16 வயதிற்கு வளர்ச்சி சற்று அதிகந்தான். இரு பின்னல் களையும் மார்பின் மேல் போட்டுக் கொண்டு,

"அக்கா! சாமான் எடுத்துட்டுப் போக வண்டி வந்துருக்கு" என்றாள்.

அவளுடைய இயல்பான துள்ள லும் சுறுசுறுப்பும் காணாமல் போயிருந்தது. ஜெயந்திக்கு அந்த வீட்டில் சலுகைகள் அதிகம். அம்மா வின் செல்லப் பெண் அவள். இராத் திரியில் அம்மாவின் மேல் கால் போட்டுக் கொண்டு, அவளைக் கட்டிக் கொண்டுதான் தூங்குவாள்.

அம்மா இறந்து ஒரு வாரம் கழித்து, இரவு நேரத்தில், மெல்ல, தெரியாமல் போடுவது போல், கால்களைத் தூக்கி, காயத்திரி மேல் போட்டுக் கொண்டாள். மௌனமாய், இருளில் தடவி, அவளுடைய ஈரம் படிந்த கன்னங்களை, காயத்திரி முத்தமிட்ட பொழுது, "அக்கா... அக்கா" என்று கேவிக் கொண்டே, அவளைக் கட்டிக் கொண்டாள். மெல்ல தட்டிக் கொடுத்து, சமாதானப் படுத்திய பொழுது, அவளுக்கும் தனக்கும் மூன்று வயதுதான் வித்தியாசமா என்று காயத்திரிக்குச் சந்தேகம் வந்தது.

"அக்கா... சாமான்லாம் எடுத்துட்டுப் போக வண்டி வந்துருக்கு."

"ம்," என்று காயத்திரி வாசலை நோக்கி நகர்ந்தாள். ஹாலில் பெட்டி பெட்டியாய் சாமான்கள் அடுக்கி நின்றன. வாசலில் நின் றிருந்த டெம்போ வேனை நெருங்கி, "எல்லா சாமானும் பேக் பண்ணி ஹாலில் இருக்கு. பார்த்து எடுத்துட்டுப் போங்க. கண்ணாடி சாமான் ஜாஸ்தி," என்றாள். "சரிம்மா," என்று வேனிலிருந்து குதித்தவன், நிமிடத்தில் தன் ஆட்களைத் துரிதப்படுத்தினான். "ஹேய்! அத தூக்கும்மா முதல்ல," "மெள்ள, மெள்ள... என்னா அவசரம் உனக்கு," என்ற சத்தங் களுடன் அவர்கள் சாமான்களை அடுக்கத் தொடங்கினார்கள்.

மிகுந்த சத்தத்தோடு முதல் லோடு சாமானை ஏற்றிக் கொண்டு வேன் நகர்ந்தது. வழி காட்டுவதற்காக ஜெயந்தி ஏறிக் கொண் டான். அவர்களோடு ஜெயந்தியைப் பார்த்த பொழுது கவலை வந்தது. எவ்வளவோ கேட்டும் சித்தி தன் பையனை அனுப்ப மறுத்து விட்டாள்.

"இங்க பாரு. அவனுக்கு +2 பரிட்சை நெருங்குது. இப்ப போய் 'அங்க இங்கன்னு வெயில்ல அலையணுமா? நான்தான் அன்னைக்கே சொல்லிட்டேனே. ஏதோ அக்கா பொண்ணுங்கற ஒரே விஷயத்துக்காக என் மாடிப் போர்ஷன்ல தங்கவிடறேன். மத்தபடி எங்கிட்ட நீ எதையும் எதிர்பார்க்க முடியாது. வேலை தேடறது, ஜெயந்தியை படிக்க வைக்கறது எல்லாம் உன் சாமர்த் தியம்,"

சித்தி கறாராக சொல்லி விட்டாள். சித்தி எப்பொழுதுமே பண விஷயத்தில் கறார்தான். வீட்டை விற்பதற்கு உதவி செய் தாலும், தன் பங்குப் பணத்தை விட சற்று அதிகமாக வசூலிக்கவும் அவள் தவறவில்லை. சரி, அவளைச் சொல்லி குற்றமென்ன? அவள் கஷ்டம் அவளுக்கு! ஏதோ இந்த அளவிற்காவது ஒரு துணை என்ற பெயரில் நிற்கிறாளே! உறவுகள் - எதிலும் எப்பொழு தும் லாப நஷ்ட கணக்குப் பார்க்கும் சாமர்த் தியக்காரர்கள். ஆறுதலாய் ஒரு வார்த்தை, அன்பாய் ஒரு அரவணைப்பு - ஹூம் - எங்க நம் தலையில் விழுந்துவிடுமோ என்று பட்டும் படாமல் நின்று விட்டு விலகி ஓடிய மனிதர் கள். நினைவுகள் கசந்தன.

ஆயிற்று. டெம்போ வேன் கடைசி ட்ரிப்புக்காக வந்து விட்டது. ஆட்கள் சிரமப் பட்டு அம்மிக் குழவியை நகர்த்திய பொழுது காயத்திரிக்கு மனது வலித்தது. தாத்தா காலத் துப் பழைய வீடு அது. அம்மா அதை வெகு சில மாற்றங்களுடன் வைத்திருந்தாள். அவள் சிறுவயதில் ஓடிப் பிடித்து விளையாடிய நீண்ட தாழ்வாரம், மழைக்காலத்தில் ஒழுகும் சமையலறை, அம்மா பூஜை அறையில் பெயின்டில் வரைந்திருந்த கோலம் - அதன் ஒவ்வொரு மூலையிலும் நினைவுகள் புதைந் திருந்தன. அதை நிரந்தரமாகப் பிரியப் போகி றோம் என்ற நிஜம் நிதானமாய் தாக்கியது.



## புதுமைக்கோலம்!

வெள்ளை மற்றும் பல நிறங்களில் மெழுகுவர்த்தி களை வாங்கி, திரியை கொளுத்திக் கொண்டு, ஒரு பாத்திரத்தில் தண்ணீர் எடுத்துக் கொண்டு, அதற்கு நேராக எரியும் மெழுகுவர்த்தியைச் சாய்த்துப் பிடித்தால், சொட்டுச் சொட்டாக, கலர் கலராக மெழுகு உருகி தண்ணீரில் விழும். அவை அழகான முத்துக்கள் போல் இருக்கும். அவை களை எடுத்து வைத்துக் கொண்டு தாம்பாளத்திலோ அல்லது தரையிலோ கோலம் போட்டு அதில் இந்த முத்துக்களை வைத்து அலங்காரம் செய்து, நடுவில் ஒரு சிறிய வெங்கல விளக்கோ, அல்லது அகல் விளக்கோ ஏற்றி வைத்தால் மிகவும் அழகாக இருக்கும். முத்துக்களைப் பத்திரப்படுத்தினால் மீண்டும் பயன்படுத்தலாம்.

— ஆர். நிரஞ்சனி



# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990

பதிவு அலுவலகம் : 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 600 002.

கிளை அலுவலகம் : 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை - 600 015. போன் : 459569



கந்தகோட்டம்
ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி

### பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 3 மாதம் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு ★ |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%** 5 வருடங்கள் ரூ. 50,000/- அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும்தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### குழந்தைகள் கல்வி நலத்திட்டம்

L.K.G. முதல் கல்லூரி தொடக்கம் வரை வைப்புத் தொகை ரூ. 5,100/- 3-ஆம் ஆண்டு நிறைவிலிருந்து தொடர்ந்து 12 ஆண்டுகள் ரூ. 500/- பெறலாம். திட்ட டெபாசிட் காலத்திலிருந்து 16, 17-வது ஆண்டுகளில் தலா ரூ. 1,000/- வீதமும், 18-ம் ஆண்டு துவக்கத்தில் ரூ. 75,000/-ம் வழங்கப்படும். நலத்திட்டத்தின் 5% மாணவர்களுக்கு +2 அரசுத் தேர்வு மதிப்பெண் அடிப்படையில் ரூ. 25,000/- பரிசாக ஒவ்வொருவருக்கும் நிதி நிறுவனம் வழங்கும்

### கனகதாரா டிபாசிட்

ரூ. **50,000/-**
முதலீடு செய்வீர்
10 ஆம் ஆண்டு முடிவில்
ரூ. **50,000/-** பெறுவீர்
அடுத்த 20 ஆம் ஆண்டு
முடிவில்
ரூ. **1 கோடி** பெறுவீர்

### காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும்தொகை | 10-ம் ஆண்டு நீங்கள் பெறும்தொகை | 15-ம் ஆண்டு பெறும்தொகை |
|---|---|---|---|
| Rs. 6,320 | Rs. 6,000 | Rs. 6,000 | Rs. 56,320 |

### செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs. 7,500 | 15 Yrs. | Rs. 1,25,000 |
| Rs. 9,000 | 15 Yrs. | Rs. 1,50,000 |

### பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ. 100/- | 25 Yrs. | Rs. 3,00,000 |

### வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ. **3,450/-** செலுத்துவீர்.
**252** மாதங்கள் நிறைவில்
ரூ. **2** லட்சம் பெறுவீர்.

### மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்.

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs. 1,000 | Rs. 1,184 | Rs. 1,430 | Rs. 2,000 | Rs. 2,535 |

பென்ஷனர் நலத்திட்டம் **20% P.a.** ★
ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு
வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும்
அறக்கட்டளை பயன் பெறலாம்.

சேமிப்பு திட்டம் **10% P.a.**
H.O. Friday Holiday
B.O. : Tuesday Holiday
பங்குதாரர்களுக்கு மட்டும்

தங்க நகை கடன்
**Rs. 3,000 PER 10 GRAM**
வீதிகளின் பேரில் கடன் வழங்கப்படும்.
(உச்சவரம்பில்லை)



சேர்மன் :
P. பாலசுப்பிரமணியம், B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
ஸ்ரீ கந்தகோட்டம்,
சென்னை-600 003.

இயக்குநர்கள் குழு

R. விவேகானந்தன் B.Com.,
V. சண்முகவடிவு B.A.,
A. சுப்பிரமணியன்
V. விஜயகோபால் B.Com., D.C.P.
M. ராஜேந்திரன்
P. ஏகாம்பரம்

பாதுகாப்பு பெட்டகம் குறைந்த வாடகைக்கு கிடைக்கும்.

# பார்வைக்கு பளிச்சுனு, சுவைக்கு பிரமாதம்...



## இது அம்மாவா, சனோலாவா ?



அரவணைத்து நிற்கும் கரமா அல்லது
ஊட்டமான இயற்கை குணம் நிறைந்த
சூரியகாந்தி எண்ணெயா!

தூய்மையான, சுத்திகரிக்கப்பட்ட சனோலாவில் சமைக்கப்பட்ட உணவு இந்த இரண்டின் சங்கமம்தான். எனவே, 20 ஆண்டுகளாக பல்லாயிரம் குடும்பங்களின் முதல் தேர்வு சனோலாதான் என்பதில் ஆச்சரியம் இல்லை.

**பல அளவுகளில் கிடைக்கிறது.**






தயாரித்து மார்க்கெட் செய்வது :
**தமிழ்நாடு அக்ரோ இண்டஸ்டிரீஸ்**
**கார்ப்பரேஷன் லிமிடெட்**
(தமிழ்நாடு அரசு நிறுவனம்)
அக்ரோ ஹவுஸ்
திரு.வி.க. இண்டஸ்டிரியல்
எஸ்டேட்
சென்னை – 600 032

**சுவைதான் அன்பு. சுவைதான் வாழ்க்கை.**

DIPR/889/DIS/94

## ஒரு வாசகியின் குரல்...



ஆபாசப் பாடல்களைப் பற்றி திருமதி மஞ்சுளா ரமேஷ் எழுதி வருகிறார். சந்தோஷம். அதுவும் இந்தக்கால குழந்தைகளுக்கு, தமிழ் நாட்டை விட்டு பிற மாநிலங்களில் வசிக்கும் என் போன்றவர்களின் குழந்தைகளுக்கு அந்தந்த பாஷைகளும் தெரிந்து இருக்கும். என் பெண்களுக்கு ஹிந்தி, கன்னடம் நன்றாக பேச படிக்கத் தெரியும். கன்னடமாவது நானும் மறப்பேன் பேசுவேன். ஹிந்தி ரொம்ப. அதில் வரும் பாடல்களுக்குக் கூட அவர்களுக்கு அர்த்தம் தெரியும். நான் கேட்டால் சிலது சொல்வார்கள். சிலதைக் கேட்டால் சிரித்துக் கொள்வார்கள்.

அதே போல, இந்த நாப்கின் சமாசாரம், மாலா-டி போன்ற கருத்தடை மாத்திரைகள், நிரோத், மற்றும் ஷூட்ஸ். இதெல்லாம் பற்றி விலாவாரியாக காண்பிக்கிறார்களே அதைப் பற்றி நீங்கள் கண்டித்து எழுதக் கூடாதா? அதிலும் இந்த நாப்கின்களைப் பற்றிச் சொல்லும் போது விலாவாரியாக அதில் ப்ளு இங்கை ஊற்றி (அம்மாடி பிழைத்தோம்) விளக்கிறார்களே அம்மா! மாமனார், கணவர், கொழுந்தர்கள், பிள்ளைகள் பெரிய வயது பிள்ளைகளும் சரி 12, 15 வயது ஆண் பிள்ளைகளும் சரி இவர்களுடன் பார்க்கும் போது கூச்சமாகிறோம். கருத்தடை பிரசாரமுறை ரொம்பவும் அநியாயம். இது பற்றி அவர்கள் சொல்வது மணமானவர்களுக்கு மட்டும்தான். ஆனால், கணவன் மனைவியைத் தவிர காலேஜ் பையன்களுக்கும் பெண்களுக்கும்தான் இது அதிகம் உபயோகப்படுகிறது போல் உள்ளது. எங்கு பார்த்தாலும் சிறிய வயது பையன்களும் பெண்களும் ஜோடி ஜோடியாய், 20 வருடங்களுக்கு முன் எல்லாமே தேவலை. அப்போதெல்லாம் இதைப் பற்றி பேசிக் கொள்ளவே வெட்கப்பட்டோம். இப்போது பட்டவர்த்தனமாக டீ.வி.யில் காண்பிக்கிறார்கள்.

தவிர, நாத்தனாருக்கு நாப்கின் உபயோகிப்பது எப்படி என்று சொல்லித் தருகிறாள் அண்ணி, சகிக்கலை. இதையெல்லாம் நுழைந்தாலே நாடு உருப்படும். வீதியில் உலாவும் ரௌடிகளுக்கு இது ரொம்பவும் சலுகை கொடுத்தாற் போல இருக்கிறது. இதைப் பற்றியும் நீங்கள் எழுதினால் நல்லது. இதை அவர்கள் விளம்பரம் பண்ண வேண்டும் என்றால் வீட்டுக்கு வீடு வரட்டும். வீட்டில் இருக்கும் பெண்மணிகளிடம் சொல்லட்டும். இப்படி டீ.வி.யில் விளம்பரப்படுத்த வேண்டாம். நன்றாக இல்லை.

— பவானி ராம்தாஸ்

இனி எப்பொழுது இந்த 'சில்'லென்ற தரையில் கன்னம் வைத்துப் படுக்கப் போகிறோம் என்று ஏக்கம் வந்தது. எனினும்... எனினும் வீட்டை விற்பதைத் தவிர வேறு வழியில்லை. உறவில்லாத உறவாய் உருவமில்லாத அருவமாய் நின்று அந்த வீடு தனக்கு உதவி புரிவது போல் காயத்திரிக்குப் பிரமை தட்டியது.

வேன் டிரைவர் கிளம்பலாம் என்பது போல் கடைசி தடவையாக 'ஹாரன்' அடித்தான். காயத்திரி எழுந்து, பெற்றோரின் திருமண புகைப்படத்தையும், அம்மாவின் புடவைகள் அடங்கிய பெட்டியையும் தூக்கிக் கொண்டாள். கடைசியாக ஒரு முறை அந்த வீட்டைப் பார்த்த பொழுது, அம்மா வாசலில் நின்று கையசைப்பது போல் தோன்றியது. கண்களில் நீர் நிரம்பியது. மௌனமாய் திரும்பிய பொழுது அவள் கைகளை எட்டி ஒரு தளிர் கரம் பற்றியிருந்தது.

"அக்கா! இதை விட்டுட்டீங்களே!" என்றபடி, தன் சின்னஞ்சிறு கைகளில் ரோஜா செடியுடன், எதிர் வீட்டு வாண்டு நின்றிருந்தது. அவள் ஆசையுடன் நீர்விட்டு வளர்த்தது. இதை எப்படி மறந்து போனாள்? பெட்டிகளைக் கீழே வைத்துவிட்டு, மண்டியிட்டு கைநீட்டினாள். அவள் விழிகளில் நிறைந்த நீர் கன்னங்களில் வழிந்தோடியது. என்ன நினைத்ததோ குழந்தை உள்ளே பார்த்துக் கூவியது.

"அம்மா, அக்காவாலே தூக்க முடியலைம்மா. ரொம்ப அழறாங்க. நான் போய் பெட்டியெல்லாம் தூக்கி கொடுத்துட்டு சீக்கிரம் வந்துடறேன்மா."

ரொம்பவும் சமர்த்தாய் பேசிய குழந்தை ஏன் அக்கா தன் கையைப் பிடித்துக் கொண்டு அழுகிறாள் என்று ஆச்சரியமாய் பார்த்தது. 'இது என்ன கூத்து?' என்று வேன் டிரைவர் எரிச்சலுடன் ஹாரனை அழுத்தினான். காயத்திரி தலை கவிழ்ந்து, சத்தமில்லாமல் அழுது கொண்டிருந்தாள். வெகு காலத்திற்குப் பிறகு அவளுக்கு அழுவதற்கு அனுதாபமாய் ஒரு மடி கிடைத்திருக்கிறது.

# குழந்தை வளர்ப்பில் குற்ற உணர்வு இருக்கிறதா?

கிரண் பெற்றோர்களுக்கு அடங்குவதேயில்லை. அவர்களும் எத்தனை வழிகளில் அவனை திருத்த முடியுமோ முயற்சி பண்ணிப் பார்த்து விட்டார்கள். கிரண் குழந்தையாக இருந்த பொழுது கண்ட கனவுகள் எல்லாம் நிராசையாகப் போய் விட்ட மாதிரி உணர்வு. நிறைய பெற்றோர்கள், குழந்தைகள் அவர்கள் எதிர்பார்த்தது போல இல்லாத பொழுது, "எனக்குக் குழந்தை வளர்க்கத் தெரியலையோ என்னவோ? அல்லது எங்கே தப்பு நடந்தது?" என்று எண்ணத் தொடங்குகிறார்கள். தங்களின் குழந்தைகளுக்கு அவர்களால் சிறந்த தைக் கொடுக்க வேண்டும் என்று எல்லாப் பெற்றோர்களும் நினைப்ப துண்டு. சில சமயங்களில் இந்த முழுமையைத் தேடி அது மாறிப் போய் குற்ற உணர்வு மிஞ்சுவதுண்டு.



படம் : ராஜு

"நாங்கள் கஷ்டப்பட்டு அவர்களை அக்கறையாக கவனிக்கிறோம் என்பதனைக் குழந்தைகளுக்குப் புரிய வைத்தும் பிரயோசனமில்லை. நாங்கள் சொல்வதைக் கேட்பதில்லை" - இது நிறைய பெற்றோர்களின் குற்றச்சாட்டுக்கள்.

எல்லாப் பெற்றோர்களும் ஒருமுறையாவது தவறுவது உண்டு. குழந்தைகளை வளர்ப்பது என்பது ஒவ்வொரு பொழுதும் கவனிக்க வேண்டிய விஷயம். நாள்தோறும், நாள்தோறும் உடனடியாக முடிவு எடுத்து வளர்க்க வேண்டிய விஷயம்.

குழந்தைகளை வளர்த்தல் என்பது அத்தனை கஷ்டமல்ல. கொஞ்சம் எட்டி நின்று கவனித்துப் பாருங்கள். குழந்தை பிறந்தவுடன் "ஆ என்ன அழகு" என்பவர்களும் "இரு இரு இரண்டு வயசாகட்டும்

அவன் குறும்பைப் பாரு" என்பவர்களும் "ஸ்கூலுக்குப் போகும் பொழுது இருக்கற லூட்டி இருக்கிறதே அதைப் பாரு," "பதினாறு வயசிலே என்ன தலைவலி தெரியுமா" என்று பெற்றோர்களைப் பயமுறுத்துகிறார்கள்.

"இங்கே பாரம்மா, விளையாட விட்டா எங்களுக்குத் தெரியாமே 'சூப்பர்மேன்' பொம்மையைத் தூக்கிட்டுப் போறான். பார்த்து வளர்த்து. இல்லாட்டி பெரிய திருடனாயிடுவான்." ஒரு சந்தர்ப்பத்தை வைத்து முத்திரை குத்தும் உறவினர்கள், பக்கத்து வீட்டுக்காரர்கள். அறியாத வயதில் செய்த குழந்தையின் நடத்தை, சில சமயங்களில் உங்கள் குற்ற உணர்வினைத் தூண்டும்.

குழந்தை வளர வளர சில விஷமத்தனங்கள் இருக்கலாம். அதற்காக பின்னாளில் அக்குழந்தையின் நடத்தை இதுதான் என்று தீர்மானிப்பதும் தவறு. குழந்தையின் நிகழ்காலத்தைப் பற்றி நினைக்க வேண்டும் பெற்றோர்கள்.

சில சமயங்களில் குழந்தைகள் பெற்றோர்களை வெறுக்கக்கூடும். அந்தச் சமயங்களில் உணர்ச்சி வசப்படாமல் நகைச்சுவை உணர்ச்சியுடன் குழந்தைகளின் தவற்றினைச் சுட்டிக் காட்டினால் சூழ்நிலை இறுக்கமடையாது. தவறும் மறைந்து போகும்.

முதல் முறையாக இந்தியாவிலேயே 'பவுடர் கோட்டிங்' முறையில் பெயிண்ட் செய்யப்படும் ஒரே மோட்டார் 'போலார் ஹைபவர் லோ-வோல்டேஜ் கிரைண்டர் மோட்டார்'தான். பவுடர் கோட்டிங் என்பதால் இந்த மோட்டார் துருப்பிடிக்காது; கீறல் விழாது. திரும்பவும் பெயிண்ட் செய்ய வேண்டிய அவசியம் இல்லை.

## உங்கள் குழந்தைக்கு சந்தோஷத்தைக் கற்றுக் கொடுங்கள்!

சந்தோஷமாக இருப்பதைக் கற்றுக் கொடுக்க வேண்டும். சந்தோஷமாக இருக்கும் மூடு வரும்; போகும். சந்தோஷமாக இருக்கும் விசேட குணத்தை நிரந்தரமாக்க முடியும். சில குழந்தைகள் காலையில் எழுந்திருக்கும் பொழுதே அழுமூஞ்சித்தனமாக எழுந்து எதற்கு எடுத்தாலும் சிணுங்கிக் கொண்டே இருக்கும். இதற்கு நேர்மாறாகக் காலையிலே புன்சிரிப்புடன் எழுந்து அடிபட்டால் கூடச் சிரித்துக் கொண்டே எழும் குழந்தைகள் உண்டு. இது ஒரு திறமைதான். இந்தத் திறமையைப் பெற்றோர்கள் கற்றுக் கொடுக்க முடியும்.

சின்னச் சின்ன விஷயங்களில் அவர்களே முடிவு எடுக்கச் சுதந்திரம் கொடுக்க வேண்டும். சந்தோஷமாக இருப்பது ஓரளவுக்குக்



**உங்கள் வீட்டு சமையல் ரூமில் சூடான பாத்திரம் இறக்கும் பிடி துணிகள், மழைக் காலங்களில் காயவில்லையா? கவலை வேண்டாம். இறக்கி வைத்த சூடான குக்கர் மீது விரித் துப் போடுங்கள். நொடியில் நன்றாக உலர்ந்து விடும்.**

**- பாலா**

குழந்தையின் பொறுப்பு என்பதனையும் உணர வைக்க வேண்டும்.

குழந்தையின் மற்ற உறவுகள் குழந்தைக்கு சந்தோஷம் தருகிறதா என்பதையும் கவனிக்க வேண்டும். சித்தப்பா வருகிறார் என்றாலே சுரேஷ் முகம் சுளிப்பான். அனாவசியத்திற்குச் சீண்டலும், கேலியும் தொட்டாற்சுருங்கியான சுரேஷுக்குப் பிடிக்கவில்லை. அன்று காலையிலிருந்தே அம்மாவுடன் சண்டைப் போட்டுக் கொண்டிருந்தாள் அனிதா. பேசக் கூடவில்லை. அன்று மாலை யில் அனிதாவின் தோழி கிதா வந்த பொழுது அம்மா தந்த வரவேற்பும், உபசரிப்பும் அம்மாவைப் பற்றிய மதிப்பீட்டை உயர்த்தியது. கோபத்தை மறந்து வலிய பேசி தன் மகிழ்ச்சியினைத் தெரிவித்துக் கொண்டாள்.

போதுமான வசதிகள் குழந்தையின் சந்தோஷத்தை அதிகரிக்கும். அளவுக்கு அதிகமான வசதிகள் இருந்தால், குழந்தைகள் பொருளாதாரம் ஒன்றுதான் சந்தோஷத்தைத் தரும் என்ற முடிவிற்கு வருகிறார்கள். அதற்காகக் குழந்தைகளுக்குப் பரிசே கொடுக்கக்கூடாது என்பதல்ல. அடிக்கடி பொருளாகக் குவித்தால் குழந்தையின் ஆக்கபூர்வமான திறமைகள் குறைந்து விடும்.

குழந்தையின் மாறுபட்ட ஆர்வங்களை ஊக்குவிக்க வேண்டும். குழந்தைக்கு டிராயிங்கில் அளவு கடந்த ஆர்வம் இருக்கும். பரிசுகள் பல பெற்றாலும் பெற்றோர்கள் "இதிலே பாதி இன்ட்ரெஸ்ட் படிப்பிலே இருந்தாலே போதும். நீ தேறிடுவே" என்று சொல்லிச் சொல்லியே திறமைகளைக் குறைத்து விடுகின்றனர்.

வாழ்க்கையிலே சந்தோஷம் மட்டுமே

எப்பொழுதும் வருவதில்லை. யதார்த்த நிலைகள் மற்றும் கஷ்டமான நேரங்களையும் எப்படிச் சமாளிக்க வேண்டும் என்பதனையும் பெற்றோர்கள் உணர்த்த வேண்டும்.

குழந்தைகள் ஒரு வயதாகும் பொழுதே உணர்ச்சிகளைக் கற்றுக் கொள்கிறார்கள். சந்தோஷமான சூழ்நிலை வீட்டில் இருந்தால் தான் குழந்தை சந்தோஷமாக வளர முடியும். இந்த உலகம் கோபமானதா, சந்தோஷமானதா, பாதுகாப்பான இடமா அல்லது போராட்டத்திற்கு உரிய இடமா எனப் பேச ஆரம்பிக்கும் முன்னரே, மொழியைக் கற்றுக் கொள்ளும் முன்னரே குழந்தைக்குப் புரிய ஆரம்பிக்கிறது. அதனால் பெற்றவர்கள் சந்தோஷம் எது என்பதனையும் அவர்கள் சந்தோஷம் என்று எதனை மதிக்கிறார்கள் என்பதனையும் பார்க்க வேண்டும். குழந்தைகளுக்கு உண்மையான, யதார்த்தமான வாழ்க்கையை வாழ சிறு வயதிலிருந்தே கற்றுக் கொடுக்க வேண்டும். அதிக செல்லம், கேட்டதெல்லாம் கொடுப்பது இதெல்லாம் கூடாது.

எல்லாவற்றிற்கும் மேலாக ஓரளவு குழந்தைகள் புரிய ஆரம்பிக்கும் வயதை அடைந்தவுடன் அவர்களுடன் நண்பர்கள் போலப் பழகி, விவாதித்து, உரையாடுவது மிகச் சிறப்பான முறை. இதுவரை அப்படி இல்லாத பெற்றோர்கள் இதைச் சிறிது சிறிதாகக் கடைபிடித்துப் பாருங்கள். குழந்தைகளிடையே பெரும் மாற்றத்தைக் காணலாம்.

- பூங்கோதை குருதாஸ்.

---

## குழந்தைகளின் தூக்கம்

குழந்தைகளின் தூக்கம் பற்றிய எண்ணமும், சந்தேகங்களும் நம்மில் பலருக்கு ஏற்படுகின்றது. குழந்தையின் தூக்கம், அதன் வயது விளையாட்டு ஆகியவைகளைப் பொறுத்தே அமையும். பிறந்த குழந்தை ஒரு நாளில் 20 அல்லது 21 மணி நேரம் தூங்கும். ஆனால் மாதம் ஏற ஏற அதன் தூங்கும் நேரம் குறைந்து கொண்டே வருகிறது. ஆறு வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளின் பகல் உறக்கம் பெரும்பாலும் குறைந்து விடுகிறது.



சில தாய்மார்கள் தங்களின் சௌகரியத்துக்காக எப்பொழுது வேண்டுமானாலும், சில சமயங்களில் அடித்தும், மிரட்டியும் கூட தூங்க வைக்கிறார்கள். இது சரியல்ல. அதனைத் தாய்மார்கள் புரிந்து கொள்ளாமல், குழந்தையை இழுத்து குப்புறப் போட்டு, முதுகிலே 'பட்பட்' என்று தட்டியும், காற்றுப் புகாத தூளியிலிட்டு ஆட்டியும் தூங்க வைத்துத் தோல்வியுறுகிறார்கள்.

சில குடும்பங்களில் குழந்தை தூங்கும் போது, சிறு சப்தம் எழுந்தாலும் 'உஸ்' ஸென்று வாயில் விரலை வைத்து எச்சரிக்கை விடுகிறார்கள். பல தொழிற்சாலைகளின் பக்கத்திலும், கட்டிட வேலை நடக்கும் இடங்களிலும், போக்குவரத்து அதிகமாக உள்ள பகுதிகளிலும் பிறக்கும் குழந்தைகள் தூங்குவதே இல்லையா என்ன? அன்றாட ஓசைகளுக்கிடையே உறங்க குழந்தை தானாகவே கற்றுக் கொண்டு விடும்.

குழந்தையின் நல்ல தூக்கத்திற்கு அதன் மனநிலை முக்கிய காரணமாக அமைகிறது. தாயோ, தந்தையோ பக்கத்தில் அமர்ந்து லேசாக தட்டிக் கொடுக்க குழந்தை சந்தோஷமாக, நிம்மதியாக உறங்குகிறது.

கைக் குழந்தையை எடுத்துக் கொண்டு கல்யாணம், சினிமா, மார்க்கெட் போன்ற இடங்களுக்குச் செல்லக் கூடாது. அங்குள்ள புழுக்கமும், புழுதியும் குழந்தையின் நலத்தைக் கெடுக்கும். சினிமாவில் தோன்றும் திடீர் சப்தங்களும், அலறல்களும் ஏன் கல்யாண வீட்டில் திடீரென கொட்டப்படும் மேளச் சத்தமும் குழந்தைக்கு மிரளவை தோற்றுவிக்கும். தூங்கும் போது அதை நினைத்து குழந்தை அடிக்கடி அழத் துவங்கும். எனவே குழந்தைகளுடன் அந்த மாதிரியான இடங்களுக்குச் செல்வதை கூடுமானவரை தாய்மார்கள் கைவிடுதல் நல்லது.

- கீதாஞ்சலி.



எமது வாடிக்கையாளர்கள் தற்பெருமை உடையவர்கள் தாம் ஆனால், எது அவர்களுக்குப் பொருத்தமானதென்று நன்கு அறிவார்கள். வேறு விதமான ஹேர் ஸ்டைலில் தலை சீவினால் கலைத்து விடுவார்கள். புத்தாடை அணிவியுங்கள் களைந்து விடுவார்கள். ஏனெனில் அவர்கள் வளரும் குழந்தைகள். மேலும் உறுதியான அடியெடுத்து வளரப் போகிறார்கள் போனி மீலின் உதவியுடன். இது சத்தான இயற்கை உணவுப் பொருட்களைக் கொண்டு சிறந்த தொழில் நுட்ப உதவியுடன் உணவுப் பொருட்களின் ஊட்டச் சத்துக் குறைந்துவிடாமல் இயற்கை மணம் கமழும் விதத்தில் தயாரிக்கப் படுகிறது. போனி மீல். இதன் சுவை உன்னதமானது மட்டுமல்ல தனது வளர்ச்சிக்குத் தேவையானதும் கூட என்று குழந்தைகள் நன்கு அறிவார்கள். எனவே நீங்கள் போனி மீல் பாக்கெட்டை கையில் எடுக்கையில் உங்கள் குழந்தை ஒத்துக் கொள்ளும் உங்களின் முடிவு சரியானது. இந்த ஒரு முறை மட்டும்.

**தனது தேவையை அறிந்த விவேகமான குழந்தைகளுக்கு.**

Bonny
MEAL




**"எனது புன்னகைக்கு இந்தக்கண்ணாடி பொருத்தமானது அல்ல. அப்படித்தானே?"**




Hindustan Foods Ltd., Goa.

**உங்களின் கவனத்திற்கு:-** தாய்ப்பாலே குழந்தைகட்கு சிறந்தது. குழந்தைகளின் 4 ம் மாதம் முதல் தாய்ப்பாலோடு தானிய உணவுகளை வழங்குங்கள்.

# மொபட் வண்டி வருது

பஸ், ஆட்டோ இவற்றின் ஓட்டுனர்களாகக் கூட சில பெண்கள் இருக்கத் தொடங்கி விட்ட காலம் இது. என்றாலும் நடுத்தரக் குடும்பங்களைச் சேர்ந்த பெண்கள் ஸ்கூட்டர், மொபெட் போன்ற இரு சக்கர வாகனங்களை ஓட்டிக் கொண்டு செல்வது பரவலான விஷயமாகி வருகிறது. அப்படிப்பட்ட சிலர் இங்கே தங்கள் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்கிறார்கள்.

**சுஜாதா சக்ரபாணி :**

"கணவர் அடிக்கடி வாரக் கணக்கில் கூட வெளியூர் சென்று விடுவார். அப்படிப்பட்ட வேலை அவருக்கு. இந்த நிலையில் என் குழந்தைகளை நான் அதிக நேரம் கவனித்துக் கொள்ள வேண்டியது - மனவியல் ரீதியாகவும் - அவசியமாகி விட்டது. இதற்கு மொபெட் உதவுகிறது.

என் பிள்ளைகளை அழைத்துக் கொண்டு பீச்சுக்குக் கூட மொபெட்டில் போய் வருவதுண்டு. 'அம்மாவோடு பாதுகாப்பாக, இழைந்து கொண்டு போகிறோம்' என்ற உணர்வு அவர்கள் முகத்தில் உண்டாக்கும் மகிழ்ச்சியை அனுபவித்தால்தான் புரியும்.

வண்டி வாங்கிய பதினைந்தாவது நாள். "அம்மா இன்னிக்கு என்னை ஸ்கூலிலேயிருந்து உன் மொபெட்டில் கூட்டி வரியா?" என்றான் மகன். ஒத்துக் கொண்டு மாலை அலுவலகம் முடிந்து அவன் பள்ளிக்கூடத்துக்குப் போகும் போது, தெருத் திருப்பத்தில் ஒரு ஆட்டோ என் வண்டியின் மீது மோத, கீழே விழுந்தேன். இடது தோளில் எலும்பு வெடிப்பு ஏற்பட்டு, நாற்பத்தி ஐந்து நாட்கள் அந்தக் கையில் தூளியோடு நடமாடினேன். ரொம்ப அவஸ்தை. தெரிந்தவர்கள் அத்தனை பேரும் "இனிமேல் வண்டியைத் தொடாதே" என்றனர். போதாக் குறைக்கு வண்டியின் பதிவு எண்ணின் கூட்டுத் தொகை '8'. இது ஆகாத எண் என்றனர். புன்னகையோடு அவர்கள் கூறியதை ஒதுக்கி விட்டு, மருத்துவர் கூறிய கெடு முடிந்ததும் அடுத்த நாளே மொபெட்டில் பயணம் சென்றேன்.

முதல் கிக்கிலேயே வண்டி கிளம்பும் போது உண்டாகும் கிக்கே அலாதி தெரியுமா? பொதுவாக போக்குவரத்துப் போலீஸாரும் வண்டியோட்டும் பெண்களிடம் சற்று அதிகக் கருணையோடு நடந்து கொள்கிறார்கள்




• வித்யா

• விசாலாட்சி

என்பதை மறுப்பதற்கில்லை."



• நீதா

<u>திலகவதி சேகர் :</u>

"எங்கள் வங்கியின் நங்காவரம் கிளையில் வேலை செய்து கொண்டிருந்த போது, திருச்சியிலிருந்து அங்கே செல்ல வேண்டுமென்பதற்காக சைக்கிள் கற்றுக் கொண்டேன். அந்தப் பயிற்சி மொபெட் கற்றுக் கொள்ளப் பெரிதும் உதவியது.

சில பெண்கள் "வீட்டுக்காரர் வண்டி ஓட்டாதே என்கிறார்" என்று கூறி இரு சக்கர வாகனங்கள் ஓட்டாமல் இருக்கிறார்கள். எனக்கென்னவோ இவர்களது முட்டுக்கட்டை கணவர் என்பதை விட இவர்கள் மனதிலேயே உள்ள பய உணர்ச்சி என்றுதான் தோன்றுகிறது. என்னைப் பொறுத்தவரை என் கணவர் இந்த விஷயத்தில் நிறைய ஊக்கம் கொடுத்தார்.



• சுஜாதா

ஆனால் ஒன்று. "பஸ்ஸிலே வந்தாலும் ஏதாவது ப்ரேக்-டவுன் ஆகி லேட்டாக வர வாய்ப்பு உண்டு. மொபெட்டில் வரும் போது ஏன் தாமதமாக வேண்டும்?" என்று கவலைப்பட்டுக் கொண்டு கணவர் என் அலுவலகத்துக்கு வந்து பார்த்த நிகழ்ச்சிகள் உண்டு (ஆண்டு இறுதி வேலைப் பளுவினால் நான் சற்று அதிக நேரம் வங்கியில் இருக்க நேரிட்ட சந்தர்ப்பங்கள் அவை).

"வண்டிதான் இருக்கே, அங்கே போயிட்டு வாயேன்", "இதை வாங்கிட்டு வந்துடேன்" என்று கூறுவதால் வண்டியோட்டும் பெண்களின் பொறுப்புக்கள் கூடுவது உண்மைதான். ஆனால் இதில் எனக்கு வருத்தமில்லை."

<u>வித்யா :</u>

"சைக்கிளை விட மொபெட், ஸ்கூட்டர் ஆகியவற்றைக் கற்றுக் கொள்வது சுலபமான விஷயம்தான் - இவை உயரக் குறைவானவை என்பதால். மொபெட் பயன்படுத்துவதால் காலையில் எவ்வளவு நேரம் மிச்சப்படுகிறது தெரியுமா? கொஞ்சம் அதிக நேரம் படிக்க முடிகிறது - அதைவிட முக்கியமாக கொஞ்சம் அதிக நேரம் தூங்க முடிகிறது!

ஒருமுறை என் சித்தப்பா வீட்டிலிருந்து தாத்தா வீட்டுக்கு வண்டியில் சென்றேன். பொதுவாக

• உஷா



• (திலகவதி)

எப்போது வண்டியில் சென்றாலும் துப்பட்டாவை பின்பக்கமாக முடி போட்டுக் கொண்டுதான் செல்வேன். ஆனால் இரண்டு வீடுகளுக்கும் உள்ள தூரம் மிகக் குறைவு என்பதால் அஜாக்கிரதையாக அன்று அப்படிச் செய்யவில்லை. ஷிபான் துப்பட்டா வண்டியில் சிக்கி, என்னுடைய கழுத்தில் சிராய்ப்புக் காயம் ஏற்பட்டு விட்டது. அது சரியாக சுமார் ஒரு வாரம் ஆனது. இது போன்ற வாகனங்களில் செல்லும் போது பெண்கள் தங்களது உடை விஷயங்களில் அதிகக் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது.

வண்டி ஓட்ட வேண்டும் என்று ஆசைப்பட்ட என் அம்மாவுக்கும் நான் கற்றுக் கொடுக்க ஆரம்பித்தேன். கற்றுக் கொள்ளும் போது வண்டி மண்தரையில் சறுக்க, அம்மா கீழே விழ, அவரது வைர மூக்குத்தியின் கல் ஒன்று கீழே விழுந்து எங்கோ தொலைந்து விட்டது. வருத்தப்பட்டாலும், வண்டி கற்றுக் கொள்ளும் முடிவிலிருந்து அம்மா மாறவில்லை."

<u>உஷா :</u>

"பைக் விபத்து ஒன்றில் என் அண்ணாவின் கையில் எலும்புமுறிவு ஏற்பட்டது. என் தம்பியும் வேறொரு சமயம் பைக்கிலிருந்து விழுந்து கையில் க்ராக் உண்டானது. இதனாலெல்லாம் என் அப்பா ரொம்பக் கண்டிப்பாக எனக்கு ஸ்கூட்டர் வாங்கித் தர மறுத்து விட்டார். கல்யாணமான பிறகுதான் என்னால் ஸ்கூட்டர் ஓட்ட முடிந்தது.

பஸ்ஸில் சில சங்கடங்கள் உண்டு. என்றாலும் அதுதான் பெண்களுக்கு அதிகப் பாதுகாப்பானது என்று நினைக்கிறேன். உயரமாக இருப்பதால் நச்சுக் காற்றைச் சற்றுக் குறைவாக சுவாசிக்கலாம்.

ஸேம்-ஸைட் கோல் போடுவதாக நினைத்தாலும் சரி, ஒரு உண்மையைக் கூறியே ஆக வேண்டும். ஒரு பெண் பெரும்பாலும் மோசமான வண்டியோட்டியாகத்தான் இருக்கிறாள். ஆண் இயல்பாக வண்டி ஓட்டுகிறான். ஆனால் பெண் அதிகப்படி எச்சரிக்கை உணர்வோடு ஓட்டுவாள் - மிக வேகமாக ஓட்டுவதைப் போலவே, சில இடங்களில் மிக மெதுவாக வண்டியை ஓட்டுவதும் போக்குவரத்துக்கு நிறைய இடைஞ்சல் செய்யும் என்பதை அவர்கள் புரிந்து கொள்வதில்லை. சாலையில் ஒரு சின்ன சவாலை சந்தித்தால் கூட நெர்வஸாகி விடுகிறார்கள்.

தவிர பெண்களின் உடல்நலத்துக்கு அதிக தூரம் இதுபோன்ற இரு சக்கர வண்டிகளை ஓட்டுவது நல்லதல்ல. இதனால் பல பெண்கள் முதுகுவலியால் அவதிப்படுவது எனக்குத் தெரியும்.

நேரத்தை மிச்சப்படுத்துகிறது என்பது மட்டும்தான் இதுபோன்ற வாகனங்களின் சௌகரியம். ஒரு அவசரத்துக்கு உதவ இது போன்ற வண்டிகளை ஓட்டுவதற்கு நிச்சயம் பெண்கள் பயிற்சி பெற வேண்டும், ஆனால் அவசியமான நேரங்களைத் தவிர, இப்படி ஓட்டுவதை வழக்கமாக்கிக் கொள்ளக் கூடாது என்பது என் கருத்து."

<u>கீதா :</u>

"வண்டியோட்டுவது என்பது பெண்களின் சம உரிமை என்பதை விட சௌகரிய உரிமையென்றுதான் சொல்லணும். பஸ்ஸில் பலரது இடியையும், பார்வைகளையும் தாங்கிக் கொண்டு கூட்டத்தில் சக்கையாகப் பிழியப்பட்டு வெளிவருவதை விட, இதுபோன்ற வாகனங்களில் செல்வது நிச்சயம் சுகமான அனுபவம்தான். ஆனால் சில ஆண்கள் மாணவிகளின் வண்டியைப் பின் தொடருவதும் சங்கடமான விஷயம்தான். என்றாலும் இதைப் பற்றியெல்லாம் பெரிதாகக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கக் கூடாது."

<u>விசாலாட்சி ராமகிருஷ்ணன் :</u>

"என் நாற்பதாவது வயதில்தான் மொபெட் கத்துக்கத் தொடங்கினேன். வீட்டில் கணவர், மாமியார் எல்லோருமே இதற்கு எதிர்ப்பு தெரிவிச்சாங்க. பத்தாவது படிக்கும் என் பையன்தான் எனக்குக் கத்துக் கொடுத்தான். இத்தனைக்கும் எனக்கு சைக்கிள் விடக் கூடத் தெரியாது. நல்லவேளையாக நான் உயரமாக இருப்பதால் பாலன்ஸிங் வராத போது காலைக் கீழே ஊன்றிக் கொள்வது சுலபமாக இருந்தது.

பொதுவாக ஆண்களை விடப் பெண்களுக்கு டென்ஷன் அதிகம் - முக்கியமாகக் காலை வேளைகளில். எனவே காலையில் வண்டியில் அலுவலகத்துக்கு வரும் போது மனதில் டென்ஷன் இல்லாமல் இருக்க தனி முயற்சிகள் எடுத்துக்க வேண்டியிருக்கு. இதனால் ரிஸ்க் வேண்டாமே என்று எப்போதுமே மெதுவாகத்தான் ஓட்டுகிறேன்.

என் பெண்ணுக்கும் மொபெட் ஓட்டக் கற்றுக் கொடுத்து விட்டேன். மொபெட் ஓட்ட நான் எடுத்த முடிவைப் பற்றி எனக்கு எந்த வருத்தமுமில்லை - ஏறிக் கொண்டே வரும் பெட்ரோல் விலையையும், சின்ன ரிப்பேரென்றாலும் மெக்கானிக் கறந்து விடும் அதிகத் தொகையையும் நினைக்கும் வேளைகளைத் தவிர!"

— ஜி. எஸ். எஸ்.

• லதாசிவம்

## பொருள் : ஜவ்வரிசி

• வசந்தி ராமன்



• விமலா ராமமூர்த்தி



• சி.லலிதா



**முதல் பரிசு ரூ.300/-**

# ஜவ்வரிசி பழ அல்வா

***தேவையானபொருட்கள்:***

ஜவ்வரிசி - 1 கோப்பை,
சர்க்கரை - ¾ கோப்பை,
பால் - 2 கோப்பை.
பழச்சாறு - அன்னாசி (அ) சாத்துக்குடி ½ கோப்பை,
அலங்காரத்துக்காக - ஆப்பிள் (அ) திராட்சை (கறுப்பு)
ஏலப்பொடி - 1 ஸ்பூன்
கேசரிப்பவுடர் - 2 சிட்டிகை
வாழைப்பழம் - 2.

***செய்முறை:***

முதலில் ஜவ்வரிசியை சுத்தம் செய்து கொள்ளவும். அடிகனமான பாத்திரத்தில் 2 கோப்பை தண்ணீரும் 2 கோப்பை பாலும் சேர்த்து அடுப்பில் வைத்துப் பால் கொதித்து வரும் பொழுது ஜவ்வரிசியை அதில் கொட்டிக் கிளறவும்.

• சுகந்தா ரவி



ஜவ்வரிசி 3/4 பதம் வெந்ததும் வாழைப்பழத்தை சிறு துண்டுகளாக நறுக்கி மசித்து ஜவ்வரிசியில் போட்டுச் சர்க்கரையைச் சேர்க்கவும். எல்லாம் நன்றாக வெந்து குழைந்து அல்வா பதத்தில் வந்ததும் ஏலப்பொடி கேசரிப் பவுடர் கொஞ்சம் பாலில் கலந்து தூவி நன்றாகக் கிளறவும். பிறகு அதில் பழச்சாறை ஊற்றி கை விடாமல் கிளற வேண்டும்.

ஒரு தட்டில் நெய் அல்லது டால்டா தடவி ஜவ்வரிசி கலவையைப் பரவலாக தாம்பாளத்தில் கொட்டவும்.

ஆப்பிளைத் தோல் சீவி சிறு துண்டங்களாக நறுக்கி மேலே அலங்காரமாக வைக்கலாம். திராட்சைப் பழத்தைக் கூட வைக்கலாம்.

இக்கலவையை குளிர் சாதனப் பெட்டியில் வைத்து துண்டங்களாகப் போட்டு பரிமாறலாம். அல்லது அல்வா போலும் பரிமாறலாம்.

**- லதாசிவம், சென்னை - 82.**

**இரண்டாம் பரிசு ரூ.200/-**

# ஜம்போ மீல் சூப்

***தேவையானபொருட்கள்:***

கேரட் - 50 கிராம் (நறுக்கியது)
பீன்ஸ் - 50 கிராம் (நறுக்கியது)
உருளைக்கிழங்கு - 50 கிராம் (நறுக்கியது)
வெங்காயம் - 100 கிராம் (நறுக்கியது)
பூண்டு - 20 பல் (நறுக்கியது)
இஞ்சி - சிறுதுண்டு

(நறுக்கியது)
உப்பு, மிளகுத்தூள், பால் - சிறிதளவு
சாப்பாட்டு புழுங்கலரிசி- உடைத்துச் சலித்தவை - 1 கப்.
ஜவ்வரிசி - உடைத்துச் சலித்தவை 1கப்,
வெந்தியம் - 1 ஸ்பூன்.

***செய்முறை:***

4 கப் கொதித்த தண்ணீரில் அரிசி ஜவ்வரிசிரவை வெந்தியம் போட்டுக் கலக்கவும். சிறு தீயில் 15 நிமிடம் வைத்து விட்டு குக்கரில் வைத்து வேகவிடவும். (அரிசி வேகும் அளவு நேரம்) முதலில் அடுப்பில் வைத்து விட்டு கலக்கி குக்கரில் வேக விடுவதால் கட்டிக்கட்டியாக ஆகாது.

காய்கறி, வெங்காயம் முதலியவற்றை வேக வைத்து எடுத்துக் கொள்ளவும்.

வெந்த ரவைக் கஞ்சியில் வெந்த காய்கறிகளைப் போட்டுக் கலக்கவும். உப்பு மிளகுப் பொடி, சேர்த்துக் கலக்கவும். கரண்டி பால் சேர்த்துக் கலக்கவும். நன்றாகக் கொதித்ததும் இறக்கி மூடி வைக்கவும். ½ மணி கழித்து ஸ்பூன் ஸ்பூனாக சாப்பிட நன்றாக இருக்கும்.

நோய் வந்து சரியானவர்களுக்கும் வயதானவர்களுக்கும் மிகவும் ஏற்றது. அடிக்கடி வயிற்றுப்போக்கு உள்ளவர்கள் காய்கறிகள், வெங்காயம், பூண்டு, இஞ்சி, மிளகுப் பொடி தவிர்த்து தயிர் சேர்த்துச் சாப்பிடலாம். உடம்புக்குத் தெம்பாகவும் வயிற்றுப் போக்கும் இல்லாமலும் இருக்கும்.

– விமலா ராமமூர்த்தி,
கோயமுத்தூர்.

**மூன்றாம் பரிசு ரூ.100/-**

## ஜவ்வரிசி பகோடா

***தேவையான பொருட்கள்:***

ஜவ்வரிசி - 1 கப்
உருளைக்கிழங்கு - 3
தேங்காய் - 1 மூடி
வேர்க்கடலை - ½ கப்
உப்பு - தேவைக்கு ஏற்ப
ப.மிளகாய் - 6 அல்லது 8
ப.கொத்தமல்லி - சிறிய கட்டு
ரிஃபைண்ட் ஆயில்
சீரகம் - ½ டீஸ்பூன்.

***செய்முறை:***

1) ஜவ்வரிசியை ½ மணி நேரம் ஊற வைத்து வடிய வைத்துக் கொள்ளவும்.
2) உருளைக்கிழங்கை வேகவிட்டு தோல் உரித்து உதிர்த்து வைக்கவும்.
3) தேங்காய் துருவிக் கொள்ளவும்.
4) வேர்க்கடலையை எண்ணை விடாமல் வறுத்துத் தோல் நீக்கி ஒன்றிரண்டாக உடைத்துக் கொள்ளவும்.
5) பச்சை மிளகாய், கொத்தமல்லி இவற்றைப் பொடியாக நறுக்கவும்.

மேற்கூறிய எல்லாவற்றையும் உப்பு, சீரகம் சேர்த்துப் பிசைந்து சிறு பகோடாக்களாக உருட்டி வைத்துக் கொள்ளவும். மிகவும் கெட்டியாக இருந்தால் சிறிது நீர் சேர்த்துப் பிசையவும். எண்ணையைக் காய வைத்து பகோடாக்களை பொன் வறுவலாக பொரித்து எடுக்கவும். சூடாக தேங்காய் சட்னி அல்லது தக்காளி ஸாஸ் இவற்றோடு சாப்பிட நல்ல சுவையாக



போர்ன்விடா, பூஸ்ட், மற்றும் குழந்தைகள் உணவான செர்லாக், போன்ற பால் பவுடர் டப்பாவில், மேல்புறம் மூடி வரும் மெல்லிய பளபளப்பான அலுமினிய வட்டமான தட்டை தூர போடாதீர்கள். அந்த வட்டமான தட்டை பாதியாக வெட்டவும். பாதியான துண்டின் முனையினை சுருட்டி கோன் போல் தயார் செய்து ஓரத்தை ஊசி நூலால் தைத்து விடவும். ஸ்வீட்டோ, ஐஸ்கிரீமோ நாம் தயாரிக்கும் உணவுப் பண்டங்களை இந்த கோன் பகுதியில் சிறிது நெய் தடவி போட்டு அடைத்துக் கவிழ்த்தால் அழகான சிறிய சிறிய கோன் போன்று வடிவத்தில் பார்க்க அழகாக இருக்கும். குழந்தைகள் மிகவும் விரும்புவார்கள்.

-பாலா

அடுப்பு மேடை, மற்றும் மேடையின் பின்புறம் இருக்கும் வழவழப்பான சன்மேக்கா சுவர்களை சுத்தம் செய்யும் பொழுது, ஒரு ஸ்பூன் ஷாம்பூ கலந்த நீரினால் துடைத்து எடுத்தால் பள பளப்பாக (எண்ணெய் மற்றும் அழுக்கு நீங்கி) இருப்பதுடன் கம கமவென மணமாகவும் இருக்கும்.



– பாலா.

---

இருக்கும்.

வஸந்தி ராமன்,
சென்னை – 24.

போலார் ஹைபவர் லோ–வோல்டேஜ் மோட்டாருக்கு 3 வருட உத்தரவாதம் உள்ளது. இதில் வாங்கிய ஒரு வருடத்திற்குள் ஏதேனும் பழுது ஏற்பட்டால் மோட்டாரையே இலவசமாக மாற்றித் தருகிறார்கள்!

**ஆறுதல் பரிசு ரூ.50/–**

## பாம்பே அல்வா

*தேவையான பொருட்கள்:*

ஜவ்வரிசி – 1 கப்
சர்க்கரை – 2 கப்
நெய் அல்லது டால்டா – 1கப்
ஏலக்காய் பொடி – ¼ டீஸ்பூன்
முந்திரி – 1 டீஸ்பூன்
திராட்சை – 1 டீஸ்பூன்
கேஸரி பவுடர் – 2 சிட்டிகை.

*செய்முறை:*

ஜவ்வரிசியை தண்ணீரில் நன்றாக ஊறவிட வேண்டும். சுமார் 5, முதல் ஆறுமணி வரையில் இருக்கலாம். ஊறிய ஜவ்வரிசியை மிக்ஸியில் போட்டு நன்றாக மையாக அரைத்துக் கொள்ளவும். கலரை அரைக்கும் போதே சேர்க்கவும். அடுப்பில் கடாயில் சிறிது நெய்விட்டு முந்திரி, திராட்சையைப் பொன்னிறமாக வறுத்து எடுத்துக் கொள்ளவும். பிறகு மேலும் சிறிது நெய்விட்டு ஜவ்வரிசி விழுதைப் போட்டு நன்றாகக் கிளறிக் கொண்டே இருக்கவும். மிதமான தீ போதும். பிறகு சர்க்கரை போட்டுக் கிளறவும். மீதி நெய்யைக் கொஞ்சம் கொஞ்சமாக ஊற்றிக் கொண்டே கிளறவும். நன்றாக வெந்ததும் ஏலப் பொடி, முந்திரி, திராட்சை போட்டுக் கிளறி இறக்கவும். இது மிகவும் சுவையாக இருக்கும். ஒரு வாரம் வரையிலும் கெடாது.

– சி.லலிதா,
பெங்களூர் – 50.

**ஆறுதல் பரிசு ரூ.50/–**

## ஜவ்வரிசி சுண்டல்

*தேவையான பொருட்கள்:*

நைலான் ஜவ்வரிசி – 250 கிராம்,
பயத்தம் பருப்பு – 250 கிராம்,
வெங்காயம் – 100 கிராம்,
பச்சை மிளகாய், காய்ந்த மிளகாய்,
கடுகு –1/4 டீஸ்பூன்,
உளுத்தம் பருப்பு – ¼ டீஸ்பூன்,
கடலை பருப்பு – ¼ டீஸ்பூன்,
கொத்துமல்லி, கறிவேப்பிலை. எலுமிச்சை பழம் – 1, உப்பு, எண்ணெய்.

*செய்முறை:*

ஜவ்வரிசியை ஒரு மணி நேரம் ஊற வைக்க வேண்டும். சிறிதாக தண்ணீர் வைத்து பயத்தம் பருப்பை வேக வைக்க வேண்டும். வாணலியை அடுப்பில் வைத்து எண்ணெய் ஊற்றி மிளகாய், கடுகு,உளுத்தம் பருப்பு, கடலை பருப்பு, வெங்காயம் இவற்றைத் தாளித்து வெந்த பருப்பையும் போட்டு, ஊறின ஜவ்வரிசியும் போட்டு எல்லாவற்றையும் நன்றாக புரட்டிக் கொள்ள வேண்டும். எல்லாம் நன்றாக சேர்ந்து சுண்டல் பதத்திற்கு வரும். தேவைக்கேற்ப உப்பு போட்டு கீழே இறக்கி வைத்து மல்லிதழை, கறிவேப்பிலை போட்டு, எலும்பிச்சை பழம் பிழிய வேண்டும். குழந்தைகளும், பெரியவர்களும் இந்தச் சுண்டலை விரும்பிச் சாப்பிடுவார்கள்.

சுகந்தா ரவி, மதுரை.




• சுகிர்தா • எஸ்.பி. • கலெக்டர் • கல்லூரி முதல்வர்

# திரையரங்கைத் தூய்மைப்படுத்தும் ஆக்கங்கள்!

திரைப்படத்தில் ஆபாசம், வன்முறை பற்றி நாம் காடியாய்க் கத்திக் கொண்டு இருக்கிறோம். மாவட்ட அளவில், ஒரு கலெக்டரின் ஒத்துழைப் போடு ஓர் எழுச்சிக் கூட்டமே நடந்தது என்பது பாராட்டப்பட வேண்டிய விஷயம்தானே?

வேலூரிலுள்ள ஆக்ஸிலியம் கல்லூரி திரைப்படங்களில் ஆபாசத்திற்கு எதிரான ஓர் இயக்கத்தை ஆரம்பித்துள்ளது. 'மனித மாண்பு மேம்பாட்டு இயக்கம்' எனும் இவ்வமைப்பு, வேலூரிலுள்ள முக்கியத் துறையிலுள்ள அனைத்துப் பிரமுகர்களையும், சமூக சேவை நிறுவ னங்களையும் இணைத்து ஒரு கூட்டம் நடத்தியது. வேலூர் மாவட்ட ஆட்சித்





தலைவர் அலுவலகத்தில், கலெக்டர் எம்.பி. விஜயகுமார் ஐ.ஏ.எஸ். அவர்களின் தலைமையில் நடந்த இக்கூட்டத்தில் அர்சத் சுக்லா ஐ. பி. எஸ்ஸும் (மாவட்டக் காவல்துறை கண்காணிப்பாளர்) சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டார். ஆக்ஸிலியம் கல்லூரி முதல்வரும், பேராசிரியை சுகிர்தாவும் பேசினார்கள். கூட்டத்தில் கலந்து கொண்ட பலரும் தங்களுடைய கருத்துக்களைச் சொன்னார்கள்....

ஆக்சீலியம் பேராசிரியை செல்வி சுகிர்தா :

''பிளேக் நோய் வந்தபோது அதைத் தடுப்பதற்குத்தான் முதலில் வழிமுறைகள் மேற்கொள்ளப்பட்டது. பின்புதான் காரணம் அறியப்பட்டது. அதுபோல்தான் சினிமாவில் உள்ள ஆபாசம், வன்முறையைக் கண்டு நீக்க வேண்டும். இன்று சினிமா பார்ப்பவரையே இழிவுபடுத்துகிறது. பண்பட்ட மனத்தினையும் இளஞ்சிங்கங்களையும் மாற்றி வருகிறது. நடிகர், தயாரிப்பாளர் போன்றோர் மீது பழிபோட்டு ஒதுங்காமல் நாமும் நம் பங்காற்றுவோம். கண்ணியமான கணவன் - மனைவி உறவு, அண்ணன் - தங்கை உறவு காணாமல் போயின. ெ:பண்களின் புனிதம் மறைக்கப்பட்டு இன்று அவர்கள் காமப் பொருளாய், சதைப் பிண்டங்களாய்க் காட்டப்படும் சினிமா அவசியமா? யோசித்துச் செயல்படுவோம்.''






# TAMILNADU PEOPLE'S BENEFIT FUND (PURASAWALKAM) LTD.,

79, Perambur Barracks Road, Purasawalkam, Madras - 600 007.
Central Government Approved (Reg. No. 18-21907/91) ☎ 5323360

## DEPOSIT SCHEME

| | 46 Days | 3 Months | 6 Months | 1 Year | 2 Years | 3 Years | 5 Years |
|---|---|---|---|---|---|---|---|
| FIXED DEPOSIT | 13% | 14% | 15% | 17% | 18% | 19% | 20% |

## 20% FOR SENIOR CITIZEN SPECIAL SCHEME

for Rs. 10,000/- and above 1 Year

*Your Deposit Doubles in 45 months Triples in 72 months.*

| | Rs | 1 Year | 2 Years | 3 Years | 45 Months | 72 Months | 90 Months |
|---|---|---|---|---|---|---|---|
| CASH CERTIFICATE | 1,000<br>5,000 | 1,180<br>5,920 | 1,430<br>7,150 | 1,730<br>8,650 | 2,000<br>10,000 | 3,000<br>15,000 | 4,000<br>20,000 |

## "TAMIL MAHAL SELVAKALANCHIZAM" SCHEME

| | Rs | 10 Year | 15 Years | 18 Years |
|---|---|---|---|---|
| CASH CERTIFICATE | 1,000<br>5,000<br>10,000 | 6,500<br>32,500<br>65,000 | 16,000<br>80,000<br>1,60,000 | 28,000<br>1,40,000<br>2,80,000 |

## மங்கையர் பொற்குவியல் திட்டம்

### மகள் திருமணமா கவலை வேண்டாம்

இத்திட்டம் உங்கள் மகள் திருமணத்திற்கு எப்படி உதவுகிறது என்பதைப் பாருங்கள்.
எங்களது இந்த திட்டத்தில் நீங்கள் மாதாமாதம் செலுத்தும் தொகை
**ரூ.100/-** மட்டுமே. ஆனால் பெறக் கூடிய தொகையோ **ரூ.1,50,000/-**

| | Rs. | 12 Months | 24 Months | 36 Months | 48 Months | 60 Months |
|---|---|---|---|---|---|---|
| RECURRING DEPOSIT | 50<br>100 | 660<br>1,320 | 1,430<br>2,860 | 2,360<br>4,720 | 3,600<br>7,200 | 5,030<br>10,060 |

| கடன் | நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்<br>சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும் | வட்டி விகிதம் ரூ.1.75 |
|---|---|---|

## SAVINGS DEPOSIT INTEREST RATE 10% P.A

கொடுக்கல் வாங்கல் ரூ.1/- செலுத்தி பங்குதாரர்களாகிறவர்களிடம் மட்டும்

Weekly Holiday Friday

Working Hours : Week Days: 8.30 a.m. to 5.00 p.m. Sunday: 8.30 a.m. to 1.00 p.m.

| | | |
|---|---|---|
| V. KRISHNAMOORTHY B.A., B.L.,<br>Secretary | A. THIAGARAJAN M.A.,<br>Executive Director | R.SUBRAMANIAN B.SC., B.L.,<br>President |

மாவட்ட ஆட்சித் தலைவர்

எம். பி. விஜயகுமார் :

''ஆபாசத்தை ஒழிப்பது என்பது அனைவரும் சேர்ந்து செய்ய வேண்டிய போராட்டம். ஆபாசச் சுவரொட்டிகளை அகற்றலாம். ஆபாசச் சுவரொட்டிகள் இனிமேல் வேலூரில் ஒட்டப்பட மாட்டாது'' என்றவர், எந்தப் பிரிவினரையும் தாக்கிக் கூறாமல், உணர்ச்சிவசப்படாமல், குறையை நிவர்த்தி செய்ய வழிமுறைகளை அனைவரையும் கூறுமாறு வேண்டினார்.

வேலூர் சி. ஞானசேகரன் (எம்.எல்.ஏ.) :

''சினிமா பார்க்காமல் இருப்பதால் எதையும் இழந்துவிட மாட்டோம். அடிதடி சண்டைகள் நிறைந்த சினிமாக் களைப் பார்த்தால் குழந்தை வீரனாகும் எனப் பெற்றோர் எண்ண வேண்டாம். அவர்களை வன்முறைப் படங்களைப் பார்க்க அனுமதிக்கக் கூடாது . அப்போதுதான் இருபது வருடம் கழித் தாவது சமுதாயம் மாறும்.

ஆபாசம் இருந்தால் அதைப் பார்க்கா மல் இருந்த காலம் போய் மறைமுகமாகப் பார்க்கும் நிலை இப்போது உள்ளது. ஆபாசம் இல்லாத படம் ஓடாது என் றால் திரையரங்கைக் கல்யாண மண்டப மாகவோ, காம்ப்ளக்ஸ் ஆகவோ மாற்றிக் கூடச் சம்பாதிக்கலாம். படத்தைப் பார்த்துத் தனித்தன்மை, மனித மாண்பை இழந்துவிடுவதைவிட இது மேல்.''

சந்திரசேகரன் (நகராட்சி ஆணையாளர்) :

''திரைப்படங்கள் சீரழிந்தால் நாடு சீரழியும். இப்படிப்பட்ட படங்களினால் வரும் வருமானம் இல்லாமல் நகராட் சிக்கு நஷ்டம் ஏற்பட்டாலும் பரவா யில்லை. இளைஞர் முன்னேற்றத்திற் காகக் குறைவான சம்பளம் வந்தாலும் பரவாயில்லை. நன்முறையில் பொழுது போக்கு அம்சங்கள் இருத்தல் அவசி யம்.''

திருமதி ராணி :

''தினம் தமிழ்பேப்பர் நல்ல படங் களைப் பற்றி எழுதலாம். தியேட்டர் முன் போராட்டம் செய்ய வேண்டும்.''

சுகுமாரன் (ரோட்டரி கிளப் - குடியாத்தம்):

''அனைத்துச் சங்கங்களும் யூனிபார் மாக வாக்கியம் எழுதி போஸ்ட் கார்டு மூலம் அனைத்து முக்கியஸ்தர்களுக்கும் அனுப்ப வேண்டும்.''

அறிவொளி :

''மக்களின் ஒட்டுமொத்த கருத்தாக அரசாங்கத்திற்குத் தெரியப்படுத்த வேண்டும். கையெழுத்து முறை பயன்படுத்தல், மனிதச் சங்கிலிப்

---

எனக்குக் கிட்டத்தட்ட ஒரு மாதமாகத் தொடர்ந்து தலைவலி - குளிர்ந்த தண்ணீரில் தலைக்குக் குளிப்பது இன்னபிற காரணங்களால் - தினமும் அவதியுற்றேன். போடாத தைலம் இல்லை. அம்மா சொன்ன யோசனையின்படி சாதாரண - வாசற்படிக்கு வைக்கும் குங்குமம் - இதனை கெட்டியாகக் குழைத்துக் கொண்டு நெற்றியில் இரு பொட்டுவரை இறக்கி அடர்த்தியான பற்று போட்டேன். பின் அடுப்புக்கரியைத் தண லாக்கிப் போட்ட பற்று நன்கு காயும்படி அனல் காட்டினேன். பட்டென்று விட்டது என் தலைவலி. அடுத்த நாள் தலைவலி வரும் எனக் காத் திருந்தேன் - போயே போய் விட்டது.

- எம். ஆர். வசந்தி



போராட்டம், கருத்தரங்குகள் (அனைவரையும் அழைத்தல்), சுவர் விளம்பரம், அறிவொளி ஆக்கபூர்வமான புக்லெட் வெளியிடல், பள்ளி, கல்லூரி எழுத்தாளர்களுக்கு அப்பீல் செய்தல், எழுத்தாளர்களை அழைத்துக் கருத்துக் கேட்டல் எனப் போராடலாம். அறிவொளி இயக்கத்தின் மூலம் கிராமத்து மக்களிடம் நம் பண்பாடு சீரழியும் செய்தியை எடுத்துச் சொல்ல வேண்டும்.

இந்திரநாத் (பாரத் ஸ்கூல்) :

"சினிமா, டீ.வி. மேல் பழிசுமத்துவதை விட்டுகேபிள் டீ.வி மேல் கவனம் செலுத்த வேண்டும். அவற்றைக் காவல் துறையினர் செக் செய்ய வேண்டும். பெற்றோர் குழந்தைகளைக் கட்டுப்படுத்த வேண்டும்."

திருமதி. பட்டாபிராமன்

(மாதர் சங்கத் தலைவி) :

"போஸ்டரை எங்கு ஒட்ட வேண்டும் என்று பார்த்து ஆக்சிடெண்ட்டைத் தவிர்க்கலாம். போஸ்டர் பார்க்க விரும்புபவர்களுக்கு என்றே தனி இடம் ஒதுக்க வேண்டும். சன் டீ.வி, ஸ்டார் டீ.விக்கு வேண்டுகோள் விடுக்கலாம். பான்பராக், மது போன்ற விளம்பரங்களையும் தவிர்க்க வேண்டும்."

ராணி :

"வட ஆற்காடு மாவட்டத்தில் ஆபாசத்தை எதிர்த்துச் சபதம் எடுக்க வேண்டும். மனித மேம்பாட்டு இயக்கம் இந்தியா முழுவதும் கிளைகள் ஆரம்பித்துச் செயல்படுத்த வேண்டும். இங்கு மட்டும் செய்தால் போதாது.

குறுகிய கால நடவடிக்கை நியாயமான முறையில் இருக்க வேண்டும். நீண்ட கால நடவடிக்கைகளை





ஓயாத இருமலுக்குச் சாப்பிடும் இருமல் சிரப் சிறிது நேரத்திற்குத்தான் நிவாரணம் அளிக்கும். இருமலால் அவதிப்பட்ட என் மகனுக்கு என் தாயாரின் யோசனைப்படி பாலை நன்கு காய்ச்சி, மிளகுத் தூளைப் போட்டு நன்கு ஆற்றினேன். மிளகுத் தூள் போட்டது தெரியாமல் நன்றாகத் தூக்கி ஆற்றி, மேலோட்டமாகப் பாலை நன்கு இறுத்து - இனிப் புக்குச் சர்க்கரைக்குப் பதில் ஒரு ஸ்பூன் சுத்தமான தேனைக் கலந்து கொடுத் தேன். 'மில்க் மெய்டா அம்மா' என்று சந்தோஷமாக வாங்கிக் குடித்தான். இருமல் சொல்லாமல் கொள்ளாமல் பறந்தது. 3, 4 மாதங்களுக்கு மேலாகிறது - இன்னமும் திரும்பவில்லை இந்தப் பக்கம்.

- எம். ஆர். வசந்தி



கலெக்டர் தலைமையில் மீட்டிங் போட வேண்டும்.

திரு. அர்சத் சுக்லா (எஸ். பி.) :

"பள்ளியின் முன் போஸ்டர் ஒட்டுவதைத் தடை செய்ய வேண்டும்."

நிறைய இளம் பெண்களும், மாணவர்களும் இக்கூட்டத்தில் கலந்து கொண்டது சிறப்பான அம்சம். இறுதியில் சிறப்புமிக்க இரண்டு தீர்மானங்களை நிறைவேற்றினார்கள் : —

1. வட ஆற்காடு மாவட்டத்தில் ஆபாசச் சுவரொட்டிகள் ஒட்டக் கூடாது.

2. ஆபாசத் திரைப்படங்களைத் திரையிட வேண்டாம் என்று திரையரங்கு உரிமையாளர்களைக் கேட்டுக் கொள்வது.

வட ஆற்காடு மாவட்டம் விழித்துக் கொண்டு விட்டது! மற்றவர்கள்....?

படங்கள், தகவல் :

**விடிவெள்ளி ஆறுமுகம்**

# Sunline

## சூரியகாந்தி எண்ணெயின் சிறப்புக்குக் காரணம்,

# டீ-வேக்ஸிங்.

சன்லைன், டீ - வேக்ஸ் செய்யப்பட்ட சூரியகாந்தி சமையல் எண்ணெய் தெளிவானது மற்றும் இலேசானது. வைட்டமின் E நிறைந்தது. கொலஸ்ட்ரால் இல்லாதது. உங்கள் உடல்நலத்தில் அக்கறை காட்டுவது சன்லைன். சால்வெண்ட் எக்ஸ்ட்ராக்ஷன் எதுவும் இன்றி இது மிகமிகத் தூய்மையான எண்ணெயுங்கூட... இவற்றால் இது உன்னதமான சமையல் எண்ணெயாகத் திகழ்கிறது.






நெஞ்சத்தைக் கொள்ளை
கொள்ளும் சுவை
சன்லைன்
சூரியகாந்தி சமையல் எண்ணெய்

And Cholesterol

இது ஒரு எஸ். எஸ். டி. ஆயில் மில்லின் தரமான தயாரிப்பு

ARTIG / 1518

**ஜோதிடமும் மருத்துவமும்**
எந்த மாதிரி ஜாதகம் உள்ளவர்களுக்கு எந்த மாதிரி நோய் வருகிறது என ஜோதிடரீதியாக விளக்கம் அளிக்கிறார் ஹனீபா.
விலை ரூ. 19.00
(பைவ் ஸ்டார் பப்ளிகேஷன்ஸ், பேஸ்மெண்ட் எண் 9, 'கோல்டன் பிளாஸா' 43, ரங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை - 17.)

**ஸ்ரீ வெங்கடேச பாகவதம்**
ஆழ்வார்களுடைய சிறப்புக்களைப் பேசும் நூல். ஆசிரியர் ராசிபுரம் ராமபத்ரன்.
விலை ரூ. 25.00
(ஸ்ரீ வெங்கடேச நிலையம், பி-6, 10, 'நித்யா' 13 - ஆம் தெரு, நங்கநல்லூர், சென்னை -61)

**நிம்மதியான வாழ்வு பெற மந்திரங்கள்**
மந்திர மகிமை, தரித்திரம் நீங்கிச் செல்வம் பெற, குடும்ப அமைதி பெற எனப் பல ஸ்தோத்திரங்களின் தொகுப்பு.
விலை ரூ. 18.00
(யமுனா பிரசுரம், 18/1, ராஜாபாதர் தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

**வடிவழகி திரு ஆயிரம் போற்றி**
தமிழில் லலிதா சகஸ்ரநாமம். கவியாக்கம் சுப. துளசி
விலை ரூ. 4.00

**ராஜராஜேஸ்வரி பாமாலை**
பாவாக்கம் - கு. செ. இராமசாமி
விலை ரூ. 3.00
(இரண்டும் - மதி நிலையம், 45, செல்லப் பிள்ளையார் கோவில் தெரு, இராயப் பேட்டை, சென்னை - 600 014.)




**முற்பகல் செயின் பிற்பகல் விளையும்**
இன்றைய திரைப்படங்களைப் போன்ற வேகமான நாவல், எழுத்து. ஆசிரியர் ப்ரியா கல்யாணராமன்
விலை ரூ. 32.00

**மணிபர்சில் ஒரு போட்டோ**
இன்றைய நடுத்தர வர்க்கத்தின் வாழ்வின் அவலங்களை எடுத்துக்காட்டும் சிறுகதைத் தொகுப்பு. ஆசிரியர் : எஸ். ராமசுப்பிரமணியன்.
விலை ரூ. 32.50
(மணிமேகலைப் பிரசுரம், த. பெ. எண். 1447, 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 600 017.)

**காட்டு நிலா**

'சரசரக்கும் சப்தங்கள்
பட்டுப் புடைவை அல்ல
சருகுகளையே
அவளுக்கு
அர்த்தப்படுத்துகின்றன.'

கவிதைத் தொகுப்பு. ஆசிரியர் : வித்தகன்
விலை ரூ. 15.00

**என்றும் உன் ராணி**
அனுராதா ரமணனின் வழக்கமான சரளமான நடையில் செல்லும் நாவல்.
விலை ரூ. 32.00
(இரண்டும் - திருமகள் நிலையம், 55, வெங்கட் நாராயணா ரோடு, தி. நகர், சென்னை - 600 017.)

**ஸ்ரீ ஸுதர்ஸன ப்ரபாவம்**
ஸ்ரீ ஸுதர்ஸன, ஸ்ரீ லக்ஷ்மீ நரசிம்ஹ, ஜிதன்டத ஸ்தோத்திரங்கள் அடங்கியது.
விலை ரூ. 25.00
(தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, தி. நகர், சென்னை - 600 017.)

**காப்பியமும், கற்பனையும்**
பிரபல இலக்கியவாதிகளான டாக்டர் மு. வ., ம.பொ.சி., வெ. சாமிநாத சர்மா போன்றோரின் அற்புதமான கட்டுரைத் தொகுப்பு. தொகுப்பாசிரியர் - எம். ஏ. பழனியப்பன்.
விலை ரூ. 13.00

**ஆகாசக் கனவுகள்**
ஆ. சந்திரபோஸின் சிறுகதைத் தொகுப்பு. காதல், ஏக்கம், பயம் எனப் பல வண்ணங்

கள் காட்டும் சிறுகதைகள்.

விலை ரூ. 23.00

(இரண்டும் - நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098)

### ஜோதிடம் கற்க சுலப வழிகள்

ஆசிரியர் - மயிலை பூபதிராஜன்

விலை ரூ. 40.00

### ஜாதக ரகசியம்

ஜாதகம் பார்ப்பது எப்படி என விளக்குபவர் பி. சி. கணேசன்.

விலை ரூ. 47.00

(இரண்டும் - குமரிப் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 611 001.)

### உலகால் அறியப்படாத ரகசியம்

இறைவன் அளித்த மனம் எனும் அற்புதக் கருவி கொண்டு பெரும் பேரின்ப நிலையையும், வெற்றிகரமான வாழ்வையும் பெறலாம் என்கிறார் எம். எஸ். உதயமூர்த்தி.

விலை ரூ. 25.00

(கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

### நூலும் நெசவும்

நூலைப் பற்றியும், நெசவினைப் பற்றியுமான சுவையான புத்தகம். இத்துறையில் ஆர்வம் உள்ளவர்களுக்குச் சிறந்த நூல். ஆசிரியர் - சதா. மோகனதாசு.

விலை ரூ. 35.00

### திருவாசக இன்னிசைத் தேன்

திருவாசகத்திற்கு சுரதாளக் குறிப்பு தந்து இசையமைத்து எழுதியிருக்கிறவர் - சைதை தேவாரம் த. நடராசன்

விலை ரூ. 15.00

(இரண்டும் - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

### சுவையான இனிப்பு சிற்றுண்டி வகைகள்

ஆசிரியர் - எஸ். லீலா

விலை ரூ. 15.00

### நளபாக சமையல் முறை

ஆசிரியர் - அனிதா ஜெயதேவி

விலை ரூ. 12.00

(இரண்டும் - கண்ணப்பன் பதிப்பகம், தபெ. எண். 2979, 72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.)

### வேர்ப்பலா

'காலடியில் தோன்றியவர்
காட்டிவிட்ட பாதையிலே
கோலமிட்டுச் செல்கின்ற
குணக்குன்றே! சங்கரனே!'

(ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் பற்றிய கவிதை) என ஆரம்பித்துச் செல்லும் கவிதை நூல். ஆசிரியர் - குடந்தை புகழேந்தி.

விலை ரூ. 16.00

(மங்கலத் தேவன் பதிப்பகம், 8, ம.பொ.சி. தெரு, எம். ஜி. ஆர். நகர், சென்னை - 600 078.)

### குற்ற சாம்ராஜ்யம்

விறுவிறுப்பானதொரு மர்ம நாவலைத் தந்திருப்பவர் தெக்கூர் அனிதா.

விலை ரூ. 25.00

(வள்ளி புத்தக நிலையம், 8-ஏ, சுந்தரேஸ்வரர் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை - 600 014.)

### ஸ்டார்ஸ் & ஷேர்ஸ்

ஜோதிடப் பலன்களைக் கொண்டு, ஷேரில் முதலீடு செய்வது பற்றி விளக்குகிறார் நெல்லை வசந்தன்.

விலை ரூ. 25.00

(T.R.V. 24, B.B.R. நகர், ஆழ்வார் திருநகர், சென்னை - 600 087.)

### உங்கள் குடும்ப குருப்பெயர்ச்சி பலன்கள்

12 ராசிகளுக்கும் உரியது. கணித்தவர் தஞ்சை கோபிசிவம்.

விலை ரூ. 7.50

(ஸ்ரீ துர்க்கை பப்ளிகேஷன், 21, மதுரை வீரன் கோயில் தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

### சபரிமலை ஐயப்பன்

ஐயப்பனின் சரிதம், ஸ்தல பெருமை, பூஜை விதிமுறைகள் என விளக்குபவர் - சி. முத்துப் பிள்ளை.

விலை ரூ. 10.00

### தித்திக்கும் திருப்புகழ்

தொகுப்பு - நெ. சி. தெய்வசிகாமணி

விலை ரூ. 10.00

(பைலட் பப்ளிகேஷன்ஸ், த.பெ. எண். 1545, 309, லிங்கிச் செட்டி தெரு, சென்னை - 600 001.)





**‘உள்ளாடைகளுக்குத்தான் நாயுடு ஹால்’ என்று இருந்த நிலை மாறி இன்று ‘புதிய ஃபேஷன்களுக்கு நாயுடு ஹால்’ என்கின்ற அளவுக்குப் புதுயுகம் படைத்து வருகிறார்கள் சென்னை தி. நகரிலுள்ள ‘நாயுடு ஹால் ஃபேமிலி ஷாப்’ நிறுவனத்தினர்.**




*பீஸ் பிடியோ, வண்ண வண்ண கடிதார்களோ, இளம் பெண்களுக்கான காஸ்மெடிக் சாதனங்களோ எதுவானாலும், நவயுக நாகரீகத்திற்குத் தகுந்தபடி இவர்களிடம் மின்னுகின்றன. ஆண்களுக்கான ஷர்ட்ஸ், பேண்ட்ஸைக்கூட இவர்கள் விட்டு வைக்கவில்லை. ‘ரெடிமேடா இரண்டாம்*

நாளே பட்டன் பிய்ந்து போய்விடும்' என்பது போலில்லாமல் தரமான துணி, தரமான தையல், நவீன ஃபேஷன் என முன்னணியில் உள்ள இவர்களிடம்,

**"1995 - ஆம் ஆண்டு வரப் போகிறது. அடுத்த ஆண்டிற்கு நீங்கள் தரப் போகும் புதிய ஃபேஷன் உடைகள் என்னென்ன?" எனக் கேட்டோம்.**

"அடுத்த ஆண்டு 'பேட்ச் வொர்க்' உடைகள்தான் எல்லோரையும் கவரப் போகிறது. இப்போதிலிருந்தே அந்த வகை ரெடிமேட் உடைகளைத் தயாரித்துக் கொடுக்க ஆரம்பித்துவிட்டோம். 'பேட்ச் வொர்க்' என்பது அழகிய வண்ண வண்ண காம்பினேஷன் துணிகளைத் தேர்ந்தெடுத்து வெட்டி இணைத்து ரெடிமேட் உடையாக்குவது. இந்த வகை சுடிதார்கள் மிகவும் பிரபலமாகி இருக்கின்றன. முன்பெல்லாம் ஒரே வண்ண சுடிதார், காண்ட்ராஸ்ட் கலர்களில், மேல் கீழ் உடைகள் அல்லது முத்து சமிக்கி என இருந்தது.

ஆனால் 'பேட்ச் வொர்க்' உடைகள் பல வண்ணங்களில் மின்னும். இதையே கட்டம் கட்டமாக, கிராஸ் கிராஸாக, இரண்டு காண்ட்ராஸ்ட் கலர்களை கிராஸாக இணைத்து எனப் பலவகைகளில் அறிமுகப்படுத்தி வருகிறோம். இவற்றிலேயே கண்ணாடி வேலைப்பாடு, முத்து சமிக்கி வேலைப்பாடு எனவும் செய்கிறோம். துப்பட்டாவிலும் வேலைப்பாடுகள் என அணியும்போது மிகவும் சிறப்பாக அமையும்.

சுடிதார் மட்டுமில்லாமல் ஃப்ரீ பீஸ் ஸ்கர்ட் அண்ட் டாப் உடைகளில் கூட இவற்றைத் தருகிறோம். எங்கள் டெய்லர் வேடிக்கையாகச் சொல்வார், "என்னம்மா நீங்க பாட்டுக்குத் துண்டு துண்டா கட் பண்ணி கட் பண்ணிக் கொடுத்துடறீங்க. இதை மாடல் மாடலா சேர்க்கறதுக்குள்ள உயிர் போகுது" என்று. ஆனால் இந்த வகை உடைகளை முடித்து ஷோ கேஸில் வைக்கும்போது ரொம்பப் பெருமையாக இருக்கும். அந்த அளவிற்கு அழகைத் தரும்."

**"இந்த வகை உடைகள் எல்லோருக்கும் பொருந்துகின்றனவா?"**

"பொருந்தும். ஏனென்றால் அவரவர்க்குத் தகுந்தாற்போலத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். குள்ளமாக இருப்பவர்கள் நெடுக்குவாக்கில் கிராஸ் செய்து பேட்ச் வொர்க் செய்த உடைகளை அணியும்போது உயரமாகத் தோற்றமளிப்பார்கள். பொதுவாகவே சுடிதார் அணிந்தால் உயரமாக இருப்பது போலத்தான் தோன்றும். சாதாரணமாகவே உயரம் அதிகமானவர்கள் எந்த வகை பேட்ச்

வொர்க் உடைகளையும் அணியலாம். இவர்களுக்கு எல்லாமே அழகாகத்தான் இருக்கும்."

**''இதை எந்த வகைத் துணிகளில் தயாரிக்கிறீர்கள்?''**

"மற்றவை போலவே இவையும் டெஸ்லர் சில்க், கிரஷ்ட் காட்டன், டெர்ரி வாயில், காட்டன், ஸ்பன் என எல்லாவற்றிலும் தயாரிக்கிறோம்..."

**''95 - க்கு வேறென்ன புதிய ஃபாஷன்?''**

"முன்பு சுடிதாருக்கு ஒரே மாதிரி கால் பாக அமைப்புகள் இருக்கும். கொஞ்சம் லூஸாக இருக்கும். இப்போது நவீன ஃபாஷன் 'பாரலெல் பேண்ட்'தான். அதாவது ஆடவர்கள் அணியும் பாண்ட் போலவே இருக்கும். இதுவும் அழகாகவே இருக்கிறது. இதை நீங்கள் இங்குள்ள படத்திலேயே பார்க்கலாம்..."

**''வேறு...?''**

"எப்போதோ பாவாடை - தாவணி உடை மறைந்து போய்விட்டது. அப்புறம் பட்டுப் பாவாடை மட்டும் 'டாப்' சட்டையோடு அணிந்து வந்தார்கள். இப்போது ஜரிகை வேலைப்பாடமைந்த ஃபேன்ஸி பாவாடைகளைத் தருகிறோம். இங்கு படத்திலுள்ள பச்சை வண்ண உடை அதுபோன்றதே. இதைத் திருமணங்களுக்கு அணிந்து செல்லும்போது தனி அழகைத் தரும். இது மட்டுமல்லாமல் முழுமையான காஞ்சிபுரம் பட்டிலேயே கூட சுடிதார் கொண்டு வந்து இருக்கிறோம்..."

**''இவையெல்லாம் ரொம்ப 'காஸ்ட்லி'யாக இருக்காது?''**

"நீங்க வேறே. இன்னும் கொஞ்சம் விலை அதிகமா இருக்கா? என்கிறார்கள். காரணம், இப்போதெல்லாம் உடைகளில் மக்கள் மிகுந்த கவனம் செலுத்த ஆரம்பித்துவிட்டார்கள். தரமாகவும் அதேசமயம் புதிய நாகரீகத்திலும் இருக்கிறதா என்றுதான் பார்க்கிறார்கள். நம்முடைய நாடு கூட மேல்நாடுகளைப் போல் ஃபேஷனுக்கு முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பித்துவிட்டது. எனவே, இவர்களின் வேகத்துக்கு ஈடுகொடுத்து நாங்களும் புதிதுபுதிதாகக் கண்டுபிடிக்கிறோம்..."

**''அதுசரி, ஃபேஷன் என்றாலே பம்பாய், சிங்கப்பூர் என்பார்களே?''**

"எத்தனை சிங்கப்பூர் கஸ்டமர்கள் எங்களிடம் வந்து வாங்கிச் செல்கிறார்கள் தெரியுமா? வெளிநாடுகள் எல்லாம் நம்முடைய தரத்தையும், கற்பனை, கைவேலைத் திறனை



யும் பார்க்க, பாராட்ட ஆரம்பித்துவிட்ட நேரம் இது!"

**''உடைகள் விஷயத்தில் வேறென்ன சொல்ல விரும்புகிறீர்கள்?''**

"புதிய வடிவமைப்போடு பளிரென உடை அணியும் போது நமக்கே ஒரு தன்னம்பிக்கை பிறக்கிறது. அதுவும் சிறப்பான ஓர் உடையை அணிந்திருக்கிறோம் என்னும்போது ஏற்படும் மனவியல் மாற்றங்கள் அற்புதமானவை. இன்றைய பெண்கள் போட்டி மிகுந்த இந்த உலகில் இன்று போராடிக் கொண்டு இருக்கிறார்கள். அவர்களுக்கு ஆரோக்கியமான தைரியமான மனதும், சிறப்பான உடைகளும் நல்ல வெற்றிகளை ஈட்டித் தரும்."

என்கிறார்கள் நாயுடு ஹால் நிறுவனத்தினர்.

படங்களுக்கான உடைகள் உதவி : **நாயுடு ஹால்**

படங்களில் : **ரீது, ஆர்த்தி, சுஜாதா.**

அட்டை வண்ணப்படம், கட்டுரைப் படங்கள் : **யோகா**

# பொறுப்புள்ள பெற்றோர்கள் ஒருபோதும் தமது குழந்தைகளை இந்த அறிவிப்பை மீறச் செய்ய மாட்டார்கள்.

## நீங்கள் அப்படிப்பட்டவர்தானே ?

சாதாரணமாக வயதுவந்தவர்களுக்கான டூத்பேஸ்ட்களும் ஜெல்களும் சுரண்டும் தன்மையுள்ள அப்ரேஸிவ் ஆகும். அதனால் உங்கள் குழந்தையின் நாசூக்கான பற்களுக்குக் கேடு விளைவித்து வலிவிழக்கச் செய்யக்கூடும்.

காரணம், குழந்தைகளது பற்களின் மீதுள்ள எனாமல் பூச்சு, வயது வந்துள்ளவர்களது பற்களின் மீதுள்ளதைக் காட்டிலும் மென்மையானதாகும். ஆகவே, உங்கள் குழந்தைக்குத் தேவைப்படுவது குழந்தைகளுக்கான ஓர் டூத்பேஸ்ட் ஆகும்.

ப்ராமிஸ் ஜஸ்ட் ஃபார் கிட்ஸ். குழந்தைகளுக்கென்றே விசேஷமாக ஃபார்முலேட் செய்யப்பட்ட டூத்பேஸ்ட். சாதாரணமாக வயது வந்தவர்களுக்கான டூத்பேஸ்ட்களில் காணப்படும் சுரண்டும் தன்மையுள்ள அப்ரேஸிவ் இதில் கிடையாது. அதே சமயம் பற்குழிகளை எதிர்க்கும் கிராம்புத் தைலத்தின் நற்குணங்கள் அனைத்தும் இதில் உள்ளது.

அதனால், பிரிட்டிஷ் டென்ட்டல் ஹெல்த் ஃபவுண்டேஷன் (BDHF) ப்ராமிஸ் ஜஸ்ட் ஃபார் கிட்ஸ் டூத்பேஸ்ட்டை குழந்தைகளுக்கு உகந்ததென ஒப்புதல் வழங்கியுள்ளது.

ஆகவே, உங்கள் குழந்தைகள், வயது வந்தவர்களுக்கான டூத்பேஸ்ட் உபயோகிப்பதை உடனே தடுத்திடுங்கள். வாழ்நாள் முழுதும் அவர்களது பற்கள் கெடுதலுக்குள்ளாவதை தவிர்த்திடுங்கள்.







**BDHF ஒப்புதல் பெற்ற இந்தியாவின் ஒரே டூத்பேஸ்ட்.**

Chaitra Leo Burnett BBLS 2088/94 TAM

## மங்கையர் மலர் & மீரா ஹெர்பல் பவுடர் இணைந்து வழங்கும் கூந்தல் பராமரிப்புப் பக்கங்கள்!



### அழகே ஆரோக்கியம் :

பெண்கள் அழகு நிலையத்துக்கு சகஜமாக போகக்கூடிய நிலைக்கு வந்து விட்ட இந்தக் காலத்தில், இப்படி அழகு செய்து கொள்வது என்பது எந்த அளவிற்கு நம் ஆரோக்கியத்துக்கும் உதவி செய்கிறது என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

நாம் வீட்டில் என்னதான் சோப் போட்டு முகத்தைக் கழுவினாலும் அழுக்கு மேலோட்டமாகத்தான் போகும். 'ப்ளீச்' செய்து கொள்வதால், அதுவும் 'ஹெர்பல் ப்ளீச்' ஆக இருந்தால் முகத்தில் உள்ள அழுக்கு நீங்கவும் மற்றும் முகம் மிகவும் சுத்தமாகவும் வாய்ப்பு உள்ளது.

மேற்கூறியதைத் தவிர நாம் ஃபேஷியல் செய்து கொள்வதால் நம் ஆரோக்கியத்துக்கு உதவும் நன்மைகளைப் பார்ப்போம். ஃபேஷியல் செய்யும் போது ஃபேஸ் மசாஜ் செய்கிறோம். இதனால் இரத்த ஓட்டம் சீர்படுகிறது. மேலும் ப்ரஷர் பாய்ண்ட்ஸ் மிகச் சரியாக இருப்பது மூலம் நம் தோல் மிகவும் 'ரிலாக்ஸ்' ஆகிறது.

மிகவும் சரியான முறையில் ஃபேஸ் மசாஜ் செய்து பின்பு ஸ்டீமிங்கும் கொடுப்பதால், முகத் தோலில் உள்ள துளைகள் திறந்து கொள்கின்றன. இதனால் முகத்தில் உட்புறமாக உள்ள தேவையற்ற முகத்திற்குக் கேடு விளைவிக்கின்ற அழுக்கு அனைத்தும் மேற்பகுதிக்கு வந்து விடுகிறது. நம் தோல் மிகவும் மென்மையாகவும் மாறுகிறது. மேலும் ஃபேஷியல் செய்யும் போது ஹெர்பல் கிரீம் உபயோகப்படுத்தினால் முகத்தில் பின்விளைவுகள், பக்கவிளைவுகள் எதுவுமே ஏற்படாது. ஏனென்றால் மூலிகை வகையறாக்கள் அனைத்துமே எவ்வளவு தூரம் சக்திவாய்ந்தவை என்பது நமக்குத் தெரிந்ததுதானே!

மேலும் இப்பொழுது ஃபேஷியல் பண்ணும் முறையில் நிறைய புது வகையான நுணுக்கங்கள் வந்து உள்ளன. பல வகையான மிஷின்கள் மூலம் முகத்தில் உள்ள பிரச்னைகளுக்கு வழி கண்டுபிடித்துத் தீர்வு செய்யும் முறையும் உள்ளது.

நம் முக அழகிற்குத் தேவையானது எது என்பதை நாமே முடிவெடுப்பதை விட நன்கு படித்து அனுபவம் உள்ள அழகுக் கலை நிபுணர்களை நாட வேண்டும். நமக்கு நாமே சிகிச்சை செய்து கொள்வது என்பது சில சமயங்களில் ஆபத்தாகிவிடும்.

# அழகுக் கலை ஆரோக்கியத்தையும் தருகிறது!

**பெண்களுக்கும் ஆண்கள் போல் முடி வளருகிறதே? முகம், கை, கால்கள் போன்ற தேவையற்ற இடங்களில் வளரும் முடியை நிரந்தரமாக நீக்க வழி உண்டா? உண்டெனில் (மருந்து, ஆயில், மூலிகை மருந்து) எது எங்கு கிடைக்கும் என்ற விவரத்தைத் தெரிவிக்கவும். ஆங்கில மருத்துவமுறையில் எல்க்ட்ரோலிஸிஸ் முறையில்தான் நீக்க முடியும் என்கிறார்கள். எங்களைப் போன்ற நடுத்தர வர்க்கத்தினருக்கு அதுவும் கிராமப் பெண்களுக்கு முடியாத ஒன்று இது.**

**ஒரு வாசகி.**

உடம்பில் ஒவ்வொரு அங்கத்திலும் உள்ள முடியையும் ஒரோர் முறைப்படி எடுக்க வேண்டும். அதாவது கை கால்களில் உள்ள முடியை நீக்குவதற்கு வேக்ஸிங் முறையும், முகத்தில் உள்ள முடிகளை கண்டிப்பாக எலக்ட்ராலிஸிஸ் முறையிலும் நீக்கினால்தான் நிரந்தரத் தீர்வு காணலாம். மேலும் under arms waxing செய்வதால் தோல் கறுப்பாக மாறாது. இதற்கு hair remover cream ஏதாவது கூட உபயோகிக்கலாம்.

**முடி செம்பட்டையாக இருந்தால் செம்பருத்தி இலையைக் காயவைத்துப் பொடி செய்து வாரம் இரண்டு முறை தலைக்குத் தேய்த்துக் குளிக்கலாம் என்று சொல்லி இருந்தீர்கள். எந்த செம்பருத்தி இலை? நான்கு இதழ் கொண்ட செம்பருத்தி இலையா? அல்லது அடுக்குச் செம்பருத்தி இலையா?**

**தலைக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பதற்கு சியக்காயுடன் வெட்டிவேர் கலக்கலாமா? கூடாதா? வேறு என்ன பொருட்கள் எல்லாம் கலக்கலாம்? எவ்வளவு விகிதம் கலக்க வேண்டும்?**

**- எஸ். லதா, சென்னை - 61.**

ஐந்து இதழ் கொண்ட செம்பருத்திப் பூ மிகவும் நல்லது. பொதுவாகவே செம்பருத்தி எந்த வகையாக இருப்பினும் அதன் இலையும், பூவும் முடி பராமரிப்பிற்கு நல்லது.

தலைக்குத் தேய்த்துக் கொள்ளும் சியக்காயுடன் வெட்டிவேர் சேர்ப்பது மிகவும் நல்லது. இதனால் உடல் குளிர்ச்சியடையும். மேலும் சியக்காய்த்தூள் மிகவும் வாசனையுடன்





# உச்சரித்தாலே



# உதடுகள் மணக்கும் !






# மிஸ்கோஸ் நெய்

## இப்பொழுது சென்னையிலும் கிடைக்கிறது



இனிப்பு மற்றும் கார வகைகளை நாக்கில் தேனாகக் கரையச் செய்கிறது மிஸ்கோஸ் நெய். பாரம்பரியச் சுவை. தன்னிகரற்ற தரம். மயக்கும் மணம். உங்கள் உணவு ரசனையின் உச்சம். இனி இலையில் ஏது மிச்சம் ?




**அக்மார்க் முத்திரை பெற்ற அசலான நெய்**

*பருப்பில்லாத கல்யாணமா ? மிஸ்கோஸ் இல்லாத பலகாரமா ?*

**C/F & ஸ்டாக்கிஸ்ட்:** C/F செல்வி & கோ, 6, ராமசாமி சாலை, மேற்கு தாம்பரம் சென்னை - 600 045

**ஸ்டாக்கிஸ்ட்:** மனோஹர் டிரேடர்ஸ், 3, ஆடியப்பநாயக்கன் வீதி, கொத்தவால் சாவடி சென்னை - 600 001 மகமாய் ஏஜென்சீஸ், 42, கம்தார் நகர், ஸ்கீம் ரோடு, நுங்கம்பாக்கம், சென்னை - 600 034 எஸ்வீ டிரேடர்ஸ், 147, பாரதிபுரம், பிரேவரி ரோடு, ஷெனாய் நகர், சென்னை - 600 030 ராமச்சந்திரன் & சன், 48, முடிச்சூர் ரோடு, மேற்கு தாம்பரம், சென்னை - 600 045 அனு ஏஜென்ஸி, 5/1 முதல் மாடி, ராமசாமி ராஜா வீதி, சென்னை - 600 106 சுபசக்தி அசோஸியேட்ஸ், 142, வெள்ளாளர் வீதி, பாண்டிச்சேரி

இருக்கும். சியக்காய் அரைக்கும் போது சேர்க்க வேண்டிய பொருட்கள் :

1. சியக்காய் - ½ கிலோ,
2. கிச்சலி கிழங்கு - 50 கிராம்,
3. பாசிப் பருப்பு - 50 கிராம்,
4. அரிசி - 100 கிராம்,
5. செம்பருத்திப் பூ - 50 கிராம்,
6. வெந்தயம் - 50 கிராம்,
7. வேப்பிலை - 50 கிராம்,
8. வெட்டிவேர் - 50 கிராம்,
9. பூங்காங் கொட்டை - 100 கிராம்,
10. எலுமிச்சை தோல் (காய்ந்தது) - 50 கிராம்,
11. நெல்லி முள்ளி - 50 கிராம்.

மேற்கூறிய பொருட்களைக் காயவைத்து மெஷினில் கொடுத்து அரைத்து வைத்துக் கொண்டால் முடி பராமரிப்பிற்கு மிகவும் உதவியாக இருக்கும்.

**என் கைகளில் முடி உள்ளது. எண்ணெய் ஸ்நானம் செய்து கொள்ளும் போது கைகளுக்கு ஆயில் மஸாஜ் செய்வதால் தலைமுடியைப் போலவே கைகளிலும் முடி நீண்டு வளர்ந்து விடுமா? இயற்கையான முறையில் கைகளில் முடி வளராமல் செய்வதற்கு என்ன வழி?**

**- ப்ரீதா பாய், மதுரை - 20.**

தாங்கள் பயப்படுவது போல் எண்ணெய் ஸ்நானம் செய்யும் போது கைகளுக்கு ஆயில் மஸாஜ் பண்ணுவதால் கைகளில் முடி நீண்டு வளராது. நாம் ஆயில் மசாஜ் செய்து கொள்வதால் கை, கால்களில் உள்ள வறட்சித் தன்மை நீங்குகிறது. ஆயில் மசாஜ் தவிர்ப்பதால்தான் நிறைய தோல், கண் பிரச்னைகள் தற்காலத்தில் அதிகமாகி உள்ளது. இயற்கை முறையில் கைகளில் முடி வளராமல் இருக்கச் செய்வதென்பது கடினம். வயது மற்றும் உடம்பில் உள்ள சுரப்பிகளின் மாற்றங்களால் முடியானது கை, கால்களில் அதிகமாக வளருகிறது. இதற்கு நீங்கள் அழகுக் கலை நிலையங்களுக்குச் சென்று வேக்ஸிங் செய்து கொள்ளலாம். தொடர்ந்து வேக்ஸிங் செய்து வந்தால் முடி வளருவதற்குச் சில நாள் ஆகும். வேக்ஸிங் செய்வதால் தோல் பளபளப்பாக இருக்கவும் வாய்ப்பு உண்டு.

**தலைமுடியை ப்ளீச் செய்வதால் தலைமுடிக்குக் கேடு உண்டாகுமா?**

**- லதா, சென்னை.**

தலைமுடியை ப்ளீச் செய்வது கண்டிப்பாகத் தலைமுடிக்குக் கேடு விளைவிக்கும். மேலும் முடி வெகு சீக்கிரமே நரைத்துப் போக ஆரம்பிக்கும். முடி கொட்ட ஆரம்பித்தால் சுலபத்தில் நிற்காது. இவை அனைத்தையும் விட முடி தன் இயற்கைத் தன்மையை இழந்து விடும் என்பது கவனத்திற்குரியது.

**வாரம் ஒருமுறை வெந்தயம் தேய்த்துக் குளித்தால் நல்லது என்று கூறினீர்கள். வெந்தயத்தை அரைத்துத் தலையில் தேய்த்துச் சிறிது ஊறியவுடன் என்ன தேய்த்துக் குளிக்கலாம்? சீயக்காயா? (அ) ஷாம்புவையா? வெந்தயத்தின் வழவழப்பு தலையில் படிவதால் (முடி அல்ல) தலை வழவழப்பாகி வழுக்கை ஆகாதா?**

**- எச். உமா, திருவாரூர்.**

வெந்தயத்தைத் தலைக்குத் தேய்த்துக் குளிப்பதால் தலை வழுக்கை ஆகாது. மேலும் வெந்தயம் தேய்த்துக் குளிப்பதால் உடல் மிகவும் குளிர்ச்சி அடையும். வெந்தயத்தைத் தலையில் தேய்த்து நன்றாக ஊறியபின் சியக்காய்ப் பொடியுடன் சாதம் வடிகஞ்சி இருந்தால் அதையும் கலந்து தேய்த்தால் தலை மொற மொறப்பாக இருக்கும். மேலும் சாதம் வடிகஞ்சி முடி கண்டிஷனிங் பண்ணவும் உதவுகின்றது.

**சின்ன வயதில் மூக்கில் மூக்குத்தி போட விளிம்பில் மூக்கு குத்தப்பட்டுள்ளது. தற்போது சரியான இடத்தில் மூக்கு குத்திக் கொள்ளலாம் என்றும், பழைய இடத்தில் மெட்டல் போட்டு அடைத்து விடலாம் என்றும் சொல்கிறார்கள். அவ்வாறு செய்து கொள்ளலாமா? அதில் பிரச்னை எதுவும் ஏற்படா மல் இருக்குமா? குறிப்பாக நாற்பது வயதுக்கு மேற்பட்டவர் களுக்கு மூக்கின்மேல் உள்ள கரும் புள்ளிகளை வலியில்லாமல் எடுக்க முடியுமா? பயத்தைப் போக்கவும்.**

**- விஜயா சுப்பிரமணியம், கோவை.**

---

**இந்த இதழ் பரிசுக் கட்டுரைக்கு மீரா அளிக்கும் பரிசு ரூ. 1000/- மதிப்புள்ள குக்கர்**

**அடுத்த இதழுக்கான போட்டி - நரைப் பிரச்னையை இப்படிச் சமாளித்தேன்!**

**கடைசி தேதி : 15.12.'94**



விரைவில் தங்கள் தேவைகளை வலியுறுத்தும் புது அங்கத்தினர்கள் உங்கள் வீட்டுக்கு வருவார்கள். அவர்களுக்கு சிறிது இடம் கொடுக்க வேண்டாமா?



# BPL

இன்று அல்லது நாளை, உங்கள் குடும்பத்தில் புதிய குட்டி அங்கத்தினர்கள் வரப்போகிறார்கள். முதலில் அவர்கள் தேவைகள் குறைவாக இருக்கலாம்; நாட்கள் செல்லச் செல்ல இவை பெருகத்தான் போகின்றன.

இவர்களுக்காக நீங்கள் தயாராக இருக்க வேண்டாமா? இதற்குச் சிறந்த வழி – 185லி. பரிபூரணப் பொருத்த ரெஃப்ரிஜிரேட்டிங் ஸிஸ்டம்.

சாதாரண 165லி. ஃப்ரிட்ஜ்களைவிட இவை 20 லிட்டர் கூடுதல் தருபவை. எனவே கூடுதல் பால் வைக்க அதிக இடமும், பிறகு (அவர்கள் வளரும் போது) கூடுதல் பழங்கள், முட்டைகள், கீரை வகைகள், ஐஸ்கிரீம்கள் வைக்கத் தேவையான இடமும் கிடைக்கும்.

**185 லிட்டர். பரிபூரணப் பொருத்த ரெஃப்ரிஜிரேட்டிங் ஸிஸ்டம். தாரான இடம். மிக சௌகரியம். நீங்கள் வாங்கக்கூடிய விலை.**

அதிக இடம் இருப்பதால் அடிக்கடி மார்க்கெட் செல்ல வேண்டாம். உங்கள் அருமைக் குழந்தைகளுடன் கூடுதல் நேரம் செலவிடலாம்.

உறைபனி இல்லாத உட்பக்கங்களும், வெவ்வேறு டெம்பரேச்சர் பகுதிகளும், உங்கள் குழந்தைகளுக்குத் தேவையானதை–சிறப்பாகப் பாதுகாத்த ஆரோக்கிய உணவை – தவறாது தந்திடும். மின்சார ஷாக் தராத இதன் பாடி அவர்களுக்குப் பரிபூரணப் பாதுகாப்பு தந்திடும்.

185லி. பரிபூரணப் பொருத்த ரெஃப்ரிஜிரேட்டிங் ஸிஸ்டம். இன்றைய சௌகரியங்களுக்கும், நாளையத் தேவைகளுக்கும். வாழ்வில் என்றும் சந்தோஷம் தரும் சின்னச் சின்ன செல்வங்களுக்கு இதுவே மிகப் பொருத்தம்.

**BPL REFRIGERATING SYSTEMS**

**நவீன வாழ்க்கை முறையின் சாராம்சம்**

**FROM BPL REFRIGERATION LIMITED**

**For further details contact: BPL Refrigeration Limited,** 40, Oliver Road, Mylapore, **MADRAS** - 600 004, Tel: 4997336.





அம்சங்கள்:

- கென்ஸோ தொழில்நுட்பம்.
- உறைபனி இல்லாத உட்பக்கங்கள்.
- வெவ்வேறு டெம்பரேச்சர் பகுதிகள்.
- −18°C ஃப்ரீஸர்.
- நம் நாட்டு சீதோஷ்ணத்துக்கேற்ற கம்ப்ரெஸ்ஸர்.
- மேம்பட்ட பஃப் இன்ஸுலேஷன்.
- அட்ஜஸ்ட் செய்யக் கூடிய ஷெல்ப்புகள்.
- உறுதியான ஏபிஎஸ் லைனர்.
- துருப்பிடிக்காத தன்மை.
- நேர்த்தியான, பின்பக்கம் ஏரோ சீரான குழாய்.

**இந்தியாவின் மிகப் பரந்த உறைபனி-இல்லாத வரிசை.**

நீங்கள் சரியான இடத்தில் மூக்குக் குத்திக் கொண்டு ஏற்கெனவே உள்ள பழைய இடத்திலிருந்து மூக்குத்தியை எடுத்து விட்டால் அந்தத் துவாரம் நாளடைவில் மறைந்து விடும். நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு அழகு நிலையம் சென்று மூக்கு குத்துவதால் எந்தப் பிரச்னையும் வராது.

மூக்கில் உள்ள கரும்புள்ளிகளை வலியில்லாமல் எடுக்கும் முறை அழகு நிலையம் சென்று பேஷியல் செய்து கொள்வதுதான். திறமையான அழகுக் கலை நிபுணர்கள் பேஸ் மசாஜ் செய்து பின் black heads removers மூலம் கரும்புள்ளிகளை நீக்குவார்கள். இதற்குப் பயப்பட தேவையில்லை. கரும்புள்ளிகளை நீக்கும் போது ஏற்படும் வலி நிச்சயமாக பயப்படத்தக்க அளவு அதிகமானதல்ல.

**எனக்கு இயற்கையிலேயே நீண்ட அடர்ந்த கூந்தல். என்ன காரணம் என்று தெரியவில்லை, இப்பொழுது 3 மாதமாக என் கூந்தல் முழுவதும் முறிந்து முறிந்து விழுகிறது. சீப்பை வைத்துச் சீவும் பொழுது கொத்து கொத்தாகக் கொட்டுகிறது. கொட்டிய முடிகளை எல்லாம் எடுத்துப் பார்த்தால் ஒவ்வொரு முடியின் மேல் பகுதியும் (முடி தலையில் இருந்து ஆரம்பிக்கும் இடம்) வெள்ளையாக பொசுக்கியது போன்று உள்ளது. கீழ்ப்பாகம் முழுவதும் (நுனி முடி) 5 அல்லது 6 ஆகத் தெறித்து இருக்கிறது. இவ்வாறு ஏற்படுவது எதனால்? இதுதான் பூச்சி வெட்டா? இதனைப் போக்கி என் பழைய நீண்ட கூந்தலை பெறுவது எவ்வாறு?**

**- ராதா, சிதம்பரம்.**

உங்கள் பிரச்னைகளுக்கு நீங்கள் முதலில் ஒரு நல்ல தோல் வைத்தியரிடம் சென்று ஆலோசனை பெறவும். ஏனென்றால் உங்கள் முடியில் உள்ள மேல் பகுதியின் பிரச்னை, உங்கள் மண்டை தோல் பிரச்னையாகக் கூட இருக்கலாம். ஸ்கின் ஸ்பெஷலிஸ்டிடம் சென்று ஆலோசனை பெற்ற பிறகு எங்களிடம் பதில் எதிர்பார்க்கலாம்.

மருத்துவரிடம் வைத்தியம் செய்து கொண்ட பிறகு இடைவிடாமல் hot oil massage செய்து கொள்வதும் முடி உதிர்வதைத் தடுக்க உதவியாக இருக்கும்.

**என் 15 வயது மகளுக்கு எங்கு பார்த்தாலும் முடி வளர்ந்து ஒரே அசிங்கமாக உள்ளது (உடம்பில்). இதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை, மஞ்சள் எல்லாம் எவ்வளவு பூசியும் குறைந்த பாடில்லை. இதைத் தடுக்க என்ன வழி?**

**- ஜி. மஹேஸ்வரி, சேலம்.**

உடம்பில் தேவையற்ற முடி வளர்வது என்பது நான் முன்கூறியது போலவே ஹார்மோன், மற்றும் வயது மாற்றங்களால் ஏற்படும். இவ்வாறு முடி வளர்வதைத் தடுக்க நல்ல டாக்டரிடம் சென்று ஆலோசனை பெறலாம். (அல்லது) நல்ல அழகுக் கலை நிலையத்திற்கு சென்று முகத்திற்கு எலக்ட்ராலிஸிஸ் முறையிலும், உடம்பிற்கு வேக்ஸிங் முறையிலும் முடியை நீக்கலாம்.

ஏற்கெனவே உங்களிடம் உள்ள கிரைண்டர்களில் மோட்டார் பழுதடைந்து இருந்தால் அந்தப் பழைய பழுதான மோட்டாருக்குப் பதிலாகப் புதிய 'போலார் ஹைபவர் லோ-வோல்டேஜ்' கிரைண்டர் மோட்டாரைப் பொருத்திக் கொள்ளலாம்.

**முல்தாணி மெட்டி என்ற பொடியை எவ்வாறு முகத்தில் பூசிக் கொள்வது, இத்துடன் எவற்றைச் சேர்த்துப் பூசிக் கொள்வது, இதனால் என்ன பயன்?**

**- கே. ஆர். விஜயலஷ்மி, மதுரை.**

முல்தாணிமெட்டி என்ற பொடியை இரண்டு ஸ்பூன் எடுத்துக் கொண்டு இதனுடன் பன்னீர் கலந்து கொண்டு சந்தனக் கலவை போல் கலக்கவும். இதை முகத்தில் தடவிக் கொண்டு 20 நிமிடங்கள் வைத்துக் கொண்டு துடைத்து எடுத்துவிடவும். முல்தாணி மெட்டி எண்ணெய்ப் பசையுள்ள முகத்துக்கு நன்றாகப் பொருந்தும், மென்மையாக்கும்.

**உங்கள் மகளின் கூந்தலை எப்படிப் பராமரிக்கிறீர்கள்? பரிசு பெற்ற கட்டுரை**

## குரங்கு அப்பம் பங்கிட்ட கதையாகிவிட்டது!

என் பெண்ணிற்குச் சுமாரான முடி உண்டு. ஒருநாள் நுனியில் சிறுத்து இருப்பதால் லெவல் ஆக வெட்டும்படி சொன்னாள். நான் மறுக்கவே, அவள் தன் தோழியிடம் இதுபற்றிச் சொல்லவே, அவள் தான் வெட்டுவ

வெளிநாடுகளுக்கு அனுப்பும் தபால் பார்சல்களிலும் அட்டைப் பெட்டிகளிலும் மேலே எழுதும் முகவரி அழிந்து போகாமலிருக்க மேஜை நாற்காலிக்கான வாக்ஸ் பாலிஷை முகவரி மீது தடவி விடலாம். இதனால் எழுத்துக்கள் மங்காது. அழியாது.

- விஜயா சீனிவாசன்



தாகச் சொல்லி, 'குரங்கு அப்பம் பங்கிட்ட' கதையாக இந்தப் பக்கம் சரியில்லை. அந்தப் பக்கம் சரியில்லை என்று வெட்டி, கழுத்து வரை முடியுடன், அழுவதா சிரிப்பதா என்று புரியாமல், பயந்துகொண்டே வந்தாள். வேறு வழியின்றி உடனே பியூட்டி பார்லர் சென்று 'லெவல்' செய்துகொண்டு வந்தாள்.

நான் அன்று ஆரம்பித்தேன், என் கைவரிசையை. மருதாணி, கறிவேப்பிலை, செம்பருத்தி இலை, பூ, அரைக்கீரை, பகம்பால், பொடுதலை கார்போக அரிசி, வெட்டிவேர் என எல்லாவற்றையும் ஆலிவ் ஆயில், விளக்கெண்ணெயுடன் கலந்து காய்ச்சி தைலம் தயாரித்து மாலை காலேஜ் விட்டு வந்ததும் லேசாக சூடு பண்ணி நன்றாக மசாஜ் செய்து தடவினேன். சனிக்கிழமை, புதன் கிழமை நல்லெண்ணெயை லேசாகச் சூடு செய்து நன்றாகத் தேய்த்து ஊறவைத்து பயறு, வெந்தயம், வெட்டிவேர், கோரைக் கிழங்கு, சம்பங்கி விதை, பூந்திக் கொட்டை சேர்த்து அரைத்த சீயக்காய்ப் பொடியுடன் வெந்நீர், தயிர், முதல் நாள் வடித்த கஞ்சி, கொஞ்சம் கடலை மாவு கலந்து கரைத்த பொடியை போட்டுத் தேய்த்து நன்றாக அலசிய பிறகு செம்பருத்தி இலையைத் தண்ணீரில் கசக்கி எடுத்துத் தலைமுடியில் கடைசியில் ஊற்றுவேன். பிறகு, நன்றாக ஈரம் போக துடைத்து நல்ல சாம்பிராணி புகை போடுவதால் தலைமுடியும் நன்றாகக் காய்ந்து வாசனையுடன் இருக்கும். ஆறே மாதத்தில் பழைய வளர்ச்சிக்கு அதிகமாகவே செழித்து கருகருவென்று வளர்ந்துவிட்டது. 'எப்படி இவ்வளவு சீக்கிரம் உன் கூந்தல் வளர்ந்தது?' என்று அவள் தோழிகள் கேட்டு அதிசயிக்கிறார்களாம்.

'போலார் ஹை-பவர் லோ-வோல்டேஜ் கிரைண்டர் மோட்டாரில் பால்பேரிங் பொருத்தப்பட்டுள்ளதால் இதனைப் பராமரிக்க வேண்டும் என்ற அவசியமே இல்லை.

இப்பொழுது எங்கள் வீட்டில் நான் தயாரித்த தைலத்தையும், சீயக்காய்ப் பொடியையும் தவிர வேறு எதையும் நாடுவதில்லை.

**- கி. ராஜலக்ஷ்மி, சென்னை - 51.**

## பிரசுரத்திற்கு....

1. முதல் பாயிண்ட் வாரம் ஒருமுறை 200 மிலி நல்லெண்ணெயில் சிறிது ஓமம் போட்டு, இளஞ்சூட்டில் காய்ச்சி, தலைக்குத் தேய்த்து 10 நிமிடங்கள் ஊறவைத்து, பின்னர் சீயக்காய் தேய்த்துக் குளிப்பாட்டுவேன்.

2. தலைக்குக் குளிக்க வைத்தவுடன், காய்ந்த துணியால் தலையை நன்கு துடைத்து



**கோதுமை மாவு, மைதா மாவு, ரவை மூன்றும் சமபங்கு போட்டு, உப்பு சிறிது டால்டா போட்டுக் கெட்டியாகப் பிசைந்து (ஊற விடாமல்) இட்டு, ஒரு மூடியால் கத்திரித்துப் பொரிக்கவும். (சற்றுச் சிவக்க) சிவந்து அழகாக உப்பலாக வரும். பின்பு சவுங்காது. கொத்துமல்லி சட்னி, உருளை மசாலா, புளித் தண்ணீரில் சிறிது உப்பு, காரப் பொடி, வெல்லம் போட்டு இஷ்டம் போல் பானிபூரி சாப்பிடவும்.**

- பார்வதி

'நுனி முடிச்சு' போட்டு காய விட்டு விடுவேன்.

3. பின்னர் எண்ணெய் குளியலுக்கு மூன்று நாட்கள் சென்று, (அதாவது வாரா வாரம் வெள்ளியன்று எண்ணெய் குளியல் என்றால்) செவ்வாய் அன்று, இரண்டு கரண்டி புளித்த தயிரில் சிறிது சீயக்காய் பவுடரைப் போட்டு தேய்த்துக் குளிப்பாட்டுவேன்.

4. தலைக்குச் சிக்கு எடுக்கையில் கீழிருந்து மேலாக எடுப்பதால், கூந்தல் அறுந்து கொட்டாது.

5. தலைக்குத் தினமும் காலையில் 2 ஸ்பூன் வெந்தயம், வெட்டிவேர் போட்டு வைத்த தேங்காய் எண்ணெய் தடவுவேன்.

6. தலைக்குக் குளிப்பாட்டும் போது, சூடாகவோ, 'ஜில்'லென்றோ இல்லாத, வெதுவெதுப்பான நீரில் குளிப்பாட்டுவேன்.

7. தலை வாரி பின்னும் போது, நுனி வரை பின்னி, மடக்கிதான் கட்டி விடுவேன். இல்லையெனில் நுனி முடி வெடித்து விடும்.

8. என் தந்தை ஊரிலிருந்து வருவதாக இருந்தால், 'கரிசலாங்கண்ணி இலை' பறித்து வருவார். அதை அப்படியே ஃப்ரிட்ஜில் ஒரு ஓரத்தில் வைத்திருந்து, காலையில் எடுத்து அதைச் சாறு பிழிந்து, மகளுக்குத் தேய்த்து விடுவேன்.

9. அமாவாசை மூன்றாம் நாள் என் மகளின் கூந்தலை நன்றாக சீவி, சமமாக வைத்து நுனிப்பக்கம் கொஞ்சமாக சமமாக வரும்படி கத்தரித்து விடுவேன்.

இவ்வாறு நான் பராமரித்து வரும் என் மகளின் கூந்தல் நல்ல முறையில் எல்லோரையும் கவரும் வண்ணம் உள்ளது.

- **புவனேஸ்வரி பாலாஜி,**
கொரட்டாச்சேரி.



**ப**க்கத்து வீட்டில் பெரிய முருங்கை மரத்தை வெட்ட, ஏற்கெனவே தோட்டக்கலையில் ஆர்வம் இருந்த என் தங்கை புஷ்பவல்லியும், அவள் கணவர் ராகவனும் ஒரு முருங்கைக் கிளையைக் கொண்டுவந்து தொட்டியில் நட்டார்கள். காரணம் அவர்கள் இருந்தது ஃப்ளாட்டில். மரம், செடி வளர்க்க அவர்களுக்கு இடம் இல்லை. என்ன ஆச்சரியம்! தொட்டியிலே வளர்ந்த முருங்கை மரம் அருமையாகக் காய் காய்க்க ஆரம்பித்தது!

ஃப்ளாட்டில் வசிப்பவர்கள் இதைப் போலக் காய்கறிச் செடிகளை வளர்க்கலாமே!

- கே. ராஜகோபாலன்

# அப்படியா?



**வீ**ட்டில் பண்டிகைகள் கொண்டாடுவார்கள். பள்ளிகளில் தேசிய விழாக்கள் கொண்டாடுவார்கள். ஆனால் சென்னை தி. நகரிலுள்ள ஆக்ஸ்போர்டு மெட்ரிகுலேஷன் பள்ளியில் தேசிய விழாக்களோடு பண்டிகைகளும் கொண்டாடுகிறார்கள்! காரணம், பள்ளியின் கரெஸ்பாண்டெண்ட் நாகராஜன் பழுத்த தேசபக்தியுடன் ஆழ்ந்த தெய்வபக்தியும் கொண்டவராக இருப்பதால்தான்.

நவராத்திரி ஒன்பது நாட்களும் கொலு வைத்து, 'சக்தி' எப்படி மாணவர்களுக்கு இன்றியமையாத ஒன்று என்பதை விளக்குவது போல நவராத்திரி மகாத்மியத்தைக் கலைவிழாவாக மாணவர்களுக்கு உணர்த்தினார்கள். முதல்வர் செல்வராஜ் மோசஸ், தலைமையாசிரியை ராதாவுடன் அல்லி, ஆஷா, உமா, ரேவதி என அனைத்து ஆசிரியைகளும் ஒத்துழைத்துச் சிறப்பாக விழாவைக் கொண்டாடினார்கள்.






**ஸ்ரீ** கந்தஸ்வாமி கோயிலென வழங்கும் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி தேவஸ்தானத்தில் சிறப்பான கேசட் ஒன்று வெளியிடப்பட்டது. 'கந்த கோட்டம்' எனப் பெயர் கொண்ட அந்த கேசட் தஞ்சைவாணன், எம். எஸ். விஸ்வநாதன், சுகிசிவம் ஒருங்கிணைப்பில் இசைச் சித்திரமாக அமைக்கப்பட்டுள்ளது. கந்தகோட்டத்தின் மூத்த அறங்காவலர் பி. பாலசுப்பிரமணியமும், மற்ற டிரஸ்டிகளும் இணைந்து இந்த அரிய கேசட்டை வெளியிட அரும்பாடுபட்டதுடன், 'கந்தகோட்ட முத்தமிழ் விழா'வாகவும் இதனைக் கொண்டாடினார்கள்.

('பெற்றோர்களைப் பாதுகாக்கும் கடமை மகனுக்கு மட்டும்தானா? பெண்ணுரிமை, சமவுரிமை பேசும் மகளுக்கு இல்லையா?' என ஒரு விவாதம் உண்டு. அதேபோல இப்போது மற்றொரு பிரச்னையும் எழுந்துள்ளது-

தங்கள் குழந்தைகளை வளர்த்துத் தலை நிமிர்ந்த பெற்றோர்கள், தங்கள் குழந்தைகளின் குழந்தைகளையும் வளர்க்கும் பொறுப்புதான் அது... இதிலே மகனோட குழந்தைகளா, மகளோட குழந்தைகளா எனும் பட்டிமன்றம் வேறு...

இங்கே ஒரு கோணத்தில் எழுந்த பேட்டியை மட்டும் பிரசுரித்திருக்கிறோம். வயதானவர்கள் இது சம்பந்தமாக தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவிக்கலாமே!

- ஆர்)


• ஜெயலட்சுமி

# சுகமான சுமையா,

கொஞ்சம் கொஞ்சமாக ஒரு 'கலாச்சார' மாற்றம் நடந்து கொண்டிருக்கிறது... வேலைக்குப் போகும் பெண்களில் கணிசமானவர்கள் தினமும் தங்கள் அம்மா வீட்டுக்குப் போகும் வழக்கத்தை மேற்கொள்ளத் தொடங்கியிருக்கிறார்கள். பிறந்த வீட்டுப் பாசத்தாலோ, புகுந்த வீட்டில் கோபித்துக் கொண்டோ அல்ல.

காலையில் வேலைக்குப் போகும்போது தங்கள் குழந்தையை அம்மாவிடம் (அல்லது அப்பாவிடம்) விட்டுவிட்டு மாலை வேளையில் வேலையிலிருந்து திரும்பும்போது குழந்தையை அழைத்து வருகிறார்கள்.

இந்த சமூக மாற்றத்தால் ஏற்பட்டுள்ள விளைவுகளை அறிய, தங்கள் மகள் வயிற்றுப் பேரக் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளும் சிலரைச் சந்தித்தோம்-


• எஸ்.என்.லட்சுமி

## திரு.ஜே.எஸ்.கிருஷ்ணா

"கூட்டுக் குடும்ப முறை சிதைந்ததுதான் இதற்கு முக்கியக் காரணம். இன்னொரு காரணம் ஆடம்பர

• ஜே.எஸ். கிருஷ்ணா



வாழ்க்கைக்கு ஆசைப் பட்டு பல வீடுகளில் பெண்களை வேலைக்கு அனுப்பும் நிலை. பஸ்ஸில் இடி பட்டு, உணர்வுகளையெல்லாம் தற்காலிகமாக ஓரம் கட்டி விட்டு, குழந்தைகளையும் ஏங்க வைத்து விட்டு, தனது பெற்றோரையும் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பில் விட்டு விட்டாவது வேலைக்குப் போகத்தான் வேண்டுமா என்று தோன்றுகிறது.

பக்கத்திலேயே மகள் வீடு இருப்பதால் தன் குழந்தையை தினமும் எங்களிடம் விட்டு விட்டுத் தான் அலுவலகத்திற்குப் போகிறாள் அவள். விடு முறை நாட்களில் பேரனைப் பார்க்க முடியாமல் போகும்போது கூட மனது அடித்துக் கொள்கிறது. ஆனால் அதே சமயம் வேலை நாட்களில் பகல் பொழு தில் ஏதாவது விசேஷங்களுக்கோ, கோயிலுக்கோ சென்றால் கூட, கூடவே பேரனையும் அழைத்துச் செல்ல வேண்டிய நிலை."



• லட்சுமி ராமச்சந்திரன்

**திருமதி எஸ்.என்.லட்சுமி**

"பெண்கள் வேலைக்குப் போவது மட்டும்

# சோகமான சுமையா?

இந்த நிலைக்குக் காரணம் இல்லை. பிள்ளைகள் வேலை காரணமாக வெவ்வேறு ஊர்களில் வசிக்க வேண்டிய நிலைமையும் பல குடும்பங்களில் நிலவுகிறது. மாறி மாறி எல்லா மகன்களின் வீட்டிலும் தங்கப் பெற் றோர் முடிவெடுக்கும்போது, அவர்கள் இல்லாத சமயத்தில் குழந்தையை எங்கு விடுவது என்ற பிரச்னை தோன்றுகிறது. அதே ஊரில் தாய் வழித் தாத்தா பாட்டியிடம் குழந்தை யைப் பகலில், பாதுகாக்கும் பொறுப்பு விடப்படுகிறது."

**திருமதி லட்சுமி ராமச்சந்திரன்**

"மகன், மகள் இருவரது குழந்தைகளை யுமே மதியத்தில் நான்தான் பார்த்துக் கொள் கிறேன். அதே சமயம் மருமகளின் பெற்றோர் வீடு எதிரிலேயே இருப்பதால் அவர்கள் தங்களது பேரனை இங்கேயிருந்து அடிக்கடி எடுத்துக் கொண்டு போவதுண்டு. எல்லாப் பேரக் குழந்தைகளையும் ஒரே மாதிரி கவனத்துடன் வளர்த்தாலும் "பிள்ளை வழிப் பேரன் ஸ்கூலிலிருந்து வந்தவுடன் பெண் வயிற்றுக் குழந்தையை உடனே இடுப்பிலிருந்து



• எஸ்.என்.ராஜன்

அரிசி, பொட்டுக்கடலை, சீரகம் மூன்றையும், மிஷினில் நைஸாக அரைத்து வைத்துக் கொள்ளவும். தேங்காய், பச்சை மிளகாய் மட்டும் அரைத்து, இந்தப் பொடியை 2 ஸ்பூன்போட்டு மோரில் கரைத்து திடீர் மோர்க்குழம்பு செய்யலாம்.

- விஜயலட்சுமி



இறக்கி விடுகிறாயே" என்பது போன்ற பேச்சுக்களை அவ்வப்போது கேட்க வேண்டியிருக்கிறது. என்னைப் பொறுத்தவரை என் மகள், மருமகள் இருவருமே பள்ளித் தோழிகளாக இருந்ததால் பிரச்னை இல்லை."

### திரு எஸ்.என்.ராஜன்

"என் மூத்த பெண்ணுக்கு வரன் நிச்சயமானவுடனேயே சம்பந்தி மாமி (சற்றுப் பார்வை குறைந்ததாலோ என்னவோ) சொல்லி விட்டார் - "நமக்குப் பேரனோ பேத்தியோ பிறந்தால் அதை நீங்கள்தான் வளர்க்க வேண்டியிருக்கும்" என்று. கடைசியில் அப்படியே ஆகிவிட்டது. மகன் டெல்லியில் இருக்கிறான். வேலைக்குப் போகும் மகளின் குழந்தைகளைப் பார்த்துக் கொள்வதற்கு நாங்கள் இங்கு அவளுடன் தங்கியிருக்கிறோம். மருமகனும் எனக்கு ஒரு மகன் போலத்தான் என்றாலும் மகனிடம் எடுத்துக் கொள்ளும் உரிமைகளை மருமகனிடம் எடுத்துக் கொள்ள முடியுமா? தவிர, எங்களிடம் நிறையப் பாசம் உண்டு என்றாலும் சில சமயம் மகள் வயிற்றுப் பேத்தி "நீ உங்க வீட்டுக்கே போ" என்று சொல்வதுண்டு. குழந்தைதானே என்று தோன்றினாலும், மகனது குழந்தை என்றால் இப்படிச் சொல்லுமா என்று தோன்றவே செய்கிறது."

### திருமதி ஜெயலட்சுமி

"சொந்தப் பெண் கஷ்டப்படும்போது நமக்கு என்ன என்று இருக்க முடிகிறதா? உள்ளூரிலேயே இருக்கும் பெற்றோரால் "குழந்தையை க்ரெஷ்ஷிலே சேரேன்" என்று மனிதாபிமானம் இல்லாமல் சொல்ல முடிவதில்லை. மற்ற தாய்களைப் போலவே நானும் என் மகனையும், மகளையும் சமமாகத்தான் நினைக்கிறேன். ஆனாலும் வேறு ஊரில் உள்ள என் மகனுக்குக் குழந்தை பிறந்து விட்டால், அதைப் பார்த்துக் கொள்ள உடனே மூட்டை கட்டிக் கொண்டு கிளம்பி விடுவேன்."

இவர்கள் குறிப்பிட்டதெல்லாம் சற்றே மேலோட்டமான கோணங்கள்தான். ஆனால் வேறு சிலரின் வாழ்க்கை முறை இதனால் பாதிக்கப்பட்டுள்ள விதம் இந்த சமூக மாறுதலின் தீவிரத்தை பளிச்சென்று உணர்த்துகிறது. தங்களது பெயர்கள் வெளியாவதை அவர்கள் விரும்பவில்லையாதலால், மாற்றுப் பெயர்களைத் தந்திருக்கிறோம்.

உயர்ந்த பதவியிலிருந்து சமீபத்தில் ரிட்டையரானவர் ராகவேந்தர். மகனுக்கு வெளி நாட்டில் வேலை. மகளுக்கோ திருமணமாகி விட்டது. "அப்பா பொறுப்புகள் தீர்ந்தன. ஓய்வு பெற்றாகி விட்டது. இனி புண்ணியத் தலங்கள், உறவினர் வீடு என்றெல்லாம் மனைவியுடன் சென்று அமைதியாகவும், சுதந்திரமாகவும் இருக்கலாம்" என்று திட்டமிட்டார். ஆனால் அவரது மகளின் மாமியார் "உன் குழந்தையை உங்கப்பா பார்த்துக்கட்டும், என்னாலே முடியாது" என்று கையை விரித்து விட்டார். மகளின்



மனைவியின் பிரிவு, நல்லவர்களைத் தூற்றுவது, கடனில் மிகுதி வைப்பது, கீழான குணம் உடையவர்களிடம் கைகட்டி ஊழியம் செய்வது, வறுமைக்காலத்தில் உற்றார் உறவினர்களைக் காண்பது, இந்த ஐந்தும் ஒருவனை நெருப்பில்லாமல் எரித்து விடும் தன்மை கொண்டவை ஆகும்.

தகவல் – எங்கேயோ படித்தது.

–வையலூர் ஆர். பார்த்திபன்

குழந்தையைப் பள்ளிக்கு அழைத்துச் சென்று விட்டுத் திரும்ப அழைத்து வர வேண்டிய பொறுப்பு இப்போது ராகவேந்தரின் தலையில் விழுந்திருக்கிறது. 'சுகமான சுமை' என்றாலும் "எந்த நாளையும் என் விருப்பத்திற்கு திட்டமிட முடிவதில்லை. வேறு எங்கு போனாலும் பேரனின் பள்ளிக் கூடம் முடியும் நேரத்தை மனதில் கொண்டு அரக்கப் பரக்க வந்து விட வேண்டியிருக்கிறது" என்கிறார் பரிதாபமாக. வேறு ஊரில் நெருங்கிய உறவினர் மற்றும் நண்பர் வீட்டு விசேஷங்களுக்குப் போனாலும் ஏதோ தன் கடமையிலிருந்து தான் தவறியதாக மகனே கூறுவது மேலும் கொடுமையாகப் படுகிறது அவருக்கு.

சௌதாமினி தன் கணவனுடன் தனிக் குடித்தனம் சென்று விட்டாள். காரணம் இதுதான். "நம்ம குழந்தையைப் பார்த்துக்க முடியல்லேன்னு சொன்னாங்க உங்கம்மா. சரின்னு மனதைக் கல்லாக்கிகிட்டு குழந்தையை க்ரெஷ்ஷில் விட்டோம். ஆனா இப்போ தன் பெண்ணோட குழந்தையை மட்டும் எப்படிப் பார்த்துக்க முடியுதாம்?" என்று தன் கணவனிடம் நியாயம் கேட்ட சௌதாமினியின் தொடர் நடவடிக்கைதான் தனிக் குடித்தனம். அவரது மாமியாரான சுந்தரியோ "நான் என்ன செய்ய? உடம்பு முடியாமல்தான் என்மகள் வயிற்றுப் பேத்தியைப் பார்த்துக் கொள்கிறேன். மாப்பிள்ளை பிடிவாதமாக தன் குழந்தையை க்ரெஷ்ஷில் விடக் கூடாது என்கிறார். "நீ மட்டும் இவளைப் பார்த்துக்கல்லேன்னா என் வேலையை விட வேண்டியிருக்கும்மா" என்று மகள் அழும்போது அவளை விட்டுக் கொடுக்க முடியல்லேயே" என்று வருத்தப் படுகிறார்.

பத்மாவின் சோகமும் இந்த வகைதான். "ஓய்வு பெற இரண்டு வருடங்கள் இருக்கும் போதே என் ஆசிரியை வேலையை விட்டு விட்டேன். காரணம் என் உடல்நலக் குறைவு. மகனின் குழந்தைகள் வளர்ந்து விட்டவர்கள். அவர்களால் எந்தப் பிரச்னையும் இல்லை. ஒருநாள் மாப்பிள்ளைக்கு இந்த ஊரில் மாற்றலானது. மகளும் தன் வேலையை இந்த ஊருக்கே மாற்றிக் கொண்டு வந்து விட்டாள். அவர்களது குழந்தையைப் பகலில் பார்த்துக் கொள்ளும் பொறுப்பு இப்போது என் தலையில். இதனால் என் உடல் ஆரோக்கியம் ரொம்பவும் சீர்கெட்டு வருகிறது" என்கிறார் பத்மா.

தன் குழந்தை பாசம் மிக்க, பாதுகாப்பானவர்களின் கைகளில் இருக்கிறது என்கிற நிம்மதியுடன்தான் இந்தப் பெண்கள் வேலைக்குப் போகிறார்கள். ஆனால் அந்த நிம்மதிக்கான விலையை அவர்களின் பெற்றோர் கொடுக்க வேண்டியிருக்கிறது. பெண்ணின் திருமணம், பிரசவம் ஆகியவற்றுடன் தன் முக்கியப் பொறுப்புக்கள் தீர்ந்து விட்டன என்று எண்ணும் அவர்களுக்கு இந்த 'எதிர்பாராத பொறுப்பு' சேர்கிறது. மாமனார், மாமியாரை விட அதிக சலுகைகளை பெற்றோரிடம் எடுத்துக் கொள்ள முடிகிறது என்பதால், இந்தப் பெற்றோரின் பொறுப்புக்களும் கூடுகின்றன.

- ஜி.எஸ்.எஸ்.

## புதினா சாம்பார்

**தேவையான சாமான்கள்:** துவரம் பருப்பு- ¼ ஆழாக்கு, தனியா – 2 மேஜைக் கரண்டி, கடலைப் பருப்பு – 1 மேஜை கரண்டி, உளுத்தம் பருப்பு – 1 மேஜைக் கரண்டி, மிளகு – ¼ மேஜைக் கரண்டி, மிளகாய் வற்றல் – 2, பச்சை மிளகாய் – 2, தேங்காய்த் துறுவல் – 1 கரண்டி அளவு, புளி – எலுமிச்சங்காய் அளவு, மஞ்சள் பொடி – 2 சிட்டிகை, உப்பு – தேவையான அளவு, புதினா இலை – 1 பிடி அளவு.



**செய்முறை:** துவரம் பருப்பை குழைய வேக வைக்கவும். வாணலியில் எண்ணெய் விட்டு, பெருங்காயம், தனியா, மிளகாய் வற்றல், கடலைப் பருப்பு, உளுத்தம் பருப்பு, மிளகு இவற்றை சிவக்க வறுத்துக் கொண்டு புதினா இலை, பச்சை மிளகாயைப் போட்டு நன்றாக வதக்கிக் கொள்ளவும். இதனுடன் தேங்காயைச் சேர்த்து மிக்ஸியில் அரைத்துக் கொள்ளவும். பாத்திரத்தில் புளி கரைத்து விட்டு, உப்பு, மஞ்சள்பொடி போட்டு நன்றாகக் கொதிக்க விடவும். வெந்த பருப்பையும், புதினா விழுதையும் சேர்த்து 5 நிமிஷம் கொதித்தவுடன் இறக்கி வைத்து கடுகு, உளுத்தம் பருப்பு தாளிக்கவும்.

இதில் புளி ஜலம் கொதிக்கும் போது, முருங்கைக்காய், வெண்டைக்காய், கத்தரிக்காய், உருளைக்கிழங்கு இதில் ஏதேனும் ஒன்றைத் தானாகப் போடலாம்.

-தேவகி

# "சங்கீத ஞ்ஞானமு..."

உஷா ஸ்ரீகுமார்

"மாப்பிள்ளை விட்டாருக்குச் சங்கீதத்துல அசாத்திய ஈடுபாடு... நல்ல நாதஸ்வரமும், ரிசப்ஷனுக்கு "ஏ" கிளாஸ் கச்சேரியும் ஏற்பாடு பண்ணிட்டா போதும்" என்று வெங்கு மாமா சொன்ன போது வாழ்க்கையில் இப்படியொரு 'சிச்சுவேஷனில்' மாட்டிக் கொண்டு விழிக்க வேண்டி வரும் என்று நான் கனவில்கூட நினைக்கவில்லை.



கல்யாணத்தில் ஊஞ்சலின் போது கீச்சுக் குரலில் என் கணவரின் அத்தைப் பாட்டி பாடிய 'பலுகே பங்காரமாயனா'வை புகுந்த வீட்டிற்குள் நுழைந்தவுடனே பாராட்டியதன் விளைவு "ரங்கம் நாட்டுப் பொண் சமர்த்து...



நல்ல சங்கீத ஞானம் இருக்கு" என்ற பட்டம். மேலும் என் 'ஐஸ்'ஸால் குளிர்விக்கப்பட்ட என் பெரிய மாமியாரும், சின்ன மாமியாரும் பாடிய குறையொன்றும் இல்லை... மறைமூர்த்தி கண்ணா"வை (எக்கச்சக்கக் குறைகள்... ராகத்திலும், தாளத்திலும்) மெய்யுருகி ரசிப்பதாக பாவனை செய்து விட்டு "தங்கமான பெண்..." பட்டத்துடன் ஜாலியாக ஜம்ஷெட்பூர் கிளம்பிப் போய் ஏழு வருடங்கள் நிம்மதியாகக் குடித்தனம் பண்ணினேன்.

திடீரென்று அன்புத் தோழிகளுடன் அரட்டை, மெரினா கண்டல், டிரைவ்-இன் மசால் தோசை, அம்மாவின் ஸ்பெஷல் பகாளா பாத், மெரீனா டிராமாக்கள், ராசி புடைவைகள், சரத்குமார் சினிமாக்கள் போன்ற கிட்டத்தட்ட நான்கு டஜன் 'சின்னச் சின்ன ஆசைகளால்' உந்தப்பட்டு என் கணவரை ஒரு பக்கமாய் அரிக்க ஆரம்பித்தேன். விளைவு.. ஆறே மாதத்தில் சென்னையில் புதிய வேலை... மைலாப்பூரில் இரண்டாவது மாடியில் உள்ள அளவாக மெட்ரோவாட்டர் வரும் ஒரு இரண்டு பெட்ரூம் சொர்க்கத்தில் (!) புதுக்குடித்தனம்.

சிறிதே பரிச்சயமுள்ள பக்கத்து உறவினர்களுடன் உறவைப் புதுப்பித்துக் கொள்ள ஆரம்பித்தேன். உறவினர் வீட்டுத் திருமணத்தில் சந்தித்த என் கணவரின் அத்தையை, "மெட்

ராஸ் வந்தா நம்ம வீட்ல கட்டாயம் தங்கனும். கடை கண்ணி, கோவில் குளம், பஸ் ஸ்டாண்டு, சங்கீத சபாக்கள் எல்லாமே ரொம்பப் பக்கம், உங்களுக்கு சங்கீதம்னா கொள்ளை ஆசை யாச்சே... வரும் டிசம்பர் சீசனை நம்ம வீட்ல தங்கிண்டு அனுபவியுங்களேன்,'' என்று அழைத்த போது என் கணவர் என்னைப் பார்த்து அடிக்குரலில் "தவளை... தவளை" என்றதன் முழு அர்த்தம் அப்போது விளங்க வில்லை. அந்த டிசம்பர் பிறந்தவுடன்தான் புரிந்தது!

அபாய அறிவிப்பு என் மாமியாரின் கடித ரூபத்தில் வந்தது.

"கமலு அத்தையும், அலமு அத்தையும் டிசம்பர் சீசனில் கச்சேரிகள் கேட்க வேண்டு மென்று ரொம்ப நாளாக ஆசைப்படுகிறார் களாம். நீங்கள் வசதியாக மெட்ராசில் இருக் கும்போது அவர்கள் எதற்காகக் கண்ட இடத் திலும் தங்கி அவஸ்தைப்பட வேண்டும்? நீ அவர்களுக்கு வேண்டிய எல்லா வசதிகளை யும் பிரியத்தோடு செய்து தர மாட்டாயா என்ன?

"இதோ உங்களை ஆவலுடன் எதிர்பார்த் துக் கொண்டிருக்கிறாள்" என்று உன் சார்பாக நானே சொல்லி விட்டேன். கவனமாக அவர் கள் மனம் கோணாமல் நடந்து கொள். ராஜுவை வரும் வியாழக் கிழமை ரயில்வே ஸ்டேஷ னுக்குப் போய் அவர்களை அழைத்து வரச் சொல்..."

ராக்ஃபோர்ட் எக்ஸ்பிரஸில் ஏழெட்டு பெட்டிகள், கூடைகள், பிளாஸ்க் சகிதம் வந்து இறங்கியவர்கள் - அலமு அத்தை அவர் கணவர் நாணா அத்திம்பேர், கமலு அத்தை, கப்பு அத்திம்பேர் மற்றும் கமலு அத்தையின் ஆசைப் பேத்தி பர்வதவர்த்தினி என்கிற பிங்க்கி!

இவர்களைப் பற்றிய ஒரு சிறிய இன்ட் ரொடக்ஷன். மீட் அலமு அத்தை அண்ட் நாணா அத்திம்பேர்! என் கல்யாணத்தின் போது "காப்பி தண்ணியாயிருக்கு... இட்லி வேகவில்லை. வடை காலணா சைஸ்..." என்று சம்பந்தி சண்டைக்கு அஸ்திவாரம் போட்டு ஆரம்பித்து வைத்த அன்யோன்ய தம்பதியினர்...

இவர்கள்... கமலு அத்தை கப்பு என்கிற கப்புரத்தினம் அத்திம்பேர் தம்பதியினர். வாய் மூடாமல் பேசுவதில் சாதனை புரிந்தவர்கள் பட்டியலில் முதலிடத்தில் இருப்பவர் கமலு அத்தை... கின்னஸ் புக்கில் அவர் பெயர் அடுத்த வருஷம் வரப் போகிறது! தூக்கத்தில் கூட பேசிக் கொண்டே இருப்பார் என்று கேள்வி...

இதோ கப்பு அத்திம்பேர்... வாயைத் திறந்து இவர் பேசுவதே அபூர்வம்! அப்படிப் பேசி விட்டாலோ எதிரே நிற்பவர் மீது சிவப்பு நிற வெற்றிலைக் காவியால் "ஸ்ப்ரே-பெயின்ட்டிங்" நிச்சயம்.

இவள்... பிங்க்கி. வயது நான்கு. அப்பா வுக்கு ஆக்ராவுக்கு டிரான்ஸ்பர் கிடைத்து விட்டதால் கமலுப் பாட்டியிடம் வளரும் செல்லக்குட்டி. வருங்கால பத்மா சுப்பிரமணி யம் என்று கமலு அத்தை நம்பிக் கொண்டிருப் பவள் இந்தப் பிங்க்கி.

அத்தைகளின் மூட்டை முடிச்சுக்கள் பாதி வீட்டை அடைத்துக் கொள்ள ஒருவழியாக வந்த விருந்தினர்கள் எங்கள் 'ப்ளாட்'டில் செட்டில் ஆனார்கள். பெட்ருமை ஸ்ரீரங்கம் சிஸ்டர்ஸ், 'அலமு அண்டு கமலு' பிடித்துக் கொள்ள அவர்கள் கணவன்மார்கள் ஹாலில் பவானி ஜமுக்காளம் விரித்துக் கொண்டு "தத்தரின்னன்னா" பாடியபடி சீட்டாடினார் கள், பிங்க்கி துணையுடன்!

"டேய் ராஜு... இந்த ம்யூசிக் அகாடமி, மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ், நாரதகான சபா, ரசிக ரஞ்சனி எல்லாத்துக்கும் சீசன் டிக்கெட் எடுத்துடு. நான் நங்கநல்லூர் வரைக் கும் ஒரு ஜோலியாப் போயிட்டு வர்றேன்... எங்கேடா அந்தப் பர்ஸ்... சரி காணலியா? விடு... அப்புறம் தரேன்... மறக்காம வாங்கிடு..."

ஸ்ரீரங்கம் எக்ஸ்பெடிஷன் டீம் லீடர் கப்பு அத்திம்பேர் ஆர்டர் போட என் கணவர் "இன்னிக்கே அரேஞ் பண்ணிடறேன், அத்திம்பேர்" என்று கணக்கு வாத்தியாரைக் கண்டு மிரளும் (அந்தக் கால) எலிமெண்டரி ஸ்கூல் பையனைப் போல சொல்லி விட்டு ஆபீசுக்கு ஓடியவர் மத்தியானமே போன்



பெண்ணுக்குப் பதினைந்து வயதிலும், பிள்ளைக்கு இருபது வயதிலும் எல். பி. ஜி. கேஸ் புக் பண்ணி விடுங் கள். 5 வருடம் கழித்துக் கிடைக்கும். பெண் திருமண மாகிப் போகும்போது கஷ்டமின்றி சமைக்கலாம். பிள்ளையும் தனிக்குடித்தனம் போக வசதிதானே!

- ஆர். பார்வதி





இட்லிப் பொடி அரைக்கும்போது சிறிது கொப்பரைத் தேங்காயையும் வறுத்து அரைத்தால் நல்ல வாசனையாக இருக்கும்.

- ராணி வின்சென்ட்

பண்ணினார்...

"சீசன் டிக்கெட்டிற்கு ஏற்பாடு பண்ணி இருக்கேன். ரெண்டு நாள்ள தண்டபாணி கொண்டு வருவான். அதுக்கு முன்னாடி அவன அனுப்பறேன். அவன்கிட்டே ஒரு மாசத்துக்கான துணிமணிகளை பேக் செய்து அனுப்பு. கர்னாடகா டூர் போறேன்... மேனேஜ் பண்ணிக்கோ... ஆல் தி பெஸ்ட்... என்ஜாய் பண்ணு டிசம்பர் சீசனை..." கொழுப்பு! ஹூம்...

"என்ன சமையல் செய்யட்டும் அத்தே..." மரியாதைக்குத்தான் கேட்டேன்.

"கத்தரிக்காய் சேர்க்காதே சீதா... அப்புறம் இந்த பூசணிக்காய், முருங்கைக்காய், சேம்பு இதெல்லாம் உடம்புக்கு ஒத்துக்கறதில்லே..."

"இங்கிலீஷ் காய்கறிகளை சமைச்சுடாதே... எனக்கு அந்தக் கண்றாவியெல்லாம் ஆகாது..."

ஏதாவது காய் மிஞ்சியிருக்கிறதா என்ன?

"குக்கர்ல சாதம் வைக்காதே... சூடு."

"ரொம்ப தேங்காய் சேர்க்காதே... எனக்கு வாய்வு வரும்."

எனக்கு மயக்கம் வந்தது.

ஸ்ரீரங்கம் சகோதரிகள் இப்படியென்றால் நாணா அத்திம்பேர் ஒவ்வொரு வேளை உணவிற்கு முன்னும் நான்கு சப்பாத்திகளை நெய்யில் முக்கிச் சாப்பிடும் ரகம்.

"ரங்கண்ணா சொன்னான். சப்பாத்தி சாப்பிட்டா 'ஷுகர் கம்ப்ளெயின்ட்' வரதில்லையாம்" என்றார்.

சுப்பு அத்திம்பேரோ "அரிசிச் சாப்பாடு சாப்பிட்டால் தொப்பை போட்டு விடும்" என்று சொல்லிப் பூதஞ்சித்தனம் செய்து கொண்டு மூன்று வேளையும் இட்லி, தோசை, ஊத்தப்பம், சேவை வகைகளையே வக்கணையாக விழுங்கும் ஆசாமி! இவைகளில் அரிசிச் சத்தே இல்லை என்றே சத்தியம் செய்தார்!

பிங்கிக்கோ மூன்று வாய் சாதம் சாப்பிடும் முன் முப்பது கதைகள் சொல்லியாக வேண்டும். "கொழந்தை பட்டினியாக் கிடக்கு, பாவம்" என்று பாட்டி புலம்புவார். ஆனால் அவள் வேளைக்கு ஒரு பேக்கெட் க்ரீம் பிஸ்கெட் சாப்பிடும் விஷயத்தை ஏனோ மறந்து விடுவார்!

"இன்னிக்கு உப்பிலியப்பனுக்கு உப்பில்லா விரதம்..." என்ற கமலு அத்தை "பால், பழம் எல்லாம் வயத்துக்கு ஒத்துக்கறதில்லை. "பயத்தங்கஞ்சியும், ரவாகேசரியும் கிளறிடு... நெய்யே சேர்த்துக்கோ டால்டா விட்டா வயத்தைப் பிரட்டும்" என்றார்.

அடுத்த வெள்ளிக்கிழமை அலமு அத்தை சந்தோஷிமா விரதமிருக்க "பால் போளி, பூரி, கூட்டு, அவல் கேசரி, சேமியா பாயசம்..." இவை அவரது விரத மெனுவின் ஒரு பகுதி! புளிப்பு சேர்க்கக் கூடாதல்லவா...

அன்று காலை தண்டபாணி சீசன் டிக்கெட்டுகளைக் கொண்டு வந்து கொடுக்க... நான்கு மணி நேர சூடான விவாதத்திற்குப் பிறகு யார் யார், எந்த வேளை, எந்த சபாவில் நடக்கும் கச்சேரிக்குப் போவது என்பது பற்றி ஒருவிதமான உடன்படிக்கைக்கு வந்தார்கள்.

"நீயும் கச்சேரிக்கு வரயா, சீதா?" என்ற அலமு அத்தையிடம் அவர் சகோதரி, "போடி... அவளுக்கு ஆயிரம் வேலை... நம்மளை மாதிரி வேலையத்தவளா... இந்த பிங்கிக் குட்டியையும் பாத்துக்கோம்மா... இவளுக்கு அங்கே உக்காந்து கச்சேரி கேட்க பொறுமையே கிடையாது... சமத்தா இருடி பிங்கி... ஆன்ட்டி வீடியோ போட்டுக் காட்டுவா... ஐஸ்க்ரீம் வாங்கித் தருவா" என்று கூறியபடி கிளம்பினார்.

ஒரு மந்திரியின் அட்டவணையைப் போல பிஸியாக இருந்தது இவர்களது தினசரி ப்ரோக்ராம்கள்!

காலையில் ஒன்றாம், இரண்டாம் காப்பி முடித்த கையோடு டிபன் - பிறகு காலை பஜனைகள், லெக்சர் டெமான்ஸ்ட்ரேஷன். அப்படியே மாம்பலம், மந்தைவெளி, அடையாறு சொந்தக்காரர்கள் வீடுகளுக்கு ஒரு குட்டி விசிட் - மதிய உணவிற்குப் பிறகு ஒரு சிறிய தூக்கம். மாலை டிபன் காப்பியை முடித்தவுடன் ஜோராக டிரெஸ் பண்ணிக் கொண்டு சாயங்கால, இரவுக் கச்சேரிகள்... டான்ஸ் ப்ரொக்ராம்கள்...

வீட்டுக்கு வந்து சாப்பிட்ட கையுடன் ஒரு பெரிய அலசல் கச்சேரி... இதில் அலசப்படும் விஷயங்கள்... அன்றைய பாடகரின் தோடிராக ஆலாபனை, அன்றைய சமையல், பாடகியின் புடவை ரகம், பக்கத்து சீட் மாமியின் நெக்லஸ் டிசைன், சபாவிற்கு வந்த தெரிந்த தெரியாத மாமிகள், சீமாச்சுவின் ஓடிப் போன மகள், விச்சு பெண் சீமந்தம், சக்கு நாட்டுப் பெண்ணின் அகம்பாவம்...

சங்கீத சர்ச்சையாக ஆரம்பிக்கப்பட்டு

ஒரு 'ஹெட் ரோலிங் செஷன்'னாக (மண்டையை உருட்டும் மாநாடு) மாறும் இந்தப் பேரவை கிட்டத்தட்ட நள்ளிரவில் கலையும். அப்போது பார்த்து நாணா அத்திம்பேர் 'மூட்' வந்து பஞ்சரத்னக் கீர்த்தனையைப் பாட ஆரம்பிக்க அதற்குப் பக்கவாத்தியமாக ஒலிக்கும் சுப்பு அத்திம்பேரின் குறட்டை! அக்கம் பக்கத்தினர் என்னவோ ஏதோ என்று ஜன்னலைத் திறந்து பார்ப்பார்கள்.

ஒவ்வொரு நாள் கமலு அத்தை கள்ளக் குரலில் "தாயே... யசோதா..." பாட ஆரம்பிக்க அதற்கு பிங்கி 'தையாத்தக்கா' என்று ஆட ஆரம்பிக்க "அடுத்த வருஷம் இவளுக்கு நிச்சயம் ஒரு அரங்கேற்றம் பண்ணிடணும். ஒவ்வொண்ணும் ஆடறதுகளோ... இவளிடம் பிச்சை வாங்கணும்" என்று பெருமைப்பட்டுக் கொள்வார்கள் ஆளாளுக்கு.

மார்கழி பிறக்க... அலமு அத்தைக்குப் பிறந்தது குஷி...

"நீ தூங்குடி கோந்தே... (என்னைத்தான்!) நான் கார்த்தால டிகாக்ஷன் போடறேன்" திமர்க் கரிசனம் கண்டு உச்சிகுளிர்ந்து விடியற் காலை நேர சொப்பனங்களை அனுபவித்துக் கொண்டிருந்தேன்.

வாசலில் ஒரே சப்தம்...

வேறொன்றுமில்லை... டிகாக்ஷன் போட்டகையுடன் எங்கள் இரண்டாவது மாடி ப்ளாட்(!) வாசலைத் தெளித்து கோலமிட்டு அதில் சாணி உருண்டைகளில் பூசணிப் பூவைச் சொருகி வைத்திருக்கிறார்! (எங்கிருந்து சம்பாதித்தாரோ?)

அதில், அதிகாலை இருட்டில் இறங்கி வந்த மூன்றாவது மாடி பல்தேவ் சிங் காலை வைத்து வழுக்கி விழுந்து இடுப்பை ஒடித்துக் கொள்ள...

ஒரே காச்மூச்! 'வக்கீல்.. கேஸ்... போலீஸ்.. நஷ்டயீடு' போன்ற வார்த்தைகள் மட்டுமே புரிய நான் வாசல் பக்கமே எட்டிப் பார்க்கவில்லை.

அன்று காலை... இரண்டு அத்திம்பேர்களும் ஜோடியாக 'மிஸ்ஸிங்'! எங்கே அந்தர்த்தியானமானார்களோ காப்பி கூடக் குடிக்காமல் என்று நாங்கள் வியந்திருக்க விடை வந்தது முனியம்மா மூலம்...

"நம்ப வூட்டு சாருங்க ரெண்டு பேரும் தெருக்கோடி கிருஷ்ணன் கோயில் பஜனைல செம ஜோராப் பாட நம்ம தங்கவேலு மாடு மிரண்டு போயி அவனையும், பால் பாத்திரத்தையும் ஒரே ஒதையா ஒதச்சிட்டு தெருப் பூரா ஓடுதும்மா... ஒரே கலாட்டா போயேன்.." என்றாள்.

இதற்கிடையே அத்தைகள் அன்று கோவுடன் அவர்கள் ஆசைப்படி ஒரு குட்டி 'காஞ்சி, திருக்கழுக்குன்றம் டூர்' கிளம்ப கைடு அடியேன்! கழுகு, தங்க வெள்ளிப் பல்லிகள், மகான் தரிசனம், குடலை இட்லி பலகாரம், வரதராஜர் காமாட்சியம்மன் தரிசனம் என்று எல்லாவற்றையும் ஒருவழியாக முடித்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்த போது இரவு மணி பதினொன்றரை. கண்ணாடியைப் பார்த்தேன். தலை லேசாக நரைத்திருந்தது. ஊஹூம். பிரமை!

நாரதகான சபா ஹாலில் சுதா ரகுநாதன் கச்சேரிக்குப் போய் விட்டு வந்த அலமு அத்தை "சுதா கட்டிண்டு இருந்த புடவை மாதிரியே விசாலிக்கும் ஒண்ணு வாங்குவோம், வா..." என்று என்னைக் கட்டாயப்படுத்தி நல்லி, குமரன், ராசி, வரதராம்ஸ் என்று ஒரு ரவுண்ட் அடித்தார்.

அத்தனை கடைகளிலும் ஷெல்ஃபைக் காலி செய்து எல்லாப் புடவைகளையும் ஒற்றையாகப் பிரித்துப் பார்த்து விட்டு,

"இது கலர் கொஞ்சம் டார்க்..."

"இதுல தலைப்புதான் வேறு மாதிரி..."

"கரை ரொம்ப கெட்டி."

என்று அபிப்ராயங்கள் சொல்லிக் கழித்துக் கட்டியபின்,

"அது ஸ்பெஷல் ஆர்டராக இருக்கும்" என்று சமாதானம் செய்து கொண்டார்.

இப்போதெல்லாம் நான் இந்தக் கடைகளுக்குப் புடைவை வாங்கப் போனால் சேல்ஸ் மேன்கள் என்னை ஒருவிதக் குரோதத்துடன் பார்க்கிறார்கள்.

முனியம்மா நோட்டீஸ் கொடுத்து விட்டாள்.

"பாத்ரூம் பூரா ஒரே வெத்தலைக் காவியை துப்பி ஊழல் பண்ணி வச்சா நான் கழுவ மாட்டேன். அ... ஆங்..." என்றவள் என் பரிதாப நிலையைப் பார்த்து விட்டு. "இதுங்க இருக்குற வரைக்கும் துட்டு சேர்த்திக் கொடு...

## தயாரிப்பாளர்களுக்கு....



பெட்ஷீட், ஜமுக்காளம் தயாரிப்பாளர்கள் மேல்பக்கம், கீழ்ப்பக்கம் என்பதற்கு ஏதாவது வித்தியாசமாகத் தயாரித்தால் நல்லது. எப்படி இருந்தாலும் தலைக்கு இருக்கும் சுத்தம் காலுக்கு இருக்காது. எனவே ஒரு பக்கம் சின்ன பார்டர், கீழே பெரிய பார்டர் என்று வைத்தால் சுலபமாக வித்தியாசம் கண்டுபிடித்துக் கொள்ளலாமே!

- ராணி வின்சென்ட்

டிரஸ்ட் ப்ளஸ் எனில்

உங்கள் வீட்டிலேயே எங்கள் சேவை



## INVITES DEPOSITS

Fixed Deposits will be accepted at the following rates of interest and subject to the terms and conditions as indicated in the form of application of deposit available at the administrative Office and other branch offices of the Company.

### DEPOSIT SCHEMES

| CUMULATIVE DEPOSIT SCHEME | | | FIXED DEPOSIT SCHEME | | |
|---|---|---|---|---|---|
| Period in Months | For Rs. 1000 Deposit Amount Payable on Maturity | Effective Annual Yield | Period in Months | Rate of Interest per annum Monthly | Quarterly |
| 12 Months & 1 Day | Rs. 1150/- | 15.00% | 12 Months & 1 Day | | |
| 24 Months & 1 Day | Rs. 1321/- | 16.05% | 24Months & 1 Day | | |
| 36 Months | Rs. 1518/- | 17.27% | 36 Months | | |
| 48 Months | Rs. 1745/- | 18.61% | 48 Months | 14% | 14.16% |
| 60 Months | Rs. 2006/- | 20.12% | 60 Months | | |

| RECURRING DEPOSIT SCHEME (Minimum Rs. 500/-) | | | |
|---|---|---|---|
| Period in Months | Rate of Interest Per Annum | Maturity Value (for Rs. 500) | For Every Additional Rs. 100/- |
| 12 Months & 1 Day | 14% | Rs. 6480/- | Rs. 1296/- |
| 24 Months & 1 Day | | Rs. 13915/- | Rs. 2783/- |
| 36 Months | | Rs. 22470/- | Rs. 4494/- |

1. Interest warrants payable at par at all branches of SBI.

Information required to be specified as per Non Banking Financial Companies (Reserve Bank) Direction, 1977 and Non Banking Financial Companies and Miscellaneous Non-Banking Financial Companies (Advertisement) Rules, 1977, are given below.

A. Name of the Company : The Investment Trust of India Ltd.

B. Date of Incorporation : 2nd August 1946

C. Business carried on by the Company and its subsidiaries with details of branches or units, if any :

Business : Hire Purchase Financing, Investments, Leasing, Industrial Financing, Mortgage Financing etc.

Subsidiary : I.T.I. Pioneer AMC Ltd. And I.T.I. Capital Markets Ltd.

Branches : Refer to Head Office.

D. Brief Particulars of the Management of the Company.

The Company is managed by the Managing Director under the supervision, direction and control of the Board of Directors.

E. Name, address & occupation of the Directors.

Mr. B.H. KOTHARI, Chairman & Managing Director, "Kothari Bagh", 11, Nungambakkam High Road, Madras 600 034, Industrialist. Mr. A.L. MUDALIAR, "Avanti", 858, Poonamallee High Road, Kilpauk, Madras 600 010, Business Executive & Management Consultant. Mr. G.K. SUNDARAM, "Rasakondalu" Circuit House Road, Coimbatore 641 018, Industrialist. Mr. G. CHIDAMBAR, 101-A, Janakpuri, 2nd St. Off : Velachery Road, Madras 600 032, Former Managing Director-LIC. Mr. N. SRINIVASAN, T-18, Sixth Avenue, Besant Nagar, Madras 600 090, Chartered Accountant. Mr. RAM GANAPATHI, No. 27, "Ashok Crescent", D.L.F. Kudap Enclave, Phase 1, Gurgaon, Haryana - 122 001, Former Chairman of BIFR. Mr. C.R. RAMAKRISHNAN, "Meenakshi", No. 4, Sir P.S. Sivasamy Road, Mylapore, Madras 600 004, Former Joint Managing Director of Larsen & Toubro Ltd. Mr. M.R. SHAH, A-23/74, Woodlands Apartments, Peddar Road, Bombay 400 026, Business.

# எங்களை வீட்டுக்கு அழைத்து
# முதலீடு செய்யும் அளவுக்கு எங்கள் பிக்செட் டெபாசிட்டுகளில்
# மக்கள் தீவிர ஆர்வம் காட்டுகின்றனர்.

➢ இத்தகைய சேவையை வழங்குவதாக எல்லா நிதி நிறுவனங்களுமே பெருமை கொள்ள முடியாது. உங்கள் ஊரில் எங்கள் கிளை இருந்தால், தொலைபேசியில் தொடர்பு கொள்ளுங்கள். ITI-யில் முதலீடு செய்வது பற்றிய முழு விவரங்களுடன் நாங்களே உங்கள் வீட்டுக்கு வருவோம். அதோடு எங்கள் சேவை முடிந்து விடாது. அத்துடன் வரும் மற்ற சிறப்புகளையும் சற்றே பாருங்கள். ➢ இலவச வரி ஆலோசனை *. எங்களது 35 கிளை அலுவலகங்களின் மூலம் எங்களுடன் நீங்கள் எளிதில் தொடர்புகொள்ளும் வசதி. ➢ இவை அனைத்துமே ITI-யின் டிரஸ்ட் ப்ளஸ் தரும் கூடுதல் நன்மைகளாகும். இந்தக் காரணங்களால்தான் தென்னிந்தியாவிலுள்ள பெரும்பாலான குடும்பங்கள் ITI-யில் முதலீடு செய்வதில் முனைந்துள்ளன. ➢ இது நம்பிக்கையின் அடிப்படையில் உருவான மரபு. இப்படி இன்னும் எத்தனையோ. இவற்றை எல்லாம் நீங்கள் வரவேற்பீர்கள் என்பதில் சந்தேகம் என்ன? ITI எனில் கூடுதல் நன்மைகள் பல.




## தி இன்வெஸ்ட்மென்ட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா லிமிடெட்.

ஒரு H. C. கோத்தாரி குழுமக் கம்பெனி

மஷ்கூர் பில்டிங்ஸ், 1, கிருஷ்ணமாசாரி சாலை, நுங்கம்பாக்கம், சென்னை-600 034.
தொ.பே: 8276297, 8274871, 8274885, 8271691

* இந்த சேவை சென்னைக்கு மட்டுமே விஸ்தரிக்கப்பட்டுள்ளது.
இந்த சேவையால் ஏற்படும் பொறுப்புகளுக்கு ITI பொறுப்பாளி அல்ல.

Profits of the Company before and after making provisions for tax for the three financial years immediately preceding the date of advertisement (G) Dividend declared by the Company in respect of the said year (Rupees in lakhs percentage)

| | Profit before Depreciation & taxation | Profit before taxation | Profit after taxation | Amount (Rs. in lakhs) | Percentage |
|---|---|---|---|---|---|
| | (Rupees in lakhs) | | | | |
| 3-94 | 752.74 | 434.91 | 411.91 | 36.27 | 35 |
| 3-93 | 474.37 | 307.08 | 291.08 | 36.27 | 35 |
| 3-92 | 312.81 | 187.44 | 183.19 | 36.10 | 28 |

Summarised financial position of the Company as appearing in the two latest Audited Balance Sheets:

| LIABILITIES | 31-3-94 (Rs. in lakhs) | 31-3-93 | ASSETS | 31-3-94 (Rs. in lakhs) | 31-3-93 |
|---|---|---|---|---|---|
| Share Capital | 217.88 | 217.67 | Fixed Assets | 3239.01 | 2438.88 |
| Reserves & Surplus | 1233.31 | 897.35 | Investments | 741.13 | 215.66 |
| Secured Loans | 3229.69 | 2766.40 | Current Assets, Loans & Advances | 8671.19 | 6086.06 |
| Unsecured Loans | 5290.77 | 2802.41 | Miscellaneous Expenditure | 14.79 | 16.22 |
| Current Liabilities | 2535.08 | 1916.60 | | | |
| Provisions | 159.39 | 156.39 | | | |
| | 12666.12 | 8756.82 | | 12666.12 | 8756.82 |

Note : Contingent Liabilities not provided for
(i) On partly paid Shares and Debentures Rs. 5.08 lakhs
(ii) Sales tax on lease contracts under writ petitions Rs. 22.35 lakhs

I. The amount which the company can raise by way of deposit under Reserve Bank of India directions Rs. 143.64 crores.
Aggregate of deposits actually held on the last day of the immediately preceding financial year, viz 31-3-94 Rs. 37.88 crores

J. The Company has no over due deposits other than unclaimed deposits.

K. It is hereby declared that :
(i) The company has complied with the applicable provisions of the directions.
(ii) The compliance with the directions does not imply that the repayment of deposits is guaranteed by the Reserve Bank of India.
(iii) The deposits accepted by the Company are unsecured and rank pari passu with other unsecured liabilities.

The above text of this advertisement has been approved by the Board of Directors on 27-5-94

(By order of the Board)
For The Investment Trust of India Limited

F.S. Balasubramanian
Chief Executive and Secretary.

Note : A copy of this text duly signed by a majority of the Directors of the Company has been filed with the Reserve Bank of India, Bangalore.

அப்படியே ஒரு புடவையும் தா... அட்ஜஸ்ட் பண்ணிக்கறேன்" என்றாள் பெரிய மனசு பண்ணி.

அந்த வாரக் கடைசியில் என் மகள் ஆர்த்தியின் பர்த்டே....

"என்னது கேக்கா? முட்டை கண்ராவியெல்லாம் சேர்த்துப் பண்ணியிருப்பான்... சிச்சீ... வீட்டுக்குள்ளேயே சேர்க்கக் கூடாது... பேசாம மைசூர்பாகு கிளறிடு..." பர்த்டே பார்ட்டியையே 'வீட்டோட' பண்ணி விட்டாள் அலமு அத்தை!

"ப்ளீஸ் கண்ணு... சொன்னாக் கேளுடீ... அப்பா வந்தவுடன் உன்னை 'வீட்டில் ஃபோக்ஸ்' கூட்டிண்டு போறேன். சமர்த்தில்லியா? வெல்வெட் ஸ்கர்ட் வாங்கித் தரேன். 'பார்பி டால்' செட்டே வாங்கித் தரேன். அழாதேடீ... அட்ஜஸ்ட் பண்ணிக்கோ" என்று மகளைத் தாஜா பண்ணி வைத்தேன்.

ஜனவரி பிறக்க... கச்சேரிகள் கொஞ்சம் கொஞ்சமாக முடிய... தண்டபாணி டிக்கெட் வாங்கி வர (இந்த முறையும் அத்திம்பேரின் பர்ஸ் காணவில்லை) அனைவரும் என்னிடம் பிரியாவிடை பெற்றுக் கொண்டு ராக்ஃபோர்ட்டில் ஏறும் முன் எனக்கு அளித்த அன்புப் பரிசுகள்....

ஒரு ப்ளாஸ்டிக் டப்பா செட் - மூன்றின் விலை பத்தே ருபாய். நன்றி அலமு அத்தை.

ஒரு பஞ்சு மிட்டாய் நிற டூ பை ஒன் ரக பிளவுஸ் துண்டு - மயிலாப்பூர் டேங்க் அருகே வாங்கியவர் கமலு அத்தை.

"ரயிலில் கண்டதையும் வாங்கித் தின்றால் உடம்புக்கு ஆகாது" என்று என்னை சம்பிரமமாக தயிர்சாதம், புளியோதரை, வடாம், இட்லியெல்லாம் செய்து தரச் சொல்லி ஒரு பெரிய டெல்லி டிபன் கேரியர் நிறைய எடுத்துக் கொண்டு கிளம்புமுன் அவர்கள் எனக்கு அளித்த அறிவுரைகளின் சிறிய சாம்பிள்!

"கொஞ்சம் பெரிய வீடாப் பார்க்கச் சொன்னேன்னு ராஜுகிட்டே சொல்லு. நம்ம ஃபேமிலி பெரிசு... அதுக்கு இந்த ப்ளாட் போறுமோ?"

"இது நல்ல ஏரியா. அதுக்காகத்தான் இங்கே கஷ்டமாயிருந்தாலும் தங்கிண்டோம். எல்லாக் கோயில், கடை, கண்ணி, சபாக்களும் கிட்டத்திலேயே இருக்கு பாரு... ஆழ்வார்திருநகரியிலிருக்கும் ஸ்ரீதரும், வால்மீகி நகர் சுந்தரியும் வருந்தி வருந்தி அழைத்தார்கள். நம்மால அலைய முடியறதா சொல்லு?"

"நீயும் சங்கீதம் கத்துக்கோ. இசை ஞானத்தை வளர்த்துக்கோ. ஒரு கச்சேரி கேட்கக் கூட நீ ஆசையா வரேன்னு சொல்லலியே...."

1... 2... 3.... 47... 48... 137... 148... 169" ஒன்று இரண்டு எண்ணினால் கோபத்தை அடக்கலாம் என்று எங்கோ படித்திருந்தேன்.

மாமூல் நிலைக்குத் திரும்பிய வீட்டிற்குள் ஒரு மாதம் கழித்து ஜாலியாக நுழைந்த என் கணவரை வரவேற்றது வீட்டுச் சொந்தக்காரரின் கடிதம்...

"ஒரு மாதத்திற்குள் காலி செய்யவும். சென்னை வருகிறோம்...." என்று பயமுறுத்தியது.

"கவலைப்படாதே... வேறு நல்ல வீடாப் பார்ப்போம். முருகேசன்கிட்டே சொல்றேன். பெரிய வீடாவே பார்ப்போம். இதே ஏரியால... ஸ்கூல், கடை, பஸ் எல்லாம் பக்கம். கன்வீனியன்ட் ப்ளேஸ். வாடகை அதிகமானாலும் பரவாயில்லை. ஹவுஸ் ரென்ட் அலவன்ஸ் ஏறப் போகிறது..." என்றார்.

"வேண்டாம்.. வேண்டவே வேண்டாம். இந்த ஏரியா வேண்டாம். சுற்று வட்டாரம் அஞ்சு மைலுக்குள் ஒரு கடை கண்ணி, கோயில், குளம், முக்கியமா சங்கீத சபா இல்லாத இடத்தில் வீடு பார்ப்போம்... கும்மிடிப்பூண்டி கிட்டேயிருந்தாலும் பரவாயில்லே.. இங்கே வேண்டாம்" அலறினேன்.

"ஹேய்... என்ன ஆச்சு... கூல் டவுன். டேக் இட் ஈஸி..."

"தனியா சமாளிக்க விட்டுட்டு ஜாலியா மைசூர் பங்களூர்ன்னு சுத்திட்டு 'டேக் இட் ஈஸி'யா...? சொல்ல மாட்டீங்க.... உங்களை..."

நெற்றிக் கண்ணைத் திறக்க முற்பட்டேன்.

**கிறிஸ்துமஸ் கோலம்**
**12 புள்ளி - 12 வரிசை**

- ஏ. உமா மகேஸ்வரி

## அன்றாட சோர்வு தரும் வீட்டு வேலைகள் எவ்வாறு...



## ...மாபெரும் வீட்டுபயோக சாதனங்களை உருவாக்க கிராம்டன் கிரீவ்ஸ் நிறுவனத்தை ஊக்குவித்தன.

கிராம்டன் கிரீவ்ஸ் வழங்குகிறது உங்களுக்கு முதல் தரமான வீட்டு உபயோக சாதனங்கள் அணி வரிசை. அன்றாட பணிச் சோர்வுகளை, திறமையாக நீங்கள் சமாளிக்க வேண்டிய தேவைகளைக் கருத்தில் கொண்டு ஒவ்வொன்றும் ஊக்குவிக்கப்பட்டவை.

**கிராம்டன் கிரீவ்ஸ் ஆட்டோமேட்டிக் எலக்ட்ரிக் குக்கர்:** நவீன தொழில் நுட்பம் மூலம் உருவாக்கப்பட்ட இதன் மூலம் ஆவியில் வேகவைத்தல், கொதிக்கவிடுதல் மற்றும் வகைவகையாக சுவைமிக்க மகிழ்வூட்டும் உணவுவகைகள், குழம்புவகைகள், புலவு, உப்புமா, பருப்பு வகைகள், (சாம்பார், ரசம்) தோசைகள், இட்லி போன்ற இன்னும் பல தயாரிக்கலாம். இது தேவையான சமயத்தில் ஆட்டோமேட்டிக்காக வெதுவெதுப்பான நிலைக்கு மாற்றி, உணவுகள் சூடாக குட்டிட பல மணிநேரம் குறைந்த மின் செலவில் வைக்க உதவுகின்றது. இது முற்றிலும் பாதுகாப்பானது.



**கிராம்டன் கிரீவ்ஸ் மிக்ஸர் கிரைண்டர்:** உங்கள் மிகக் கடினமான அரைக்கும் வேலைகளை சுலபமாக சமாளிக்க ஹெவி-டியூட்டி மோட்டார் பொருத்தப்பட்டுள்ளது. அத்துடன் ஒரு ஒப்பற்ற இணைப்புக்காடு வைக்க வசதி.

**கிராம்டன் கிரீவ்ஸ் ஓவன் டோஸ்டர் கிரில்லர்:** ஒரு தானாகவே இயங்கும் கட்டுப்பாடு கொண்ட தெர்மோ ஸ்டாட் 50°c முதல் 300°c வெப்பநிலை அளிவரிசையில், ஒரு குமிழை திருகிய உடனேயே மூன்று விதமான வசதிகளை உங்களுக்கு வழங்குகிறது. 16 லிட்டர் மற்றும் 29 லிட்டர்களில் - இரண்டு விதமான வசதியான அளவுகளில் கிடைக்கின்றது.



உண்மையாகவே ஊக்குவிக்கப்பட்ட ஒரு உன்னத அணிவரிசை-பேட் ரோஸ்லைன்ஸ், மினி கிரைண்டர், சான்ட்விச் டோஸ்டர், காஃபி மேக்கர், பாப்-அப் டோஸ்டர் போன்ற மேலும் பல. கிராம்டன் கிரீவ்ஸ் வீட்டு உபயோகச் சாதனங்கள் உங்கள் வாழ்க்கை அமைப்பை மேலும் மேன்மையாக மாற்றிடவே!



The Thapar Group
**கிராம்டன் கிரீவ்ஸ் லிமிடெட்**
அப்ளையன்ஸஸ் டிவிஷன்,
... 400 042.
... 5784129/5782451/5784211.
... 5783468.





அப்ளையன்ஸஸ்

**உங்களால் ஊக்குவிக்கப்பட்டவை. எங்களால் உருவாக்கப்பட்டவை.**

ULKA-16309-TAM-R

# சிறு நீரகத்தில் கற்களா?

# தேவையில்லை

# அறுவை சிகிச்சை



சிறு நீரகத்திலும் சிறு நீர்த்தாரை மற்றும் சிறுநீர் பையிலும் காணப்படும் கற்களை அதிர்வு அலைகள் மூலம் தூளைப் படுத்தும் முறை புதுமையானது. இம் முறையில் உடலில் எந்த விதமான கீறலோ துளைகளோ இல்லாமல் கல்லை தூள்களாக்கி விடலாம். சிறு தூள்கள் தானாகவே சிறு நீரில் வெளிவரும். இந்த சிகிச்சை முறைக்கு பெரும் பாலும் சிலமணி நேரங்களே தங்க வேண்டியிருக்கும்.

சிறுநீர்த்துறை வல்லுநர்களாலே நடத்தப் படும் இம்மையத்தில் அதிர்வலைகளால் தகர்க்க முடியாத கற்களுக்கு வேற்றுமுறை சிகிச்சை செய்யவும் உரிய ஆலோசனை அளிக்கப்படுகிறது. அதிர்வு அலை சிகிச்சையின் செலவு அதிகமாக இருக்குமோ என அஞ்சத் தேவையில்லை மற்றிய நா தனியார் மருத்துவமனைகளில் வேற்றுமுறை கல் சிகிச்சைக்கு ஆகும் செலவை விட இது குறைவாகவே இருக்கும்.

* மிக நவீனமான அதிர்வலை (LITHOTRIPSY) இதற்கு பதில் அளிக்கிறது.
* மயக்க மருந்தின்றி எளிய முறையில் குழந்தைகள் முதல் முதியவர்கள் வரை அனைவருக்கும் மிக பாதுகாப்பான முறை.
* நீரிழிவு (DIABETES), இரத்த அழுத்தம் உள்ளவர்கள் (BLOOD PRESSURE) இருதய நோய் (HEART PROBLEMS) உள்ளவர்களுக்கும் இது ஒரு வரப்பிரசாதமான முறை.
* ஓராண்டு காலத்தில் 800க்கும் மேற்பட்ட நோயாளிகள் வெற்றிகரமாக சிகிச்சை பெற்றுள்ளார்கள்.
* அன்றாட வேலை பாதிக்கப் பட மாட்டாது.
* மிகக் குறைந்த செலவில் (ரூ.10,000/- க்குள்)
* சிறந்த சிறுநீரக வல்லுநர்களின் உதவியுடன் சிறு நீரக கற்கள் நீக்கப்படுகிறது!

Directors :

**Dr. C. Chinnaswami,** M.S., M.Ch., F.R.C.S.,
(Vijaya Hospital, Vadapalani, Madras-600 026)

**Dr. R. Jayachandran,** M.Ch., F.R.C.S. (Eng)
(Guest Hospital, Near Ega Theatre
782, P.H. Road, Madras-600 010)

**Dr. D. Thanikachalam,** M.S., M.Ch., F.I.C.S.,
(Amar Hospital, 154, P.H. Road,
Opp. Sangam Theatre, Madras - 600 010)

**Dr. V. Shankaran,** M.S., M.Ch., F.I.C.S.,
24/25, Madley Road, Opp. T. Nagar Bus Stand
Madras - 600 017)

**Dr. R. Sarvothaman,** M.S., M.Ch., F.I.C.A.,
(Venkateswara Hospital, Salem)

For further details contact



**Tamil Nadu Urological Research Centre**

No. 50, "D" Block, 3rd Street,
Annanagar East,
Madras - 600 102. Phone : 619769

Komala Ads

# 'மொறுமொறுவென எண்ணெயில் பொரித்து...'

"மிகவும் படித்தவர்கள் முதல் சாதாரணமானவர்கள் வரை எல்லோருக்கும் தெரிந்த நோய் - பயப்படும் நோய் - ஹார்ட் அட்டாக்! மாரடைப்பு என்பது மட்டுமல்ல அது தொடர்பான பல இருதய நோய்களும் இன்று சர்வ சகஜமாக மிகப் பலருக்கும் வருகிறது. அதற்குக் காரணம் இன்றைய நடைமுறை வாழ்க்கைதான்!"

என்கிறார் பதினெண் சித்தர் மருத்துவ மனையில் நிர்வாக இயக்குநர் சிநேகலதா.

"இன்று எல்லோரும் ஒரே டென்ஷன் வாழ்க்கை வாழ்கிறார்கள். இதயத்திற்கு எவையெல்லாம் ஆகாதோ அவையெல்லாம் இன்று வாழ்க்கை முறையாகி விட்டது. அந்தக் காலத்தில் எளிய உணவு சாப்பிட்டார்கள். நிறைய உடற்பயிற்சி இருந்தது. நடப்பது, உடலால் வேலை செய்வது என்று. எல்லாவற்றிற்கும் மேலாக ஆண்டவன் பெயரில் அசைக்க முடியாத நம்பிக்கை. எந்தத் துன்பம் வந்தாலும் கலங்காமல், 'எல்லாம் அவன் செயல்' என்று போய் விடுவார்கள். அதனால் நோய்நொடி அதிகமில்லாமல் வாழ்ந்தார்கள்.

இன்றைய வாழ்க்கையைப் பாருங்கள்; இதற்கு நேர்மாறாக இருக்கும். மொறுமொறுவென எண்ணெயில் பொரித்த பலகாரங்கள், மேஜை நாற்காலியில் அமர்ந்து மணிக்கணக்கில் வேலை, மனமோ பல்வேறு பிரச்னைகளில் சிக்கித் தவிக்கும். எப்போதும் என்ன நேருமோ, எனப் பயம். அலுவலகத்திலும், வீடுகளிலும் குடும்ப உறவுகள் சுமுகமாக இருப்பதில்லை. அதனால் எப்போதும் டென்ஷன். இதனால் கடவுள் நம்பிக்கை குறைந்துவிட்டது.

கடவுளைத்தான் நம்ப வேண்டும் என்று சொல்லவில்லை, தன்னையாவது முழுமையாக நம்பும் தன்னம்பிக்கை வேண்டும், அல்லது மற்றவர்களையாவது நம்ப வேண்டும்.

இவை எதுவுமே இல்லை. எப்போதும் மன உளைச்சல், கொழுப்புச் சத்து நிறைந்த சாப்பாடு, எதிலும் நம்பிக்கை இன்மை என ஆகிவிட்டதால்தான் இன்றைய மக்களிடையே இருதயநோய் பெருகி விட்டது."

என அழகாகச் சொன்னார் சிநேகலதா.

"இருதய நோய்க்கு 'திமிர்த வாயு' என சித்த மருத்துவத்தில் சொல்வார்கள். இதற்கு மிகச் சிறப்பான மருந்துகள் சித்த மருத்துவத்தில் உண்டு. இருதய நோய் என்பது இருதயத்தை எப்படித் தாக்குகிறது?

இருதயம் மனித உடலுக்குத் தேவையான ரத்தத்தைச் சுத்திகரித்து உடலெங்கும் அனுப்புகிறது என அனைவருக்கும் தெரியும். இது ஒரு முறை சுருங்கி விரியும்போது மூன்று அவுன்ஸ் ரத்தம் வெளியேறும். இதற்கு சுமார் 9 அல்லது 10 வினாடி ஆகும். இருதயம் ஒரு நிமிடத்திற்கு 72 முறை துடிக்கும். இது பொதுவாக.

நான் முன்பு சொன்ன காரணங்களால் ரத்தத்தை எடுத்துச் செல்லும் குழாய்களில் அடைப்பு ஏற்படலாம். ரத்தம் கட்டிப் போகலாம். ரத்தக் குழாயில் கொழுப்பு பிறந்து சீரான ரத்த ஓட்டம் இல்லாமல் போகலாம். இதனால் ரத்த ஓட்டம் சீராக இருதயத்திற்குப் போகாத போது மாரடைப்பு எனப்படும் ஹார்ட்- அட்டாக் ஏற்படுகிறது. இது மனிதனைத் தாக்கும் மிகக் கொடிய வியாதி.

இடது பக்கம் நெஞ்சுவலி வருவது, ஜீரணம் ஆகாமல் இருப்பது, அடிக்கடி புளித்த ஏப்பம் வருவது, இழுப்பு, அசதி, வாதபித்த நாடிகள்



அதிகம் துடிப்பது இவையெல்லாம் இதய நோயின் அறிகுறி.

ஜீரணம் ஆகாமல் இருந்தால் உடனே இதயநோயோ, என பயப்பட வேண்டிய தில்லை. ஆனால் என்ன காரணம் எனத் தெரிந்து கொள்வது நல்லது. 'எனக்கு, எங்க பரம்பரைக்கு அப்படித்தான்' என்று அசட்டை யாக விட்டுவிடாமல் 'என்ன பிரச்னை நம் உடலுக்கு' என ஆராய்ந்து உண்மையைத் தெரிந்து கொண்டு விடுவது எப்போதுமே நல்லது.

இது பரம்பரையாகவும் வரலாம். சிலருக்கு இருதயத்தில் ஓட்டை, வால்வுக் கோளாறு எனப் பலவகைகளில் பிரச்னைகள் வருகிறது. எனவே என்ன என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

இருதய நோய் வராமல் முதலிலிருந்து நல்ல பழக்கங்களைப் பழகிக் கொள்ள வேண் டும் என்பது ஒன்று. மற்றொன்று சித்த வைத் தியத்தில் சீரக சூரணம், திரிகடுகாதிலேகியம், பூண்டு இஞ்சி ஊறல், இலுப்பைபிஷ்டம், சர்பகந்தி சூர்ணம், அசுவகந்தாதி லேகியம், மகரத்வஜ சிந்தூரம் என 40க்கும் மேலாக பல மருந்துகள் உள்ளன. இவை இருதயத் திற்கு நல்ல பலத்தைக் கொடுக்கின்றவை.

குறிப்பாகக் குறைந்த ரத்த அழுத்தத்திற் கும், அதிக ரத்த அழுத்தத்திற்கும் எங்கள் பிரம்மானந்த சுவாமிகள் தானே பல மருந்து களைத் தயாரித்துத் தருகிறார். ஒரு முறை ஹார்ட்-அட்டாக் வந்தவர்கள் மீண்டும் அதனால் பாதிக்கப்படாமல் இருக்கவும் மருந்துகள் தயாரித்துத் தருகிறார். இதனால் நிறைய பேர் பயன் பெற்றிருக்கிறார்கள்.

சாதாரணமாகவே செம்பருத்தியை வெறும் வயிற்றில் சாப்பிடுவது இருதயத்திற்கு மிகச் சிறந்தது. அதே போல பெரிய நெல்லிக் கனிகளை சாப்பிடலாம். மாதுளம்பழத்தை உஷ்ணப்படுத்தி உண்ணலாம். தேனில் ஊறிய ஆப்பிள், எலுமிச்சைச் சாறு, பூண்டு, தாமரைப்பூ கஷாயம் இவை இதயநோய் கண்டவர்களுக்கு நல்ல டானிக்காகப் பயன்படும்.

பொதுவாக சித்த மருத்துவமே எங்கு உடலில் கோளாறோ அதை மட்டுமே சென்று குணப்படுத்த முயலுவதில்லை. அடிப்படை உடல் வலிமையையும், பாதிக்கப்பட்ட உறுப் பின் ஆரோக்கியத்தையும் பலப்படுத்துவ தால் மீண்டும் பிரச்னை என்று வருவதில்லை.

அந்த வகையில் இருதயநோய் கண்ட வர்கள் தங்கள் இருதயத்தை இயற்கை வழி யில் பலப்படுத்திக் கொள்வது சிறந்தது. அதே போல இருதய நோய் கண்டவர்களுக்கு நாங்கள் சில அறிவுரைகளைக் கூறுவோம். இவற்றைப் பொதுவாக எல்லோருமே கடைப் பிடிப்பது நல்லது-

இன்று கூட்டுக் குடும்பமெல்லாம் சிதைந்து விட்டது. முன்பு கணவன்-மனைவி உறவு என் பது அரிது. அதற்காக அவர்கள் எதிர்பார்த்து ஏங்கி இணையும் சந்தர்ப்பம் வரும்போது மிகுந்த மகிழ்ச்சியோடு சேருவார்கள். அதே போல் ஆண் குடிகாரனாக, காமக் கேளிக்கை களில் ஈடுபடுவது அதிகம் இல்லை. காரணம் பெரியவர்கள் கண்டிப்பார்கள் என்ற பயம். இன்று இவையெல்லாமே இல்லை.

இருதய நோய்க்கு முக்கிய காரணமாகச் சொல்லப்படுபவை குடிப்பழக்கம், போதை யுடன் உறவு கொள்வது, பகலில் உறவு கொள் வது! குடித்து இனிப்பு உண்டு போகம் செய் பவர்களுக்கு இதயநோய் வர அதிகம் வாய்ப் புண்டு என்கிறார்கள்.

போலார் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்டின் தரமிகு தயாரிப்பான போலார் ஹைபவர் லோவோல்டேஜ் கிரைண்டர் மோட்டார்கள் ஹரியானா மாநிலத்தில் ஃபரிதாபாத் என்ற இடத்தில் தயாரிக்கப்படுகிறது.

**எனவே நாங்கள் எங்களிடம் வரும் நோயாளி களுக்கு '10 கட்டளைகள்' சொல்வோம். நீங்கள் அனைவருமே அவற்றைப் பின்பற்றுவீர்களே யானால் வலுவான இதயம், ஆரோக்கியமான உடல் பெற்று பல்லாண்டு வாழ்வீர்கள்-**

**இதயநோயுள்ளவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய பொதுவான விதிகள்:**

**1. எளிதில் ஜீரணமாகக்கூடிய கொழுப்பு இல்லாத உணவுப் பொருட்களை காலந்தவறாமல் உட்கொள்ள வேண்டும்.**

**2. குறைந்தது ஆறுமணி நேரமாவது இரவில் முழுமையாக அமைதியாக உறங்க வேண்டும்.**

**3. தினம் ஏதாவது ஒரு பொழுதுபோக்கை மேற்கொள்ள வேண்டும். ஏதாவது ஒரு உடற் பயிற்சி அல்லது விளையாட்டைச் செய்ய வேண் டும்.**

**4. வேளை கெட்ட வேளையில் காப்பி, தேநீர் அருந்துவதைத் தவிர்க்க வேண்டும்.**

**5. புகை பிடிப்பது, மது அருந்துவது அறவே நிறுத்த வேண்டும்.**

**6. கோபப்படாமல், பதற்றப்படாமல் நிதான மாக வாழப் பழக வேண்டும்.**

**7. மாமிச உணவைத் தவிர்த்து இயற்கையான கீரை காய்கறிகளை அதிகம் பயன்படுத்த வேண் டும்.**

**8. மலச்சிக்கல் இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் (இதுதான் எல்லா நோய்களுக்கும் பெரும்பாலும் காரணம்)**

**9. அளவிற்கு மீறிய உடல் உறவைத் தவிர்க்க வேண்டும். இரத்த அழுத்தம், இதய நோய் உள்ள வர்கள் அறவே தவிர்ப்பது நல்லது.**

**10. அதிகமாக வேலை செய்தும் அதிகமாக கவலைப்பட்டும் உடலையும் மனதையும் கெடுத் துக் கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண் டும்.**

— ஜ்வாலா

தங்க நகை வாங்குபவர்களுக்கு...

# தூய்மையான தங்கம் 22 கேரட் அல்ல என்பது தெரியுமா!?

நல்ல, சுத்தமான தங்கத்தை தமிழ்நாட்டில் "பத்தரைமாற்று தங்கம்" எனக் குறிப்பிடுவது வழக்கம்.



ஆனால், இப்போது உலகெங்கிலும் ஏற்றுக்கொள்ளும் தூய்மைக்கென குறிப்பீடு, 'ஸ்டாண்டர்டு' தங்கம்-அதாவது 24 கேரட், என்பதாகும். 24 கேரட், 100% தூய்மையான, கலப்படமே இல்லாத தங்கத்திற்கான குறிப்பீட்டுச் சொல் ஆகும். (நடைமுறையில் இது 99.99% ஆக இருக்கும்.) 1 கேரட் 4.17% தூய்மைக்கு சமமாகும். 24 கேரட் (100%) தூய்மையான தங்கத்தில் ஆபரணங்களும் நகைகளும் செய்தால், அவை வலுவின்றி மிகமிருதுவாக இருக்கும்; விரைவிலேயே தேய்ந்து அல்லது உடைந்து போய்விடும். எனவே அது, (கவரிங்) பூச்சுக்கும், கில்டு செய்திடவும் மட்டும் தான் பயன்படும். ஆகவேதான் ஆபரண நகைகளை, 22 கேரட் எனும் தங்கத்தில்தான் செய்வார்கள். உங்கள் நகை அல்லது ஆபரணம் இவ்வாறான 22 கேரட் (91.66%) தூய்மையான தங்கத்தில்தான் செய்யப்பட்டுள்ளது என்பதை உறுதி செய்திட, நல்ல பெயர்-பெற்ற நீண்டநாள் இருந்துவரும் ஜுவல்லரியில் வாங்கிடவேண்டும். மேலும், அதற்கான நியாயமான விலையையும் கொடுத்திட வேண்டும்.

மூன்று தலைமுறையாக செயல்பட்டு வரும் ஸ்தாபனம்

தங்கம் மற்றும் நகைகளைப் பற்றிய மேலும் விவரங்களுக்கு எமது ஷோரூமில் திரு. பாபு எமானுவேல் அவர்களை அணுகவும்.

ORIGINAL KERALA JEWELLERS

## ஒரிஜினல் கேரளா ஜுவல்லர்ஸ்

91, உஸ்மான் ரோடு, (சிவா விஷ்ணு கோவில் அருகில்),
தி. நகர், சென்னை - 600 017. போன்: 4340027 / 4345809 / 4344819

(எங்களுக்கு கிளைகள் எதுவும் கிடையாது.)

# ஓடுகிறோம், ஓடுகிறோம்!



• சுதா

பெரும் தொழிற்சாலைகளை நிறுவி 'நிர்வாக இயக்குநர்' என்ற போர்டு மாட்டினால் தான் வெற்றியாளர்கள் என்பது இல்லை. 'அடுத்த வேளை சாப்பாட்டிற்கு என்ன செய்வது...?' என்ற ஒரு நிலை ஏற்பட்டாலும், அதிலிருந்து துணிச்சலோடு போராடி மீண்டு வாழ்க்கைப் பாதையைச் சுமுகமாகச் செப்பனிடுபவர்களும் சாதனையாளர்களே!

அந்த வகையில் இங்கு மூன்று பெண்கள் தங்கள் அனுபவங்களைச் சொல்கிறார்கள் -

## திருமதி சுதா :

இரண்டு குழந்தைகளின் படிப்புச் செலவு, வயதான மாமியார் மற்றும் என் தந்தை இவர்களின் பராமரிப்பு, வீட்டு வாடகை, மளிகை இத்தனையையும் என் கணவரின் குறைந்த வருமானத்தில் சமாளிக்க முடியாமல் திணறினேன்.

பட்டப் படிப்பு தட்டெழுத்து எதுவும் தெரியாததால் எந்த வேலைக்கும் செல்ல முடியாது. அதே சமயம், வருமானத்தை அதிகமாக்கினால் தான் குடும்பம் ஓடும் என்ற நிலை. அப்போது தான் என் சித்தப்பா,

"நீ ஏன் வீட்டிலிருந்தபடியே பட்சணம் செய்து கொடுத்து சம்பாதிக்கக் கூடாது" என்று கேட்டார்.

சமையல் மற்றும் பட்சணம் பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. ஆனால் அவருடைய மேற்பார்வையில் அவருடைய உதவியுடன் தெரிந்தவர்களுக்கு முறுக்கு, தட்டை, மிக்ஸர், காரா சேவ், பாதுஷா, மைசூர்



• லக்ஷ்மி வெங்கடாசலம்




பாகு, வட்டு இவை களை செய்து தர ஆரம்பித்தேன். தீபாவளி மற்றும் கோகுலாஷ்டமி போன்ற பண்டிகைகளுக்கும் திருமணம், சீமந்தம், வளைகாப்பு போன்ற நிகழ்ச்சிகளுக்குச் சீர் பட்சணங்களும் நிறைய ஆர்டர்கள் வர ஆரம்பித்தன. பள்ளிகளில் நடக்கும் சிறிய நிகழ்ச்சிகளுக்கும் அவர்கள் வெளியூர்களுக்கு பிக்னிக் போகும் போது அவர்களுக்குத் தேவையான இட்லி, தயிர்சாதம், சாம்பார் சாதம் போன்ற பொட்டலங்களும் தயாரித்துக் கொடுப்பேன்.

ஒருமுறை ஆசிரியர் தினம் விழாவிற்கு சாம்பார் சாதம் பொட்டலங்கள் ஆயிரமும் தயிர் சாதம் பொட்டலங்கள் ஆயிரமும் தயாரித்துக் கொடுக்கும்படி கேட்டிருந்தனர். மாலை சுமார் ஆறு மணிக்கு ஆரம்பித்து மறு நாள் பகல் பதினோரு மணிக்குப் பொட்டலங்கள் தயார் செய்து கொடுத்தது ஒரு மறக்க முடியாத அனுபவம்.

என் கணவர், மாமியார், மகள், மகன், என் சகோதரர் ஆகிய அத்தனை பேரும் எனக்கு முழு ஒத்துழைப்புக் கொடுக்கிறார்கள். மெஷினுக்குப் போகவும், சாமான்கள் வாங்கி வரவும் செய்த பண்டங்களைக் கவர்களில் போட்டு பேக் செய்வதற்கும் வீடுகளில் கொண்டு டெலிவரி செய்வதற்கும் உதவுகின்றனர்.

காலையில் சமையல் முடிந்ததும் பட்சணம் செய்ய ஆரம்பித்தால் இரவு தான் முடியும். வேலைக்குப் போகும் பெண்கள் பலர் இப்போது என்னுடைய வாடிக்கையாளர்கள்.

## திருமதி லக்ஷ்மி வெங்கடாசலம் :

**ப**கல் பதினோரு மணி முதல் மூன்று மணி வரை திருமதி லக்ஷ்மியின் வீட்டிற்குச் சென்றால் கர்நாடக இசையும் இனிமையான ராகத்தில் சுலோகங்களும் கேட்கலாம்.

"இந்த நேரத்தில், குடும்பத் தலைவிகள் பலர் வந்து அபிராமி அந்தாதி, கந்தர் அநுபூதி, லலிதா சஹஸ்ரநாமம், சௌந்தரிய லஹரி, நவாவரண கிருதிகள் இப்படிப் பல்வேறு சுலோகங்களை ராகத்துடன் கற்றுக் கொள்கின்றனர். மாலையில் பள்ளிச் சிறுமிகள் வருகின்றனர். நான் போய்க் கற்றுத் தருவதும் உண்டு. பள்ளியில் படிக்கும் போது பொழுதுபோக்காக கற்றுக் கொண்ட இசை, இப்போது எனக்கு வருமானத்திற்கு வழி செய்திருக்கிறது" என்கிறார் லக்ஷ்மி.

ஒருமுறை கேட்டால் போதும் இவருக்கு ராகம் மனத்தில் படிந்துவிடுகிறது. அதை அப்படியே திரும்பப் பாடுகிறார். இப்படிக் கேள்வி ஞானத்தால் நிறைய பாடல்கள் கற்றுக் கொண்டிருக்கிறார்.

உடல்நலம் இல்லாத காரணத்தால் கணவர் வாலண்டரி ரிடையர்மெண்டு வாங்கிக் கொண்டிருக்கிறார்.

பொதுவாகப் பெண்களுக்கு இப்போது ஆன்மீகத்தில் ஈடுபாடு அதிகமாகியிருக்கிறது என்கிறார் லக்ஷ்மி. குடும்பத் தலைவிகள் ஓய்வாக இருக்கும் போது வீணாக அரட்டை அடித்துப் பொழுதை வீணாக்காமல் நல்ல சுலோகங்களை ஆர்வமாக கற்றுக் கொள்ள முன்வருகின்றனர். இதற்குப் பெரியதாக இசை ஞானம் தேவை இல்லை. இப்படித் தெய்வப் பாடல்கள் பாடும் போது மனதுக்குத் தெளிவும் ஆறுதலும் கிடைக்கிறது என்கிறார் இவர்.

## திருமதி பத்மா :

**எ**ல்லோரும் அசந்து தூங்கிக் கொண்டிருக்கும் வேளையில் பத்மா

வுக்குப் பொழுது விடிந்துவிடும். ஆரம்ப காலங்களில் பின்னிரவு இரண்டு மணிக்கு எழுந்து குளித்து சமையல் முடித்து மூன்று மாதக் குழந்தைக்குப் பால் கொடுத்து விட்டு, மூன்றரை மணிக்கு வேலைக்குக் கிளம்பி இருக்கிறார். காலை நான்கு மணி முதல் ஐந்து மணி வரை ஒரு வீட்டில் சமையல். (அந்த வீட்டு குடும்பத் தலைவி ஆறு மணிக்கு வேலைக்குப் போக வேண்டும்). ஐந்தரை முதல் ஆறரை மணி வரை ஒரு வீட்டில் சமையல். இப்படி ஐந்து வீடுகளில் சமையல் செய்து விட்டு வீடு திரும்ப பதினோரு மணிக்கு மேல் ஆகிவிடும். தானும் சாப்பிட்டு குழந்தைகளைக் கவனித்து பன்னிரண்டரைக்குக் கிளம்பினால் மீண்டும் அதே வீடுகளில் இரவு சமையல்.

"இருபது வருடங்களுக்கு முன்பு என்னுடைய வாழ்க்கை இப்படித்தான் ஆரம்பித்தது. குடும்பத்தினரின் விருப்பத்திற்கு விரோதமாக திருமணம் செய்து கொண்டேன். என் கணவர் அப்போது ஒரு நல்ல நிறுவனத்தில் வேலையிலிருந்தார். கடன் வாங்கின ஒருவருக்கு சாட்சி கையெழுத்துப் போட்டு ஏமாந்ததில் வேலை போய் விட்டது. மூன்று மகன் கள் பிறந்து விட்டனர். கடைசி பையன் பிறந்து நாற்பது நாள் ஆகியிருந்த போதுதான் நான் வேலைக்குப் போகத் துவங்கினேன். அடுத்த வேளை அடுப்பு எரிய வேண்டுமென்றால் யாராவது வேலைக்குப் போயாக வேண்டும். தெரிந்தவர்கள் மூலமாக ஒரு வீட்டில் சமையல் செய்து வைத்து விட்டு வரும் வேலை கிடைத்தது. வீட்டையும் குழந்தைகளையும் நான் தான் கவனித்துக் கொள்ள வேண்டும் என்பதால் எங்கேயும் நிரந்தரமாக தங்கி சமையல் வேலை செய்ய முடியாது.

ஒரே ஒரு வீட்டில் சமையல் செய்து வரும் வருமானம் போதவில்லை. அவர்கள் மூலமாக இன்னும் இரண்டு மூன்று வீடுகளில் இதே போல் வேலை கிடைத்தது. இருபது வருடங்களாக இதே ஓட்டம்தான்.

வயதாகி விட்டதால் இப்போது முன் போல் அத்தனை கடினமாக உழைக்க முடியவில்லை. என்னுடைய இதயத்தில் ஓட்டை இருப்பதால் அதற்கான சிகிச்சை வேறு.

என் பையன்கள் குழந்தைகளாக இருந்த போது, அவர்களை கவனிக்க முடியாமல் நான் வேலை வேலை என்று ஓடிக் கொண்டிருந்ததால் அதற்கான தண்டனையையும் நான் இப்போது அனுபவிக்கிறேன். உடல்நலம் மிகவும் குன்றியவர்களாக இருப்பதால் அவர்களுக்கும் ஏராளமான மருத்துவச் செலவுகள்.

குடும்பத்திற்காக உழைத்தாக வேண்டும் என்ற மனோநிடத்தில்தான் நான் இத்தனை நாட்களும் செய்து வந்திருக்கிறேன்.

— கலா மூர்த்தி

இப்போதெல்லாம் எதெதற்கு விளம்பரம் வருவதென்ற விவஸ்தையில்லாமல் போய்விட்டது. அதுவும் 'கேர் ஃப்ரீ, விஸ்பர்'ன்னா என்னங்கிறதை பட்டிதொட்டிகளில் இருக்கிற வாண்டுப் பையன்கூட பார்த்து என்னவென்று சொல்லுகிற அளவுக்கு 'டீ.வி.'யில் அழகாக(!!!) விளம்பரம் கொடுக்கிறார்கள். பொதுவாகப் பெண்கள் எல்லோருக்குமே இவற்றைப் பற்றி நன்றாகத் தெரியும். அப்புறமெதற்கு இவ்வளவு விரிவான (அசிங்கமான) விளக்கம்? இது பெண்களின் அந்தரங்கமான விஷயம். இந்தச் சின்ன அந்தரங்கமான விஷயத்தையே நம்முன் சுதந்திரமாகப் பாதுகாத்துக் கொள்ள முடியாமல் இப்படிப்பட்ட விளம்பரங்கள் வரும்போது சிறுவர்கள் எதிரில் சங்கடத்தால் நெளிய வேண்டியதாக இருக்கிறது.

- சாந்தி



# ப்ரியகாயத்ரி

## 11

**ஸ்ரீவேணுகோபாலன்**

பதினோரு மணி தாண்டியது. இன்னும் மகாலட்சுமி படித்துக் கொண்டிருந்தாள்.

காயத்ரிக்குக் கொட்டாவி வந்தது. "மிச்சத்தை நாளை படிப்போமா?" என்றாள்.

"இல்லை மேடம். இன்னும் ரெண்டே ரெண்டு பக்கந்தான் முடிச்சுடறேன்!" என்றாள் மகா.

"இரு" என்று சொல்லி காயத்ரி டீ போட்டு வந்தாள்.

இருவரும் அருந்தினார்கள். மகா படிக்க ஆரம்பித்தாள்.

பெரியவர் தம் கதையை மேலே எழுதிப் போயிருந்தார்.

"பின்புறம் வழியாக மாடிப்படியில் ஏறி உள்ளே போனேன்.

மெள்ள எட்டிப் பார்த்தேன்.

பைரவன் என்கிறவன் உக்கிரமாகப் பேசினான்.

"எனக்கு ரெண்டு லட்சம் கொடுத்துடுங்க! நான் போயிடறேன்!" என்று கத்தினான்.

என் மகன் ரங்காவும், பத்முவும் அவனைச் சமாதானப்படுத்த முயன்றார்கள்.

பைரவன் நம்புவதாக இல்லை.

"இந்தாங்க! உங்க ரெண்டு பேர் மேலேயும் எனக்கு நம்பிக்கையில்லை. இன்னும் பத்து நாள்தான் கெடு. எண்ணிடுங்க! அதுக்குள்ளே வரலேன்னா நான் போலீஸ்லே போயிடுவேன்! உங்க சங்கதி எல்லாம் அம்பலப்படுத்திடுவேன்!" என்றான் ஆக்ரோஷமாக.

அவர்கள் தடுத்தும் நில்லாமல் மாடிப்படி இறங்கிப் போய்விட்டான்.

ரங்காவும் பத்முவும் பின்னர் கலவரப்பட்டுத் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

தாழ்வான குரலில் பேசியதால் என் காதில் விழவில்லை! ரொம்பப் பயப்பட்டிருந்தார்கள். அது மட்டும் தெரிந்தது.

நான் மறுபடி கீழே இறங்கி வந்துவிட்டேன்.

எனக்குக் கவலையாக இருந்தது. என் பையன் ரங்கா ஏதாவது சிக்கலில் மாட்டிக் கொள்ளப் போகிறான் என்று நினைத்தேன்.

இரண்டாவது வாரம்.

தினம் ஆங்கிலப் பேப்பரைப் படித்து விட்டுத் தமிழ்ப் பேப்பரைத் தேடினேன். அதைக் காணவில்லை! தேடும்படி சமையல்காரியை நச்சரித்தேன்.

இரண்டாம் நாள் பேப்பரைக் கண்டுபிடித்தாள். மாடியில் மேஜை ஓரம் இருந்தது.

திருப்பினேன். அதில் ஒரு பக்கம் இல்லை. எனக்கு மனசு அரித்தது.

'போய், அந்தப் பழைய பேப்பர் யாரிடமாவது இருந்தால் வாங்கி வா!' என்று சமையல்காரியை அனுப்பினேன்.

யாரிடமோ அதைக் கேட்டு வாங்கிக் கொண்டு வந்தாள்.

இல்லாது போன அந்தத் தனிப் பக்கத்தைப் படித்தேன்.

அதில் மதுரவாயல் பக்கத்தில் ஒரு பிரேதம் கிடந்தது. அது பைரவன் என்பவருடைய சடலம் என்பது தெரிந்தது என்று செய்தி வெளியாகி இருந்தது.

அடி வயிற்றைப் பிசைந்தது. என் மகனும் பத்முவும் சேர்ந்து அவனைத் தீர்த்துக் கட்டி விட்டார்கள்.

அப்படித்தான் நினைத்தேன்!

எந்த நிமிடமும் போலீசார் ரங்காவைத் தேடி வருவார்கள் என்று எதிர்பார்த்தேன். யாரும் வரவில்லை.

அந்தக் கேஸ் இதுவரை கண்டுபிடிக்கப் படாதது எனக்குத் தெரியும்.

எனக்கு என்னவோ நிம்மதி அற்றுப் போய்விட்டது. நடைப்பிணமாய் வாழ்ந் தேன்.

சென்ற இரண்டாம் ஆண்டிலிருந்து மனப்பிரமைகள் வர ஆரம்பித்தன. ஒரு நாள் ஸ்ட்ரோக்கும் வந்துவிட்டது.

நல்ல சிகிச்சை பெற்றுக் குணமாகித் திரும்ப வருவேன் என்ற நம்பிக்கையில்லை.

ஆனால் டாக்டர் ரகுராமன் எனது உயிர் நண்பன் ஒருவரின் பிள்ளை. அவ னுக்கு என் மீது மதிப்பு அதிகம்.

அவன் சிகிச்சையினால்தான் நான் குண மாகித் திரும்பி வந்தேன்.

வந்ததிலிருந்து எனக்கு ஓர் ஆதங்கம்! கடவுள் முன்னிலையில் நான் மனச்சாந்தி பெற வேண்டுமானால் எனக்குத் தெரிந்ததைப் பிறர் யாருக்காவது தெரிய வைத்துவிட வேண்டும் என்ற ஆர்வம்!

அதனால்தான் நோயிலிருந்து எழுந்த பின்னர் இதை மெள்ள மெள்ள எழுதி வைத்துவிட்டேன்.

இதைப் படிக்கிறவர்கள், பின்னால் ஏதாவது இதுபற்றி விவகாரங்கள் எழுந்தால், இதில் எழுதியுள்ள உண்மைகளைத் தகுந்த பேர்களுக்கு அறிவிக்க வேண்டுமாய்க் கேட் டுக் கொள்கிறேன். ஏனெனில் அதிக நாள் நான் உயிர் வாழ்வேன் என்ற நம்பிக்கை இல்லை."

மகா பெருமுச்சுடன் திரும்பி, "முற்றும்" என்றாள்.

"ஸஸ்பென்ஸிலே வச்சிட்டாரே!" என்றாள் காயத்ரி!

இருவரும் சந்தித்து மேலே செய்ய



வேண்டியதை ஆராயலாம் என்று நினைத்தார்கள்.

மூன்று நாட்களுக்குப் பிறகு சந்தித்தார்கள்.

"இந்தப் பாரு மகா! உங்க சிநேகிதியின் கணவன் பிரசாத் இந்த ரங்காகிட்டே வேலை பார்க்கிறார். எட்டு வருஷங்களுக்கு முன்னாடி பிரசாத் திடீர்ப் பணக்காரன் ஆகிவிட்டதையும் சொல்லியிருக்கே! பிரசாத்துக்கு எல்லா விஷயமும் தெரியும்னு ரங்கா புரிஞ்சிருப்பானோ அதனாலே பிரசாத் வாயை அடைக்க அவனுக்கு நிறையப் பணம் கொடுத்திருப்பானோ!" என்றாள்.

"நோ, நோ! பிரசாத் அப்படிப்பட்டவர் இல்லை! அநியாயமா வர்ற காசை ஏற்க மாட்டார்! எனக்குத் தெரியும்!" என்றாள் அழுத்தமாக.

யோசித்தார்கள்.

"பெரியவர் விட்ட இடத்திலிருந்து மேலே கண்டுபிடிக்க முயலலாம். ஏதாவது வழி இருக்கிறதா?"

"வழி இருக்கு! கொலை ஆனானே பைரவன் அவன் கேஸ் எட்டு வருஷம் முன்னாடி பேப்பர்லே வந்திருக்கணும். அந்தப் பேப்பர்லே அவனைப் பற்றிச் செய்தி ஏதாவது கிடைக்கும்! அது கிடைச்சு அவர்கள் வீட்டிலே போய் விசாரிச்சா?"

இருவரும் மறுநாள் கன்னிமாரா நூல் நிலையம் சென்றார்கள்.

எட்டு வருஷத்துக்கு முந்திய பேப்பர் கட்டை எடுத்துக் கொண்டு ஆராய்ந்தார்கள்.

இரண்டு நாளில் பைரவன் கொலை வழக்கைக் கண்டுபிடித்தார்கள்.

வேளச்சேரி பக்கம் பனப்பேட்டையைச் சேர்ந்தவன் பைரவன் என்று தெரிந்தது.

பனப்பேட்டை தேடிக் கிளம்பினார்கள்.

அது தற்சமயம் கம்பர் நகர் என்ற புதுப் பெயரில் மூழ்கிவிட்டது யாருக்குத் தெரியும்?

மூன்று நாட்கள் விசாரித்துத்தான் கண்டு பிடித்தார்கள்.

பைரவன் குடும்பத்தைக் கண்டுபிடிப்பதற்கு இரு நாட்கள் எடுத்தன. பைரவன் மனைவி அம்சவேணி மெலிந்தும் நரைத்தும் தெரிந்தாள்.

ஒரு பாட்டம் அழுதாள்! கொலை யார் செய்திருப்பார்கள்? அவளுக்கு யார் மீதும் சந்தேகம் கிடையாது! புருஷன் அவளிடம் எல்லா விஷயமும் சொல்வதில்லை.

மெள்ள அவளை ஆசுவாசப்படுத்தி பத்மநாபனைப் பற்றிக் கேட்டார்கள்.

"அது தெரியாதுங்களா? அடுத்த ஆறாம் மாசம் அவரும் போயிட்டாரே! என் புருஷனைத் தேடி வருவாருங்க! நான் பார்த்திருக்கிறேன்! நல்லவரு!" என்றாள் அவள்.

"எப்படி அவர் இறந்து போனாரு?" என்று கேட்டாள் மகா.

"ஐயோ! அது



தெரியாதா? அதுவும் கொலை ஆச்சே! ஆபீசிலே ராத்திரி வேலை செஞ்சுட்டு இருந்தப்போ யாரோ, என்ன பேரு, சபாபதின்னு ஒருத்தனாமே அவன் கொன்னுட்டாங்க!"

சூடு ஏறியது மகாவுக்கும், காயத்ரிக்கும்.

"கொன்னுட்டானா?"

"ஆமாங்க! பேப்பர்லே எல்லாம் போட்டிருந்துச்சே! அவர் பெயர் கே. பி. நாபன்னு போட்டிருந்தாங்க! நாபன்னுதான் அவரைப் பல பேர் கூப்பிடுவாங்க!"

அடுத்த சில தினங்களில் திரும்பவும் நூல் நிலையம் சென்று, நாபன் கொலை வழக்கைத் தேடினார்கள்.

கண்டுபிடித்தார்கள்.

படித்தார்கள்.

"ஆ, இங்கேதான் சிக்கல்லே வந்திருக்கோம்!" என்று கூறினாள் படித்து முடித்த காயத்ரி.

"எப்படிச் சொல்றீங்க?" என்றாள் மகா.

"இந்தக் கேஸ்லேதான் பிரசாத் சாட்சி சொல்லியிருக்கார்!"

"ஓ! அதைப் பற்றி அவர் மனைவி வசந்தாவே அடிக்கடி என்கிட்டே சொல்லியிருக்காங்க! நாபன் வேலை பார்த்திட்டிருந்த மாடி அறைக்கு சபாபதி போனதைப் பார்த்தேன்னு பிரசாத் சாட்சியம் சொல்லியிருக்காரு!"

"ஓ! அவரே சொன்னாரா?"

"ஆமாங்க! அப்படி சாட்சியம் சொல்லிட்டுத்தான், பின்னாடி அந்த சபாபதி பேர் வரும்போதெல்லாம் அவருக்கு ஏதோ கவலை வந்துடுதுன்னு வசந்தா சொல்லியிருக்கி'றாங்க!" என்றாள் மகா!

"இங்கேதான் ஏதோ இருக்கணும்!"

"சரி! ஒத்துக்கறேன் காயத்ரி! இதை எப்படிக் கண்டுபிடிக்கிறது?"

"சரி! சபாபதி என்கிறவரைக் குற்றம் சாட்டி உள்ளே தள்ளினாங்களே, அவர் வீட்டிலே விசாரிப்போம்! ஏதாவது தெரியுதா பார்ப்போம்!"

பேப்பரில் போட்டிருந்த சபாபதியின் விலாசத்தைத் தேடினார்கள். கண்டுபிடித்தார்கள்.

சபாபதியின் மனைவி சுபத்ராவுக்கு முப்பது வயது இருக்கும்! ஒரு பள்ளியில் ஆசிரியையாக இருந்தாள். படித்தவளாக இருந்ததனால்தான் அவள் தன் கணவன் நிரபராதி' என்று அடிக்கடி மனுக்கள் எழுதிக் கொண்டிருந்தாள்.

மகாவும் காயத்ரியும் போய் விசாரித்த போது அவள் ரொம்பத் தெளிவாகப் பேசினாள்.

"சபாபதி அந்த ஆண்ட்ரூஸ் கம்பெனியிலே ப்யூன் வேலை செய்தாருங்க! எஸ். எஸ்.. எல். சி. படிச்சவர்தாங்க! ரொம்ப கண்ணியமாய் நடந்துப்பார்! யாரையும் அதட்டிக் கூடப் பேச மாட்டார்! அவர் கொலை செய்வார் என்கிறதைக் கற்பனையாலும் நினைக்க முடியாது. அநியாயமா அவர் மேலே குற்றம் சாட்டிட்டாங்க!" என்று சொல்லிக் கண்ணீர் விட்டாள்.

"வேணுமின்னு யாராவது செய்வாங்களா அம்மா! கோர்ட்லே அப்படி லேசிலே ஒருத்தருக்குத் தண்டனை கொடுக்க மாட்டாங்க!" என்றாள் காயத்ரி.

"அப்படி இல்லைம்மா! சந்தர்ப்ப சாட்சியம் இருந்துச்சுன்னு அவரைத் தண்டிக்க ஆரம்பிச்சுட்டாங்க!"

"ஓகோ! அப்படியா?"

"ரெண்டு சாட்சியம் அம்மா! ஒன்று அன்னிக்கு ஆறு மணிக்கு இவர் 'பார்'லே போய்க் குடிச்சிருக்காரு!! ஆறு மணிக்கு! அதுக்கு சாட்சியம் கிடைச்சுப் போச்சு!"

"சபாபதி குடிப்பாரா?" திடுக்கிட்டுக் கேட்டாள் மகா.

"மாட்டாருங்க! அவர் குடிகாரர் இல்லை! என்னிக்காவது உடம்பு சரியில்லைன்னா போய்க் கொஞ்சம் பிராந்தி குடிச்சிட்டு வருவாருங்க! வீட்டிலே வந்தா என் கிட்டே சொல்லிட்டுப் படுத்துத் தூங்கிடுவாரு! அடுத்த நாள் சரியாயிடும்பாரு!"

"அடிக்கடி குடிக்கலைன்னு உங்களுக்குத் தெரியுமா?"

"நீங்க கேட்ட கேள்வியைத்தான் கோர்ட்லேயும் கேட்டாங்க! அவரைக் குடிகாரன்னு சர்க்கார் வக்கீல் அடிச்சுச் சொன்னாருங்க!"

கண் கலங்கிக் கூறினாள் சுபத்ரா.

"குடிகாரன் இல்லைன்னு நீ எப்படிச் சொல்வே அம்மா?"

"கம்பெனி ஆறு மணிக்கு விட்டா வீட்டிலே ஆறரைக்கு டாண்ணு இருப்பாருங்க! ஒரு நாள் தவற மாட்டாரு!"

"கொலை நடந்த அன்னிக்கு என்ன செஞ்சாரு?"

"அன்னிக்கும் வீட்டுக்கு வந்து படுத்துட்டாரு! அந்த முருகன் சாட்சி! வீட்டிலே வந்து அவர் படுத்தாச்சு!"

"அப்போ எப்படிக் குற்றம் சாட்டினாங்க?"

"குடிச்சார் என்கிறது ஒண்ணு ஆயிடுத்தா! ரெண்டாவது சாட்சிதான் அந்த பிரசாத் என்கிறவர் சொன்னாரு! அவர் கண்ணைப் பாம்பு பிடுங்கணும்!"

"ஏம்மா அப்படித் திட்டறே?! அவர் அநியாயம் செஞ்சாரா?"

"ஆமாங்க! அந்த நாபன் இருந்த மாடி அறைக்கு சபாபதி நடந்து போறதைப் பார்த்தேன்னு பிரசாத் சொல்லிட்டாரு!"

"அவர் எப்படிப் பார்த்தாரு?"

"அவரும் ஏழு மணி வரை அவர் ரூம்லே வேலை பார்த்துட்டு இருந்திருக்காரு! 'சன்னல் வழியே பார்த்தேன்! வராந்தாவிலே சபாபதிதான் போனார்'னு சாட்சி சொல்லிட்டாரு!"

"சபாபதியை அவர் எப்படிப் பார்க்க முடிஞ்சது? வீட்டிலே இருந்தார்னு நீங்க சொல்றீங்க!"

"ஆ! அதேதாங்க என் குறையும்! இங்கே என் வீட்டுக்குள்ளே கிடக்கிறார். அங்கே எப்படி வராந்தாவிலே நடக்க முடியும்? வராந்தாவிலே போறதையும் பார்த்தேன்! திரும்பி ஓடறதையும் பார்த்தேன்னு பிரசாத் சாட்சி சொல்லிட்டாரு. அவர் படிச்சவராச்சே! அவர் சொல்றது உண்மையாத்தான் இருக்கணும்னு ஜட்ஜ் தீர்மானம் பண்ணிட்டாருங்க! என் புருஷன் மேலே குற்றத்தைத் தள்ளிட்டாருங்க! அந்தப் பாவி பிரசாத்!"

"இந்தாம்மா! அநியாயமா அவரைத் திட்டாதே! அவர் நல்லவர். எங்களுக்குத் தெரியும். உங்க புருஷனை அவருக்கு முன்னாடி தெரியுமா?"

"தெரியாதுங்க!"

"இரண்டு பேருக்கும் சண்டை பூசல் ஏதாவது உண்டா?"

"எதுவும் கிடையாதுங்க!"

"அப்போ எப்படி வேணுமின்னே அவர் சொல்லியிருக்க முடியும்! ஒரு நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர். தப்புத் தண்டாவுக்குப் போக மாட்டார்..."

சுபத்ரா திகைத்தாள்.

"நீங்க சொல்றதைப் பார்த்தா... எனக்கு அதிலே அப்பப்போ யோசனை வருங்க! அவர் எப்படிச் சொல்வாரு! யாரைப் பார்த்தாருன்னு... ஒன்றும் புரியலை...! ஆனா போன இரண்டாம் வருஷம் எனக்குத் திடீர்னு ஒண்ணு தோணிச்சுங்க!"

"என்ன?" என்று ஆவலுடன் கேட்டாள் மகா.

(தொடரும்)

# சொல்ல விரும்புகிறோம்

★ ''ஆண்களுக்கே அதிகம் சரும நோய்'' பகுதியில் பல நல்ல செய்திகள் சொல்லப்பட்டுள்ளன. அத்துடன் ஆண்கள் பெரும்பாலும் செயற்கை நூலினாலான உள்ளாடைகளையே (ஜட்டி) அணிகின்றனர். அதனைத் தவிர்த்து, இப்போது மார்க்கெட்டுகளுக்கு வந்துள்ள முழுதும் பருத்தியினாலான ஜட்டிகளை அணிந்தால் அதுவியர்வையை அவ்வப்போது உறிஞ்சிவிடும். மேலும் கூடுமானவரை உள்ளாடைகளை நீண்ட நாட்களுக்கு உபயோகிக்காமல் அவ்வப் போது புதிதாக மாற்றிவிடவேண்டும். சரும நோயுள்ளவர்கள் சோப்புக்குப் பதிலாக பயத்தம் பருப்பு மாவையே தேய்த்துக் குளிக்க வேண்டும்.

திருவாரூர், த. சாந்தி.

★ 'மனநலத்தை பட்டாசுகள் பாதிக்குமா?' என்ற தலைப்பில் வந்த பேட்டி தீபாவளிக்கு முன் வர வேண்டியது. இருந்தாலும் இப்பேட்டி எக்காலத்திற்கும் உதவும் வகையில் அமைந்திருந்தது. மன நலம், உடல் நலம், பணம் இம்மூன்றுக்கும் கேடு விளைவிக்கும் பட்டாசு வெடிக்கும் ஆசையை நாம் எல்லோரும் தீயிட்டுக் கொளுத்தி நீக்க வேண்டும்.

லால்குடி, ஆர்.செஜலெஷ்மி.

★ நவராத்திரி நேரம் அதுவுமாகப் பட்டுப் புடவைகளைக் கொடுத்து அசத்திவிட்டீர்கள். போட்டியில் கலந்து கொண்டு புடவை கிடைக்காவிட்டாலும், மற்ற சகோதரிகள் வீட்டுக்குச் சென்று, புடவைகளைக் கொடுத்து, விழா மூலம் கொடுத்து... புகைப்படங்கள் மூலம் பார்த்துப் பார்த்துப் பரவசப் பட்டுப் போனேன். மங்கையர் மலரின் நீண்ட கால வாசகியாக இருப்பதாலோ என்னவோ, நமக்குக் கொடுக்கவில்லையே என்ற ஆதங்கம் தோன்றாமல், இதில் நானும் சேர்ந்து கலந்து கொண்டது போன்ற ஓர் உணர்வு உண்டானது. இதற்கும் இப்பத்திரிகையின், நல் எண்ணங்கள், பாரம்பரியக் கொள்கைகள், பெண்களைப் பற்றிய கண்ணியமான சிந்தனைகள்... இவைகள்தான் காரணமோ?

ஆட்டையாம்பட்டி, தேன்மொழிசந்திரசேகரன்.

# மதிப்பிற்குரிய குஷ்பூவிற்கு...!

★ அட்டையைப் பார்த்ததும் ''மங்கையர் மலரில், அதுவும் அட்டைப் படத்திலேயே ஒரு நடிகையின் படமா?'' என நினைத்தவர்களின் மன நிலைமையை, ஆசிரியர் மஞ்சுளாரமேஷ் நடிகை குஷ்பூவை (கூடையிலே என்ன பூ) மிகச் சாதுர்யமாக பேட்டி கண்டு வெளியிட்டிருந்ததின் மூலம் முற்றிலும் மாற்றியிருந்தது பாராட்டத்தக்க அம்சம். நன்றி.

தோட்டக்குறிச்சி, இரா.வளையாபதி.

★ மதிப்பிற்குரிய குஷ்பு பேட்டியைப் படித்தேன். ஆஹா என்ன புத்திசாலித்தனமான பேச்சு! ''நல்ல படங்கள் எடுத்தால் ஓடுவதில்லை. இதனால் நல்ல படங்கள் தயாரிப்பவர்கள் கூட மாறிவிடுகிறார்கள்.'' கோடி கோடியாய் செலவு செய்கிறவர்கள் ஆயிற்றே! அவரது அனுமானம் என்ன? லாபம் வந்தால் என்ன வேண்டுமானால் செய்யலாமா? இது எப்படி இருக்கிறது என்றால் பேனா தயாரிப்பதில் லாபமில்லை. எனவே ''கஞ்சா'' விற்கலாம் என் பதைப் போல. கோடி கோடியாய் பணமிருந்தால் லாபம் தரும் தொழில்கள் இந்த நாட்டில் ஏராளமாய் இருக்கின்றனவே. அதில் முதலீடு செய்வதுதானே? எந்த நாட்டிலும் சரி – ஒரு பொருளை உற்பத்தி செய்து அது மக்கள் கையில் சேரும் வரையில் அதன் தயாரிப்பாளர் எவ்வளவு சட்டதிட்டங்களுக்கு உட்பட்டாக வேண்டும் தெரியுமா? இந்தச் சட்டத்திற்கு உள்ள நோக்கம் —

1. மக்கள் ஏமாற்றப் படக்கூடாது.

2. மக்கள் உபயோகப்படுத்தும் பொருட்கள் தரமாக இருக்க வேண்டும். அது சாதாரண குண்டூசியாக இருந்தாலும் சரி அல்லது பெரிய விமானமாக இருந்தாலும் சரி.

ஆனால் சினிமாவிற்கு, எந்தக் கட்டுப்பாடும் கூடாதாம். இவர்கள் இஷ்டத்திற்குப் படம் எடுப்பார்கள்– கேட்டால் 'லாபம் வர வேண்டுமே!' என்ன அபத்தமான பேச்சு.

நாம் காலையில் எழுந்து பல் விளக்க உபயோகப்படுத்தும் ''டூத்பேஸ்ட்'' எவ்வளவு "quality check"ஐ கடந்து வருகிறது என்று குஷ்பூவிற்குத் தெரியுமா?

ஆனால் திரைப் படமே உண்மை என நம்பி கோடிக்கணக்கில் நிரம்பி வழியும் ஜனத்தொகை மிகுந்த இந்த நாட்டில் ஒரு மோசமான மக்கள் மனத்தை பாழ்படுத்தும், வருங்கால சந்ததியினரையே பூண்டோடு அழிக்கும் ஒரு சினிமாவை சர்வசாதாரணமாக ஒரு தயாரிப்பாளர் எடுக்க முடியும்.

இந்த லட்சணத்தில் இவ்வளவு காலமாக தூங்கிக் கொண்டிருந்த சென்சார்போர்டு விழித்துக் கொண்டதும் ஒரு குறிப்பிட்ட சிலரே பெரும் லாபம் சம்பாதிக்கும்– ஒரு கூட்டம் அதை எதிர்ப்பதில் என்ன ஆச்சரியம் இருக்க முடியும்?

பாஸ்கர்.

முழுக்கக் கல்வியறிவே இல்லாதவர்களுக்கு எழுதப் படிக்க அரசாங்கம் பிரம்மாண்டமான அறிவொளி இயக்கத்தைத் தோற்றுவித்தது.

இன்று அத்தனை குழந்தைகளும் எல்.கே.ஜி., யு.கே.ஜி. முதலே ஆங்கில மொழியில் பள்ளியில் அனைத்துப் பாடங்களையும் படிக்கத் துவங்கி விட்டனர். ஆனால் பல ஆண்டுகளுக்கு முன்னால் இத்தகைய வாய்ப்பினைப் பெறாத பெற்றோர்களும், மற்றவர்களும் தங்கள் வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்களில் தங்களுக்கு ஆங்கிலம் தெரியவில்லையே என்று வருந்துகின்றனர். ஆனால் தமிழ் நாடு, இந்தியா தாண்டி உலகம் முழுக்க சுற்ற வேண்டிய அவசியம் இன்று தமிழனுக்கு வந்து விட்டது. ஏன் தமிழ் நாட்டிலேயும் பல இடங்களில் ஆங்கிலம் அவசியமாகிவிட்டது. இத்தகைய மக்களின் தேவையை உணர்ந்து ஆங்கிலத்தில் ஓர் அறிவொளி இயக்கத்தைப் பரப்பி வரும்சென்னை மேட்லி சாலையில் இருக்கும் விவேகானந்தா கல்வி நிலையத்தின் முதல்வர் திரு வி. ராஜகோபாலன் அவர்களை நேரில் சந்தித்த போது அவர் அளித்த பல சுவையான தகவல்கள் -

**தங்கள் கல்வி நிலையத்திற்குக் குறிப்பாக விவேகானந்தரின் பெயர் வைக்கக் காரணம் என்ன?**

சிறுவயதில் பல சோதனைகளுக்கு உள்ளான நான் அவற்றால் சோர்வடையாமல், நம்பிக்கையுடன் வாழ்வில் முன்னேற எனக்கு உறுதுணையாக இருந்தது விவேகானந்தரின் வார்த்தைகள்தான். என் பள்ளி நாட்களில் ஒவ்வொரு நோட்டின் முதல் பக்கத்திலும் "எழுந்திரு, விழித்துக் கொள், குறிக்கோள் நிறைவேறும் வரை ஓயாதே" என்ற அவரின் பொன் மொழிகளை எழுதி வைத்திருப்பேன். மேலும் நம் இந்து மதத்தின் பெருமையை உலகறியச் செய்ய அவருக்கு உதவியது ஆங்கிலம் அல்லவா? அதனால்தான் இப்பெயரை நான் எனது கல்வி நிலையத்திற்குச் சூட்டினேன்.

**உங்கள் இளமைப் பருவம் பற்றியும் இக்கல்வி நிலையம் தோன்ற தூண்டுதலாக இருந்த நிகழ்ச்சி பற்றியும் கூறுங்களேன்?**

நான் தஞ்சை மாவட்டத்திலுள்ள 'நன்னிலம்' என்ற ஊரில் பிறந்தேன். நடுத்தரக் குடும்பம். ஊரிலுள்ள திண்ணைப் பள்ளி, நடுநிலைப் பள்ளிகளில்தான் ஆரம்பக் கல்வி. ஆனால் தந்தையின் திடீர் மறைவு குடும்பப் பொறுப்பை என் மீது ஏற்றிவிட்டது. படிப்பு பாதியில் தடைப்பட்டது. ஆயினும் படிப்பின் மீது இருக்க

• கற்பகம்

• சந்திரசேகர்

• சீனிவாசராவ்

• மகாவீர்

# ஆங்கிலத்தில் ஓர்

ஆர்வம் காரணமாக சென்னை வந்து லயோலா கல்லூரியில் மாலை நேர வகுப்பில் பி.யு.஋ி. சேர்ந்தேன். அப்போது தான் பல மாணவர்கள் பள்ளிப் படிப்பைத் தமிழ் மீடியத்தில் படித்ததால் கல்லூரியில் அனைத்துப் பாடங்களும் ஆங்கிலத்தில் நடத்துவதை புரிந்து கொள்ள முடியாமல் தவிப்பதை உணர்ந் தேன். எனவே ஒவ்வொரு சனி, ஞாயிறும் மாலையில் நுங்கம்பாக் கம் சுதந்திரதினப் பூங்காவில் அவர்களுக்கு எளிதில் புரியும்படி ஆங்கிலத்தில் பாடங்கள் நடத்தினேன். அவர்கள் அனைவரும், தேர்வில் சிறப்பாக வெற்றி பெற்றனர். இதுவே எனது கல்வி நிலையம் தோன்றுவதற்கான ஆரம்ப வித்து.




**தங்கள் விவேகானந்தா கல்வி நிலையத்தினை எப்படி ஆரம்பித்து வளர்ச்சி பெறச் செய்தீர்கள்?**

1981 ஆம் ஆண்டு நந்தனத்தில் ஒரு வீட்டின் மாடியில் ஓலைக் குடிசையில் 4 மாணவர்களுடன் இக்கல்வி நிலையம் துவங்கியது. மாணவர்களின் ஆங்கில அறிவு சிறப்பாக விளங்குவதைக் கேள்விப்பட்டு சுற்று வட்டாரத்திலுள்ளவர்களும் சேரத் துவங்கினர். நான் அப்போது அரசு குடும்ப நல மையமொன்றில் வேலை செய்து வந்தேன். என் சகோதரனும், சகோதரியும் கல்வி நிலையப் பணியில் எனக்கு உதவி வந்தனர். ஆனால் நாளுக்கு நாள் மாணவர்களின் எண்ணிக்கை பெருகியதால் ஒரு கட்டத்தில் நான் என் வேலையை ராஜிநாமா செய்துவிட்டு முழு மூச்சாக கல்வி நிலையத்தை கவனிக்கலானேன். இட நெருக்கடி ஏற்பட்டதால் தற்போது இருக்கும் மேட்லி சாலைக்கு கல்வி நிலையத்தை மாற்றினோம்.

**தபால் மூலம் ஆங்கிலம் கற்பிக்கிறீர்களே, அது எப்படி சாத்தியம்?**

ஆரம்பத்தில் சென்னையைச் சார்ந்த மாணவர்கள் மட்டுமே பயனடைந்தனர். ஆனால் பட்டி தொட்டிகளில் வாழும் ஏழை எளிய மாணவர்களையும் எங்கள் சேவை சென்றடைய வேண்டும் என்ற ஆர்வத்தில் தபால் மூலம் ஆங்கிலம் கற்பிக்கத் துவங்கினோம். நீங்கள் எழுப்பிய அதே சந்தேகம் பலருக்கும் எழுந்தது. ஆரம்பத்தில் மிகச் சில மாணவர்களே சேர்ந்தனர். ஆனால் எங்கள் ஆசிரியர் குழுவும், நானும் மிகத் தீவிரமாக இரவு பகல் யோசித்து நேரில் வகுப்பு எடுத்தால் எப்படி இருக்குமோ அதே போல் மிகத் தெளிவாகப் புரியும்படி பாடத்திட்டத்தை அமைத்தோம். இதன் வெற்றியை இன்று எல்லோரும் கண்கூடாகக் காண்கின்றனர். ஆமாம், தமிழகம் மட்டுமல்ல, கேரளா, கர்னாடகா, ஆந்திரா, வட மாநிலங்கள் ஆகியவற்றைச் சேர்ந்த மாணவர்களுக்கும் மலையாளம், கன்னடம், தெலுங்கு, ஹிந்தி என்ற மொழிகளில் ஆங்கிலப் பாடங்களை தபால் மூலம் சொல்லித் தருகிறோம் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

# அறிவொளி இயக்கம்

**ஆரம்ப நாட்களிலும் சரி, வளர்ந்து விட்ட இன்றும் சரி தாங்கள் சந்தித்த சவால்கள், சோதனைகள் என்னென்ன?**

ஆரம்ப நாட்களில் தபால் மூலம் பாடம் சொல்லிக் கொடுப்பதுதான் மிகப் பெரிய சவாலாக அமைந்தது. ஆனால் ஒவ்வொரு முறையும் பாடங்களை பிரிண்ட் செய்யும் போது முன்பிருந்த குறைகளை நீக்கி புதிய முறைகளைப் புகுத்தினோம். இதனால் பாடங்கள் ஒவ்வொரு முறையும் புது மெருகுடன் மேலும் மேலும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்தன. இதனால் தபால் மூலம் படித்த அனைத்து மாணவர்களுமே மிகச் சிறப்பாக தேர்ச்சி பெற்றனர். அவர்கள் ஆங்கிலத்தில் எமக்கு எழுதிய பாராட்டுக் கடிதங்களே அதற்குச் சாட்சி (கட்டுக் கட்டான பாராட்டுக் கடிதங்களைக் காட்டினார். உண்மையிலேயே மிகத் தரமான ஆங்கிலத்தில் அவை இருந்தன.) ஆனால் ஆரம்ப நாட்களில் மாணவர்கள் தங்கள் முகவரியைத் தமிழில் கூட சரியாக எழுதத் தெரியாதவர்களாக இருந்ததால் பல முறை பாடங்கள் குறித்த விலாசத்திற்குப் போய்ச் சேராது. எனவே அனுப்பிய பாடங்களையே மீண்டும் அனுப்ப வேண்டி வந்தது. ஆரம்ப நாட்களில் விளம்பரம் எதுவும் செய்யாமலேயே எங்களுக்கு மாணவர்கள் நிறைய சேர்ந்தார்கள். ஆனால் இன்று இக்கல்வி நிலையம் மாபெரும் கல்வி நிலையமாக வளர்ந்து விட்டது. நிறைய போட்டி ஸ்தாபனங்கள் தோன்றி விட்டன. இது இன்னும் தொடரும் சோதனை.

**தங்கள் கல்வி நிலையத்தில் சேர என்ன தகுதி வேண்டும்?**

தமிழ் அல்லது அவரவர் தாய் மொழியில் (மலையாளம், கன்னடம், தெலுங்கு, ஹிந்தி) எழுதவும் படிக்கவும் தெரிந் தால் போதும். எங்கள் முகவரிக்குத் தங்கள் தேவை என்ன என்பதை எழுதினால் அவர்களை மாணவர்களாக ஏற்றுக் கொண்டு விடுவோம். ஆங்கிலம் எழுத, பேசத் தெரியாதவர்கள் கூட எங்களது நிலையத்தில் 9 மாத காலப் பயிற்சிக்குப் பிறகு சரளமாக ஆங்கிலத்தில் எழுதிப் பேசலாம்.

**விவேகானந்தா கல்வி நிலையம் அளிக்கும் பயிற்சிப் பிரிவுகள் என்னென்ன? அவற்றின் பயிற்சிக் காலம், கட்டணம் இவற்றை விளக்குங்கள்.**

ஆங்கிலம் கற்க விரும்புவோரது கல்வித் தகுதிக்கேற்ப பாடத் திட்டம் அடிப்படை, இலக்கணம், மற்றும் உரையாடல் என்று மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

அடிப்படை (Basic English) - 3 மாதம்
இலக்கணம் (Grammar) - 3 மாதம்
உரையாடல் (Spoken English) - 3 மாதம்.

ஒருவர் இவற்றில் எதை வேண்டுமானாலும் தேர்ந்தெடுக்கலாம். மூன்றையும் படிப்பதானால் மேலே குறிப்பிட்ட வரிசையிலேயே பாடங்கள் அனுப்பப்படும். அதாவது அடிப்படைப் பயிற்சி முடிந்த பின் இலக்கணமும், இறுதியாக உரையாடல் பயிற்சியும் அளிக்கப்படும். இவை மூன்றிற்கும் சேர்த்து நாங்கள் வசூலிப்பது ரூ. 350/- மட்டுமே.

**இவ்வளவையும் கற்பிக்க சிறப்பான ஆசிரியர்கள் தேவைப்படுவார்களே?**

நிச்சயமாக. இக்கல்வி நிலையத்தில் 18 ஆசிரியர்கள் பணி புரிகிறார்கள். அனைவரும் ஆங்கிலம் எம்.ஏ. பட்டம் பெற்றவர்கள். பலர் கல்லூரி விரிவுரையாளர்களாகப் பணியாற்றியவர்கள். இவர்களில் ஓய்வு பெற்ற மாவட்டக் கல்வி அதிகாரி ஒருவரும் அடங்குவார்.

**தங்கள் ஆங்கிலப் பயிற்சிகளை எந்தெந்த முறையில் அளிக்கிறீர்கள்?**

இதற்கான பதிலை நீங்கள் நேரில் தெரிந்து கொள்வதுதான் நல்லது.

• சம்பத் • கணேஷ் • ராஜகோபால் • மோகன்



# என் மைத்துனி கூறினாள்: நன்றி அண்ணி...



# அதற்கு நான் கூறினேன்: நன்றி ஸரள்

உண்மையிலேயே அந்த ஒரு நாள் நான் தர்மசங்கடமான நிலைக்கு உள்ளானேன். என் மைத்துனி மற்றும் மைத்துனர் காலையிலேயே புறப்பட வேண்டி இருந்தது. காலையில் அவர்களுக்கு காபி மற்றும் டிபன் கொடுக்க வேண்டியது குறித்து கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். ஏனென்றால், துரதிருஷ்டவசமாக கேஸ் தீர்ந்து விட்டது. ஆனால், அவர்களுக்கு காபி, டிபன் கொடுக்காமல் எப்படி அனுப்புவது ?

அனைத்து விஷயங்களில் சுதந்திரத்தை அனுபவிக்கும் பக்கத்து வீட்டு சரளாவைப் பற்றி உடனடியாக எனக்கு ஞாபகம் வந்தது. அவளிடம் கேஸ் கிடையாது. இதைப் பற்றி கேட்டதும் அவள் பெருமிதத்துடன் கூறினாள் "கேஸ் இல்லேனா என்ன ... ஸரள் இருக்கே"!

நடைமுறைக்கு ஏற்றவாறு தன் வாழ்க்கையை அவள் அமைத்துக் கொண்டது என்னை மிகவும் கவர்ந்தது. இதனால் எனக்கு ஏற்பட்ட கூடுதல் நற்பயனைக் கூறட்டுமா ? என் மைத்துனி மற்றும் மைத்துனர் மிக அன்போடு என்னிடம் கூறினார்கள் "நன்றி, அண்ணி".





DRISHTY-RJT.

IS 2980

HAMARA SANSAAR

**ஸரள்**

DISTRIBUTORS FOR
TAMILNADU AND PONDICHERY

**Naik BROTHERS**

62, JERMIAH ROAD 1st FLOOR, VEPERY,
OPP. BENTINCK HIGHER SEC. SCHOOL
(NEAR DOVETON TOWER) MADRAS-600 007
PH. 6421115, 6422006

முதல்வர் திரு ராஜகோபாலன் அவர்கள் அப்போது நடந்து கொண்டிருந்த இலக்கண வகுப்பிற்கு அழைத்துச் சென்றார். திரு. சம்பத் அவர்கள் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். Present perfect tense பற்றிய இலக்கணப் பாடம் அது. இலக்கணத்தை சமீபத்திய புதிய முறையில் ''structural'' ஆக எடுத்தார். பல உதாரணங்களைக் காட்டி மாணவர் களையும் சொற்றொடர்களை அமைக்க ஊக் கப்படுத்தினார். சட்டென்று ஒரு மூதாட்டி யிடம் "நீங்கள் have, has இவற்றைப் பயன் படுத்தி ஒரு சொற்றொடர் சொல்லுங்கள்" என்றதும் அவர் என்னையே சிறிது நேரம் பார்த்து விட்டு. ''I have not seen you before'' என்றார். வகுப்பில் இளைஞர் முதல் முதியவர் வரை அனைவரும் மிக உற்சாகமாக ஆங்கிலம் கற்பதுடன் அதை உடனுக்குடன் பயன் படுத்தவும் செய்கின்றனர்.



அடுத்தது ''spoken English'' வகுப்பு. இந்த வகுப்பை நடத்திக் கொண்டிருந்தவர் திரு எஸ். மோகன். பேச்சு என்பது மிக எளிய வார்த்தைகளைக் கொண்டதாக, உரையாடும் இருவருக்கும் புரியும்படியாக இருக்க வேண் டும் என்பதை வலியுறுத்தினார். இந்தியச் சூழ்நிலைக்கேற்ற ஆங்கில உரையாடலைக் கற்பித்தார். அன்று ''Little'' என்ற வார்த்தை யின் பல்வேறு பொருளையும், அவற்றை எந்தெந்த சூழ்நிலையில் பயன்படுத்த வேண் டும் என்பதையும் விளக்கினார். மாணவர் களின் அன்றைய உரையாடலில் ''little'' என்ற வார்த்தை வரும்படி பேசச் செய்தார். தவிர சமீபத்திய பிரச்னைகளைக் குறித்து குழு உரையாடலையும் (group discussion) நடத்தினார். 'ப்ளேக்' நோய் பற்றி மாணவர் கள் சுவையாக விவாதம் நடத்தினர்.

நேர்முக வகுப்பில் சுமார் 30 அல்லது 35 மாணவர்கள் இருக்கிறார்கள். இவர்களின் சந்தேகங்கள், தவறுகள் இவற்றைக் கவனிக்க ஆசிரியர்கள் இருக்கிறார்கள். ஆனால் தபால் மூலம் பயிலும் மாணவர்களுக்கு இத்தகைய வாய்ப்பு குறைவுதானே? சந்தேகத்தை முதல்வ ரிடமே கேட்டேன்.

"எங்கள் கல்வி நிலையத்தில் ஒவ்வொரு பயிற்சிக்கும் மாதத்திற்கு 5 தொகுப்பு என்று பாடங்கள் அமையும். இத்தொகுப்புகளை ஒரு மாதத்தில் முடித்ததும் பயிற்சி ஏடு ஒன்று இருக்கும். அதை நிறைவு செய்து அனுப்ப வேண்டும். தவிர வெள்ளைத் தாள் களை நாங்கள் இணைத்து அனுப்பியிருப் போம். அதில் மாணவர்கள் பாட சம்பந்த மாகத் தோன்றும் சந்தேகங்களை எழுதி அனுப்ப லாம். தவிர மாணவர்களுக்கு பாட சம்பந்த மில்லாத சந்தேகங்களுக்காக "உங்களுக்காக" என்ற பாடத் தொகுப்பையும் ஒவ்வொரு

மாதமும் அனுப்புகிறோம். இவை அனைத்தையும் படித்துத் திருத்தி, விளக்கங்கள், ஆலோசனைகள் இவற்றை எழுதி அனுப்ப ஒரு தனியான ஆசிரியர் குழுவே இயங்கி வருகிறது. தவிர ஒவ்வொரு மாதமும் சனி, ஞாயிறுகளில் ஒவ்வொரு மாவட்டத் தலை நகரில் எமது ஆசிரியர்க்குழு தபால் மூலம் பயிற்சி பெறும் மாணவர்களுக்கு நேரடி வகுப்பு நடத்துவர். இதற்குக் கட்டணம் எதுவும் கிடையாது. சுமார் நான்கு மணி நேரம் நடக்கும் இந்த வகுப்புகளுக்கு மாவட்டத்தின் பல பகுதியிலுள்ள மாணவர்களும் ஆர்வத்துடன் கலந்து கொள்வார்கள். வகுப்புகள் முடிந்த பின்னும் சந்தேகங்கள் கேட்கும் மாணவர்களுக்குப் பல மணி நேரம் செலவிட்டு பொறுமையாகப் பதில் சொல்லும் எம் ஆசிரியர்களின் கடமை உணர்வை நான் பாராட்டத்தான் வேண்டும். மேலும் உரையாடல் பயிற்சி பெறும் மாணவர்களுக்குச் சரியான உச்சரிப்பு வருவதற்காக தபால் செலவுடன் சேர்த்து ரூ. 45/- அனுப்பினால் ஆடியோ கேஸட் ஒன்றையும் அனுப்பி வைக்கிறோம். இவ்வளவு வசதிகள் இருப்பதால் தபால் மூலம் பயிற்சி பெறும் மாணவர்கள் சிறப்பாகவே ஆங்கிலம் கற்கின்றனர் எனலாம்."

**இக்கல்வி நிலையத்தில் எத்தகைய மாணவர்கள் வருகிறார்கள்? என்னென்ன காரணங்களுக்காக ஆங்கிலம் கற்க விரும்புகிறார்கள்? இவை போன்ற தகவல்களைக் கேட்டபோது மாணவர்களோடு நெருங்கிய தொடர்புடைய ஆசிரியர்களே ஆர்வமுடன் பதில் அளித்தனர்.**

**பேராசிரியர் சம்பத் :**

இவர் குறிப்பாக இலக்கண வகுப்புகளையும், உரைநடை வகுப்புகளையும் எடுக்கிறார். இவர் எடுக்கும் வகுப்புகளில் பெரும்பாலும் பெண்கள்தான் கற்கிறார்கள். (ஆசிரியர்களிலேயே சீனியராக இவர் இருப்பது காரணமோ?) இவர் தம் மாணவிகளைப் பற்றிக் கூறும் போது, "பெண்கள் நுனிப்புல் மேய்வதை விரும்புவதில்லை. எதையும் மிகவும் ஸிஸ்டமேடிக் ஆகச் செய்கிறார்கள். எனவே தான் உரையாடலுக்கு இலக்கணம் தேவை என்பதால் இரண்டையும் கற்கிறார்கள். பயிற்சி, வீட்டுப் பாடம் இவற்றை கூச்சப் படாமல் கேட்பதும் பெண்கள்தான்.

நான் எடுக்கும் வகுப்பில் பள்ளி மாணவி முதல் பாட்டிமார்கள் வரை உண்டு. இல்லத் தலைவிகள், கல்லூரி மாணவிகள், வேலை தேடுபவர்கள், வேலைக்குச் செல்பவர்கள் இப்படிப் பல ரகத்தினர் பல காரணங்களுக்

காக ஆங்கிலம் கற்கிறார்கள்.

படபடவென்று ஆங்கிலத்தில் பேசும் கான்வெண்ட் படிக்கும் தன் குழந்தையோடு பேசுவதற்கும், வீட்டுப் பாடத்தில் உதவுவதற்கும் பல தாய்மார்கள் ஆங்கிலம் கற்கிறார்கள். இளம் பெண்களில் பலர் வேலை வாய்ப்பிற்காக நேர் முகத்தேர்வில் (interview) தடையின்றி உரையாடுவதற்காகவும், ஆங்கிலத்தில் மட்டுமே கற்பிக்கப்படும் கம்ப்யூட்டர் கோர்ஸ் படிப்பதற்காகவும், ரிஸப்ஷனிஸ்ட் போன்ற வேலைகளில் சரளமாகப் பேசவும் ஆங்கிலம் கற்க விரும்புகின்றனர். இவ்வளவு ஏன், பல கல்லூரி மாணவிகள் கல்லூரி சூழ் நிலையில் சரிவர ஆங்கிலம் பேச இயலாததால் ஒருவித complex ஏற்படுகிறது என்பதற்காகவே உரையாடல் பயிற்சி பெறுகின்றனர். பதவி உயர்விற்காகவும், வேறு மாநிலங்களுக்கு மாற்றலாகிப் போகும் நிலையிலும் ஆங்கிலம் பெண்களுக்கு அவசியமாகிறது.

எல்லாவற்றையும் விட சுவையானது வயதான பெண்மணிகள் ஆங்கிலம் கற்பதற்காகக் கூறும் காரணம்தான். வெளிநாட்டிலுள்ள பேரன் பேத்திகள் இந்தியா வரும்போது அவர்களுடன் பேச வேண்டும் என்பதற்காகவும், வெளி நாட்டிலுள்ள பிள்ளை, பெண் வீட்டிற்குச் செல்ல வேண்டிவரும்போது அங்கு பேச வேண்டும் என்பதற்காகவும் 70, 80 வயதான மூதாட்டிகள் கூட ஆர்வமுடன் இங்கு ஆங்கிலம் பயில வருகிறார்கள்" என்கிறார் திரு. சம்பத் அவர்கள்.

**பேராசிரியர்கள் திரு. எஸ். மோஹன், திரு கணேஷ் :**

இவ்விருவரும் ஆண்களுக்கு உரையாடல் வகுப்புகளை நடத்துகிறார்கள். இவர்களிடம் ஆங்கிலம் பயில வருபவர்களில் பல டாக்டர்கள், வக்கீல்கள் கூட உண்டாம். பயிற்சி முடியும் சமயம் மனம் விட்டுப் பேசும் போது தாங்கள் இன்னார் என்று கூறுவார்களாம். இவர்கள் கணிப்பின் படி ஆண்களுக்கு மிகவும் systematic ஆக எடுத்தால் "போரடிக்கிறது" என்பார்களாம். எனவே நேரடியாக உரையாடல், குழு விவாதம் என்று துவங்கி தேவைப்படும் இடங்களில் விளக்கமும், இலக்கணமும் சொல்ல வேண்டும். "இவர்களும் பல்வேறு துறையினர், பல்வேறு வயதினராக இருப்பதால் இவர்களை மாணவர்கள் போல நடத்தக் கூடாது. நண்பர்கள் போல நடத்த வேண்டும். குறைகளைக் கூட தனிப்பட்ட முறையில்தான் சுட்டிக் காட்டுவோம்'' என்கிறார்கள்.

''ஆண்களில் வியாபாரத்தைப் பெருக்க விரும்புவோர், சரளமாக ஆங்கிலம் பேசினால்

பொருட்களை விற்க முடியும் என எண்ணும் விற்பனைப் பிரதிநிதிகள், வேறு மொழி மாநிலங்களில் தொழில் துவங்கும் போது ஆங்கிலம் தேவை என விரும்பும் சிறு தொழி லதிபர்கள், தவிர ஆங்கிலத்திலேயே கற்பிக்கப் படும் கம்ப்யூட்டர் கோர்ஸ் டெலக்ஸ் ஆப ரேட்டர் கோர்ஸ், பர்ஸனல் செகரட்ரி கோர்ஸ் ஆகியவை படிக்க விரும்புவோர் என பல வகைப்பட்டவர்கள் ஆங்கிலம் பயில இங்கு வருகிறார்கள்.

இவர்களில் பலர் இங்கு பெற்ற ஆங்கில அறிவாலேயே பி.ஏ., எம்.ஏ. என்று ஆங்கில இலக்கியம் படித்து கல்லூரியில் பட்டமும் பெற்றுள்ளனர். ஆண்கள் அதிகம் விரும்புவது உரையாடல் பயிற்சி மட்டுமே, என்கிறார்கள் இவ்வாசிரியர்கள்.

இக் கல்வி நிலையம் வார நாட்களில் காலை 7.30 முதல் இரவு 8.30 வரை இயங்கு கிறது. இல்லத்தரசிகளுக்கான தனி வகுப்புகள் பகல் 10.30 முதல் 12.30 வரை நடை பெறுகிறது. பயிற்சி முடித்த பிறகு கூட சில மாணவர்கள் தங்கள் உரையாடல் திறமையை வளர்த்துக் கொள்ள விரும்பினால் அதற்காக Saturday Club இயங்கி வருகிறது. மாதம் ரூ. 10 செலுத்தி இதில் அங்கத்தினர் ஆகிவிட்டால் ஒவ்வொரு சனிக்கிழமையும் பழைய மாண வர்கள் கூடி ஆசிரியர் கண்காணிப்பில் உரை யாடல் பயிற்சி பெறலாம். தவிர Effective English என்றும் ஒரு பயிற்சி வகுப்பு நடை பெறுகிறது. ஆங்கிலத்தில் சிறப்புத் தகுதி பெறுபவர்களுக்காக நடத்தப்படுவது இவ் வகுப்பு. இதே போல வெளிநாடு செல்ல விரும்புகிறவர்களுக்கு முறைப்படி ''Received Pronunciation'' என்ற பயிற்சியில் British Phonetics முறைப்படி ஆங்கிலம் கற்பிக்கப்படு கிறது. இவர்கள் பேசுவது மேல் நாட்டினர் பேசுவது போன்ற உச்சரிப்புடன் இருக்கும்.

இதுமட்டுமல்ல. வார நாட்களில் வரமுடி யாமல் ஞாயிறு மட்டும் வர முடியும் என்று இருப்பவர்கள் என்ன செய்ய? இவர்களுக்காக 6 மாதப் பயிற்சி ''Sunday Class'' என்பதில் அளிக்கிறார்கள். இதில் கலந்து கொள்ள வேலூர், செங்கல்பட்டு, காஞ்சி, கும்மிடிப் பூண்டி ஆகிய ஊர்களிலுள்ள காய்கறி வியா பாரிகள், சிறு தொழில் செய்பவர்கள், சினிமா உலகைச் சேர்ந்த மியூஸிக் டைரக்டர்கள், துணை இயக்குனர்கள் (assistants) ஜூனியர் ஆர்டிஸ்ட் ஆகியோர் ஆர்வமுடன் பலன் பெறுகிறார்கள். வெளியூரிலிருந்து வருப வர்கள் வசதிக்கேற்ப வகுப்புகள் காலை 10 முதல் 1 மணி வரை நடைபெறும்.

இதைத் தவிர மாம்பலம் ரயில் நிலையம், ரங்கநாதன் தெரு ஆகிய இடங்களில் கடை வைத்திருக்கும் பலரும் உரிமையோடு உள்ளே நுழைந்து ஆங்கிலத்தில் ஏற்படும் சந்தேகங் களைத் தீர்த்துக் கொள்வதும் உண்டாம்.

### மேலும் சில சுவையான தகவல்கள் :

1. 1981 ஆண்டு முதல் 1986 ஆம் ஆண்டு வரை தபால் மூலம் ஆங்கிலம் பயிற்சி பெற்ற மாணவர்கள் எண்ணிக்கை 46 ஆயிரம்.

2. 1991 ல் இது ஒரு லட்சமாக உயர்ந்த போது அதைக் கொண்டாட நடத்திய விழா வில் 1 லட்சமாவது மாணவருக்கு திருமுருகக் கிருபானந்த வாரியார் அவர்கள் புத்தகங் களை வழங்கி நிலையத்தை வாழ்த்தினார்.

3. 1993 ல் இதுவே 2 லட்சமாக உயர்ந்தது. அப்போது நடிகர் கமலஹாசன் 2 லட்சமாவது மாணவிக்குப் புத்தகங்கள் வழங்கி கல்வி நிலையத்தின் பணிகளைப் பாராட்டிப் பேசி னார்.

4. 27.9.94 அன்று வரை நிலையத்தின் கம்ப்யூட்டரில் பதிவாகியுள்ள மாணவர் களின் எண்ணிக்கை 3,52,282 ஆகும்.

5. தமிழ் மொழி தவிர ஹிந்தி, மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகள் மூலமும் ஆங்கிலம் கற்பிக்கப்படுவதால் இந்தி யாவின் பெரும்பாலான மாநிலங்களில் உள்ள மாணவர்களும் இதன் உறுப்பினர்கள்.

6. இவர்கள் மாதர் சங்கங்களுக்குச் சென்று வகுப்புகள் எடுக்கின்றனர். அதற்கெனவே தனிப் பிரிவும் இயங்குகிறது. "அவர்களுடைய நேர வசதிக்கேற்ப நாங்கள் வகுப்பு எடுக் கிறோம்" என்கிறார்கள்.

---

## தயாரிப்பாளர்களுக்கு ஒரு யோசனை

**எவர்சில்வர் இட்லி குக்கரில் ஒரு சங்கடம். இட்லி வெந்ததும், சூட்டோடு உடனே மூடியைத் திறக்க வேண்டி யிருப்பதால், கத்தி அல்லது சட்டுவத்தை வைத்து மூடியை நெம்பி நெம்பித்தான் திறக்க வேண்டியுள்ளது. (நன்றாக ஆறியபின் திறக்கலாம் என்றால் அதற்குள் இட்லி கல்லாய் ஆகிவிடும்.) அவசர வேளையில் அப்படித் திறக்கும்போது, ஆவி பறக்க இட்லி அவர்களுக்கு என்றால், ஆவி துடிக்கக் கையில் சூடு எங்களுக்கு! 'இப்படி நோகாமல் இருக்க, இட்லி குக்கர் மூடியையும், கேஸ்கட் வைத்து, நீண்ட மரப்பிடியுடன் வடிவமைத்துத் தயாரித்தால் சௌகர்யமாக இருக்குமே!**

**- நிர்மலா ரமணி**





மாக்கோலம் போடும் மாவில் இரண்டு சொட்டுகள் பெவிகால் விட்டுக் கோலம் போட்டேன். மொசைக் தரையிலும் பளிச் சென்று தெரிந்தது. எவ்வளவு காலடிகள் பட்டும் மாவு உதிரவில்லை. கோலம் அழிய வில்லை. இதை நீங்களும் செய்து பார்க்கலாமே!

– லட்சுமி

---

**இக் கல்வி நிலையத்தின் மூலம் ஆங்கிலம் பயின்று வரும் சில மாணவர்களை பேட்டி கண்ட போது -**

**திருமதி தமயந்தி** : இவர் உரையாடல் பயிற்சி பெறுகிறார். தன் பேரக் குழந்தைகளுக்கு ஆங்கிலத்தில் சுவையாகக் கதை சொல்லி அவர்களை தன் வசியப்படுத்த வேண்டும் என்ற ஆசைதான் காரணம் என்கிறார். "மருத்துவ மனைகளுக்குச் சென்றால் ரிஸப்ஷனிஸ்ட் முதல் டாக்டர் வரை எல்லோருமே ஆங்கிலத்தில் பேசுவதால் அவர்கள் கூறுவதைப் புரிந்து கொள்ள ஆங்கில அறிவு அவசியமாகிறது'' என்கிறார்.

**திரு மஹாவீர்** : இவர் சென்னை ஐ.ஐ.டி (I.I.T) யில் M.Tech படிக்கும் மாணவர். மராட்டி தாய்மொழி. தன் மாநிலத்தில் இருக்கும் வரை மொழி ஒரு பிரச்னையாக இல்லையாம். இங்கு வந்த பின் ஆங்கிலம் மிகவும் தேவையாக இருக்கிறது என்கிறார். இவர் M.B.A. படிக்க விரும்புவதால் ஆங்கில உரையாடல் பயிற்சி பெறுகிறார். சரளமாக ஆங்கிலம் பேசும் இவர் இத்திறமையால் நேர்முகத் தேர்வில் வெற்றி பெற்று வேலையும் கிடைத்து விட்டதாக மிக மகிழ்வுடன் கூறினார்.

**திரு ரமேஷ், திரு ஸ்ரீனிவாஸ ராவ்** : இவ்விருவரும் தாய்மொழி தெலுங்காக இருப்பதால் தமிழ் நாட்டில் தாங்கள் துவங்க இருக்கும் தொழிலுக்கு ஆங்கிலம் மிக அவசியம் என்கின்றனர். ப்ளஸ் 2 படித்துள்ள திரு ரமேஷ் சிறு தொழில் துவங்கி உதிரி பாகங்களைத் தயாரிக்க விரும்புகிறார். கம்பெனிகளுக்குச் சென்று ஆர்டர் வாங்க சரளமாக ஆங்கிலம் பேச வேண்டும் என்பதால் உரையாடல் பயிற்சி பெறுகிறார். A.M.I.E. பட்ட தாரியான திரு ஸ்ரீனிவாஸ ராவ், "Subject knowledge" இருந்தாலும் அதை வெளிப்படுத்த "Communication Problem" இருப்பதால் என்னால் சரிவர விளக்க முடிவதில்லை. பயிற்சி பெற்ற பின் ஆங்கில அறிவோடு தன்னம்பிக்கையும் வளர்ந்து விட்டது'' என்கிறார்.

**திருமதி கற்பகம்** : இவர் P.U.C. வரைதான் படித்துள்ளார். கோவை பொறியியற் கல்லூரியில் படிக்கும் தன் மகன் விடுமுறைக்கு வந்தால் அவனுடன் ஆங்கிலத்தில் உரையாட வேண்டும் என்ற ஆர்வத்தினாலேயே ஆங்கிலம் கற்கிறார்.

**சக்திராஜன், டி. சந்திரசேகரன்** : சக்திராஜன் பச்சையப்பா கல்லூரி மாணவர். சந்திரசேகரன் க்ரெஸன்ட் இஞ்சினீரிங் கல்லூரி மாணவர். இருவரும் பள்ளி நாட்களில் பள்ளிச் சூழ்நிலையில் ஆங்கிலம் பேச வாய்ப்பு இல்லாததால் கல்லூரியில் தனிமையாக விடப்படுகிறார்களாம். சரளமாக, நண்பர்களைப் போல் ஆங்கிலம் பேச ஆசை. சந்திரசேகரன் வேலை வாய்ப்பு சமயத்தில் group discussion நடக்கும் போது நன்றாகப் பேச ஆங்கிலப் பயிற்சி தேவை என்கிறார்.

சக்திராஜன் தன் தந்தையின் நண்பர்கள் அளிக்கும் விருந்து, get together பார்ட்டிகளில் அங்கு வரும் இளைஞர்களுடன் பேசவும், தன் பர்ஸனாலிடியை உயர்த்திக் கொள்ளவும் ஆங்கில உரையாடல் அவசியம் என்றார். "ஆங்கிலத்தில் பேசும் இளைஞர்கள் பக்கம்தான் மாணவியரின் கடைக்கண் பார்வை படுமாமே, அதற்காகவும் கூடத்தான் இந்தப் பயிற்சியா?" என்று வேடிக்கையாகக் கேட்ட போது, ஒரு நிமிடம் யோசித்து, "அட, இப்படி ஒரு வசதி கூட இருக்கா, அப்ப இனி எங்கேயும் இங்லீஷ், எதிலேயும் இங்லீஷ்'' என்று உற்சாகமாகத் துள்ளினார்.

இவர்கள் பேட்டி சரி. சில வித்தியாசமான மாணவர்களின் கதையைப் படிக்க வேண்டாமா? இவர்கள் ஆங்கிலம் படிக்க வந்ததே ஒரு விபத்தாக, எதிர்பாராத விதமாக, அமைந்த நிகழ்ச்சிகள் சுவையானவை. (பெயர்கள் மாற்றப்பட்டுள்ளன.)

திருமதி மஞ்சு 16 வயதில் திருமணமாகி சென்னையில் குடியேறிய ஆந்திர மங்கை. பத்து வருடங்களில் 3 குழந்தைகள் பிறந்த பின்னும் தமிழோ ஆங்கிலமோ கற்கவில்லை. ஒரு நாள் திடீரென்று ராஜமுந்திரியிலிருந்து போன் வர அந்தத் தகவலைச் சொல்ல மனைவி செல்ல வேண்டும். பள்ளியிலிருந்து பிள்ளைகள் வந்தால் எப்படித் தகவலைச் சொல்ல? நேரமாகும் என்பதை எப்படி தெரிவிக்க? பக்கத்து வீட்டுக்காரர் வடக்கத்திக்காரர்கள். அவர்களுக்குத் தெலுங்கு தெரியாது. இவருக்கு ஹிந்தி தெரியாது. அன்று எப்ப

டியோ மாலை 6 மணிக்கு வீடு வந்து சேர்ந்த பின் ஏற்பட்ட அழுகையும், சோகமும் அவரை உடனே விவேகானந்தாவில் சேரத் தூண்டியது.

திருமதி கிரிஜாவின் நிலை வித்தியாசமானது. சென்னை ராஜா அண்ணாமலைபுரத்தில் வசிக்கும் இவரது அடுத்த வீட்டு சீக்கிய நண்பர் அலுவலகம் செல்லும் வழியில் விபத்து ஏற்பட்டு மருத்துவமனையில் அட்மிட் ஆகி இருப்பதாக இவருக்கு போன் வர அந்தச் செய்தியை அவரது சீக்கிய மனைவிக்கு எப்படிப் புரிய வைப்பது? "அன்று நான் அடைந்த தவிப்பை இன்னொரு சமயத்தில் அடையக்கூடாது என்றுதான் உங்கள் விளம்பரத்தைத் தேடிப் பயிற்சியில் சேர்ந்தேன்" என்று எழுதுகிறார் கிரிஜா.

இதே போல் பாண்டி பஜாரில் பூக்கடை வைத்துள்ள சிறுவன் ஆங்கிலம் பயில வந்த பின் "காஷ்மீரிலிருந்து பூக்களைத் தருவிக்கவும், வியாபார விஷயமாக இரண்டு வரி எழுதவும் எனக்கு ஆங்கிலம் தேவை. எனக்கு, எதற்காக adjective, noun எல்லாம் சொல்லித் தருகிறீர்கள்?" என்று கேட்டு இவர்களின் சிந்தனையைத் தூண்டி, பாடத் திட்டங்களில் மாற்றங்களைச் செய்யக் காரணமாக இருந்தானாம்.

ஆங்கிலம் கற்கும் ஆர்வத்தில் கட்டட வேலை செய்யும் கொத்தனார் மனைவி தான் எஸ்.எஸ்.எல்.ஸி. வரை படித்துள்ளதாகப் பொய் சொல்லிச் சேர, முதல் டெஸ்டில் வெற்றுப் பேப்பரைத் தந்த பின்தான் விஷயமே தெரிந்தது, அவர் படித்தது 3ம் வகுப்பு வரைதான் என்று! ஆயினும் அவர்மீது பரிதாபப்பட்டு ஒரு வருடத்தில் தமிழில் அ, ஆ, முதல் ஆங்கில எழுத்துக்கள் வரை அனைத்தும் கற்பித்து பயிற்சி முடிவில் சிறு சிறு ஆங்கில வாக்கியங்களைப் பேசும் அளவிற்கு அவரைத் தேற்றியது கல்வி நிலையத்தின் சாதனையே!

இவ்வளவையும் கூறிவிட்டு இக்கல்வி நிலையத்தின் நிர்வாக அலுவலகத்தைப் பற்றிக் கூறாவிட்டால் அது முழுமை பெறாது. சென்னை தி.நகர் நடேசன் சாலையில் அமைந்துள்ள இந்த 3 மாடிக் கட்டடம் சுமார் 65 அலுவலர்களைக் கொண்டு இயங்குகிறது. நுழைந்ததும் Reception, பிறகு சுமார் 10 கம்ப்யூட்டர்கள் கொண்ட அறை; கடிதங்களை மொழிவாரியாகப் பிரித்து பதில் தயாரிக்க அம்மொழியில் வல்லுனர்கள், மாடியில் தட்டெழுத்து யந்திரங்களுடன் ஒரு பெரிய ஹால், அன்று அனுப்ப வேண்டிய பாடங்கள் மட்டுமே ஓர் அறையின் அலமாரிகள் நிறைய அடுக்கப்பட்டிருந்த காட்சி, தொலைக்காட்சி 'சுரபி'யில் வரும் கடிதக் குவியல் போல தபாலுக்கு அனுப்ப வேண்டிய பாடங்கள், கவர்கள், கடிதங்கள் அடங்கிய குவியலிலிருந்து எழுந்து சிரிக்கும் அலுவலர்கள்; இவர்கள் அனைவரையும் தன் புன் சிரிப்பு, இன் முகம், மென் குரல் இவற்றால் இயக்கி வேலை வாங்கும் நிர்வாகச் செயலாளர் திருமதி கீதா பிரபு. இவர்கள் அனைவரும் சேர்ந்து ஒரு தேனீக் கூட்டத்தின் சுறுசுறுப்புடன் இயங்குவதும் விவேகானந்தா கல்வி நிலையத்தின் வெற்றிக்குக் காரணம் எனலாம்.

இவை அனைத்தையும் பார்வையிட்ட பின் மீண்டும் முதல்வர் அன்புடன் "இன்னும் ஏதாவது தகவல் தேவையா?" என்றார். சட்டென்று, "எங்கள் மங்கையர் மலர் வாசகிகள் பலர் பல பார்ட்டிகளில் பங்கேற்கிறார்கள். விருந்து கொடுக்கிறார்கள். அப்போது பேச வேண்டிய சில ஆங்கிலச் சொற்றொடர்களைக் கூறுங்களேன்" என்றேன். இதோ....

விருந்(தளிக்கப்)துக்குப் போகிறீர்களா?

விருந்து கொடுப்பவர்கள், வீட்டையும், தன்னையும் அலங்கரித்து, சுவையான உணவு வகைகளைத் தயாரித்தால் மட்டும் போதாது. வரும் விருந்தினர்களைத் தக்க சமயத்தில் தகுந்த வாக்கியங்களால் (ஆங்கிலமாக இருப்பது இப்போது நாகரீகம்) உபசரிப்பது மிகவும் அவசியம்.

**நீங்கள் விருந்தளிப்பவரானால் (hostess) :**

வருபவர்களை,

1. Please, come in.
2. Nice of you to make it.
3. Very nice to have you here.
4. I am glad that you have come

இவற்றில் ஏதாவது ஒன்றைச் சொல்லி வர வேற்கலாம். (வெவ்வேறு நபருக்கு வெவ்வேறு வாக்கியங்களைச் சொல்வது நம் ஆங்கில அறிவைக் காட்டும்).

---



பார்ப்பதற்கு எளிமையாகவும் சுலபமாகவும் தோன்றும் இக்கோலம், போடும்போது சற்றுக் குழப்பமாக இருக்கும். போட்டுத்தான் பாருங்களேன்.

- பப்புலு

# நிலத்தின் வளத்துக்கும் ஒரு நிதி நிறுவனத்துக்கும் என்ன சம்பந்தம்?





சக்தி பைனான்ஸ் — வங்கிகளுக்
இணையான பாதுகாப்

பயிர் செழிக்க நல்ல விதை இருந்தால் மட்டும் போதாது. உரிய தண்ணீர் வசதி இருந்தாலும் போதாது. அது பயிரிடப் படும் நிலம் வளம் நிறைந்த தாக இருக்க வேண்டும். அந்தப் பயிருக்கேற்ற நிலமாக, சத்து நிறைந்ததாக, சிறந்த ஊட்டம் அளிக்கக் கூடியதாக இருக்க வேண்டும். நிலம் வளமாக இருந்தால் நிறைந்த அறுவடை என்பதில் விவசாயிகளுக்கு நம்பிக்கை.

சக்தி பைனான்ஸையும் மக்கள் அப்படித்தான் நம்புகிறார்கள். உங்களுடைய சேமிப்புக்கு சக்தி பைனான்ஸ் அதிக பாது காப்பு அளிக்கிறது. உங்கள் நலனில் அக்கறை கொண்டு உங்கள் சேமிப்புக்கு நீங்கள் அதிக வருமானம் பெற வகை செய்கிறது. சக்தி பைனான்ஸின் ஸ்திரத்தன்மையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

சக்தி நிறுவனங்களின் எண் ணிக்கை 20. மொத்த ஆண்டு வர்த்தகம் ரூ. 700 கோடி. 1.5 லட்சம் டெபாசிட்தாரர்கள் மிகுந்த நம்பிக்கையோடு வைத் திருக்கும் டெபாசிட் தொகை ரூ. 150 கோடி. நாடு முழுவதும் 37 கிளைகள். 25 சேமிப்பு மையங்கள். பரவலாகப் பாது காப்புப் பெட்டகங்கள்.

சக்தி பைனான்ஸ் ஒவ் வொரு வாடிக்கையாளரின் தேவையையும் பூர்த்தி செய் வதில் தனிப்பட்ட கவனம் செலுத்துகிறது. அதற்காகவே அவர்களின் தேவைகளைப் புரிந்து கொண்டு பல புதுமை யான திட்டங்களை முதன் முதலாக அறிமுகப்படுத்திய சிறப்பையும் பெற்றுள்ளது. அது மட்டுமல்ல, இத்தகைய திட்டங்களைப் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து அறிமுகப்படுத்தி விரைவாகச் செயல்படுத்துவதிலும் முன் னோடியாகத் திகழ்கிறது.



உங்கள் சேமிப்புகளை சக்தி பைனான்ஸில் டெபாசிட் செய் யுங்கள். நிம்மதி பெறுங்கள்.



**சக்தி**
**பைனான்ஸ் லிமிடெட்**

பதிவு அலுவலகம்:
475, டாக்டர் நஞ்சப்பா சாலை,
கோயம்புத்தூர்-641 018.
தொலைபேசி எண்கள்:
231471/231472/231473/231474

வந்தவர்களை அமரச் செய்ய,

"Please be seated" அல்லது "Make yourself comfortable" என்றோ "have your seat என்றோ சொல்லலாம்.

விருந்துக்கு முன்னால் ஏதாவது அருந்த விரும்பினால், "Would you like to have something to drink?" என்று கேட்கலாம். அல்லது,

"What would you prefer, hot or cold?" என்று கேட்கலாம்.

விருந்துண்ணும் நேரம் நெருங்கியதும்,

"Shall we adjourn for the dinner?/lunch?

"Shall we start?"

"I think it is time for dinner"

"Shall we?"

இப்படிக் கேட்கலாம்.

விருந்துண்ண ஆரம்பித்தவுடன், உணவைப் பரிமாறும் போது,

"Please help yourself"

"Shall I get you some more salad?"

"Please try this new menu, it's quite tasty."

என்றெல்லாம் கூறலாம்.

யாரேனும் சுவைத்துச் சாப்பிடும் ஐட்டத்தை உபசரிக்க,

'Would you like a second helping?" என்று கேட்கலாம்.

கூச்சத்துடன், குறைவாக சாப்பிடும் நபரிடம்,

"You seem to be a poor eater, why so?" என்று அன்போடு உங்கள் அக்கறையைக் காட்டலாம்.

விருந்து முடிந்து சிறிது நேரம் உரையாடிய பின் விடை பெறுபவர்களிடம்,

"Thank you for coming" என்றோ,

"Glad that you have made it" என்றோ கூறலாம்.

**நீங்கள் விருந்தாளியானால் (guest) :**

உங்களை நண்பர் வரவேற்கும் போது,

"I am very glad to be here."

"It was kind of you to have invited me."

"I was eagerly waiting for this day."

"I was awaiting this opportunity of being with you." என்று ஏதாவது ஒன்றைக் கூறலாம்.

அமரச் சொன்னவுடன், அவரோடு தொண தொணக்காமல் மற்றவர்களைக் கவனிக்கும்படி நாமே கூற வேண்டும்.

"Thank you, please, take care of others, I'll make myself comfortable."

விருந்துக்கு முன் ஏதாவது அருந்துகிறீர்களா என்றால், Why not! I'd like to have something cold/hot.

No, I'll straightly go for dinner/have my dinner என்று கூறலாம்.

ஆரஞ்சு ஜூஸ் சாப்பிடுகிறீர்களா என்று கேட்டால்,

"That would be most welcome." Oh! I'd love that!" என்று சொல்லுங்கள்.

சாப்பிடும் போது கருமமே கண்ணாயினார் என்று இருக்காமல் குறிப்பிட்ட உணவு வகை நன்றாக இருக்கிறதே, எப்படிச் செய்தீர்கள்? என்று கேட்டு அவரைக் குளிரச் செய்யுங்கள்.

Oh! this pulav is very tasty. Have you added some special ingredient? என்று வினவுங்கள்.

புதிய ஐட்டமாக இருந்தால், அதைப் பாராட்டி, செய்முறையை,

This dish is very delicious! Can I have the recipe? என்றோ,

Hats off to you! How did you make it so tasty? என்றோ கேட்கலாம்.

விடை பெறும் போது,

'Thank you for the excellent food."

"We had a very nice evening."

"Thank you so much."

"What an evening! memorable one! thank you so much."

"We enjoyed your hospitality and the evening had been very pleasant. Thank you so much." என்று கூறலாம்.

நெருங்கிய நண்பர்களாக இருந்தால்,

"Thank you so much for the delicious and sumptious dinner. I wish I had brought my kids to enjoy it." என்று கூறலாம்.

குறை கூறுவதற்கு ஆங்கிலத்தில் என்ன சொல்லவேண்டும் என்று தேடாதீர்கள். விருந்தில் குற்றம், குறை இருந்தால் கூட கூறுவது நாகரீகமல்ல.

நானும் முதல்வரிடம் விடைபெற்று வெளியே வந்தபோது நிமிர்ந்து நிற்கும் விவேகானந்தரின் உருவம் கண்ணில் பட்டது. அதன் அருகிலேயே நிமிர்ந்து நிற்கும் கல்வி நிலையம். தோற்றத்தில் மட்டுமல்ல, சாதனையிலும்தான்.

**— லக்ஷ்மி சங்கர்**

---

**"வெங்காயத்தைக் கண்ணீர் வராமல் உரிப்பது எப்படி?" என்று யோசனைகள் சொல்லப்படுகின்றன. வெங்காயம் வரவழைக்கும் கண்ணீரின் மகத்துவத்தைப் பற்றிச் சொல்லும்போது, அந்த நெடி கண்ணின் பார்வைக்கு மிகச் சிறந்தது என்று ஒரு சித்த வைத்திய நூல் கூறுகிறது. எனவே, வெங்காயம் உரிக்கும்போது கண்ணீர் வந்தால் நல்லதுதான். தப்பில்லை.**

**- வி. பாலாஜி**





ஐசிஎஸ் P. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

# ஐசிஎஸ்

(நிதி நிறுவனம்)

221, சத்தியமூர்த்தி சாலை, ராம் நகர்
கோயமுத்தூர் - 641 009.




54 ஆண்டுகளுக்கு
மேலான அரிய சேவை

குறுகிய கால டெபாசிட் திட்டம்

| காலம் | ஒரு நாள் முதல் 12 மாதங்கள் வரை |
|---|---|
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | **15%** |

டெபாசிட் தொகையை எப்போது வேண்டுமானாலும் உரிய வட்டியுடன் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம்.

## சுபிட்சம் வைப்புத் திட்டம்

**ரூ. 10,000/- செலுத்தினால் 45 மாதங்களில்**

**ரூ. 21,000/- கிடைக்கிறது.**

## பிக்சட் டெபாசிட் திட்டம்

| காலம் | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் |
|---|---|---|---|---|---|
| ஆண்டுக்கு ஒரு முறை வட்டி | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| மாதம் ஒரு முறை அல்லது 3 மாதத்திற்கு ஒரு முறை வட்டி | 16% | 16.5% | 17% | 17.5% | 18% |

கார்கள், இதர இலகுவான வாகனங்கள் (Light Vehicles), கோவை மாநகராட்சி எல்லைக்குட்பட்ட அசையா சொத்துக்கள், ஷேர் சர்டிபிகேட்கள், இந்திர விகாஸ் பத்திரங்கள், தங்க நகைகள் ஆகியவற்றின் பேரில் கடன் பெற நேரில் அணுகவும்.

## மூன்று தலைமுறை வாடிக்கையாளர்களின் முழு நம்பிக்கையைப் பெற்றது!

# அபிராமி ஒரிஜினல் சிதம்பரம் கவரிங் நகைகள்

No. 158. ¼ G. Rs. 280

No. 130. ¼ G. Rs. 280 -

No. 136. ¼ G. Rs. 280 -

No. 122. ¼ G. Rs. 260 -

No. 121. ¼ G. Rs. 260/-

No. 99. ¼ G. Rs. 560/-

No. 108. ¼ G. Rs. 280/-

No. 143. Rs. 75 -

No. 138. Rs. 180 -

No. 154. Rs. 75 -

Rs. 100/- No. 169

Rs. 100/- No. 168

No. 153. Rs. 75/-

¼ கிராம், 1 கிராம், 2 கிராம் செயின், வளையல், நெக்லஸ் ரகங்கள் உபயோகித்த பின்பும், "திரும்ப பணம் பெறும்" நிபந்தனையுடன், கீழ்க்கண்ட எங்கள் இரண்டே ஷோரும்களில் மட்டுமே கிடைக்கும்.

* இலவச கேட்லாக்கிற்கு விண்ணப்பிக்கவும் * நகையை V.P.P.ல் பெறலாம்.

## அபிராமி

8 & 34, ரெங்கநாதன் தெரு
தி.நகர், போன் : 4347806
மாம்பலம் ரயில்நிலையம் அருகில்

* "அபிராமி சிதம்பரம் நகை கடைதானா" என்பதை கவனித்து வாங்குங்கள்! * கிளைகள் கிடையாது!

---

| பதமாக பாலைக் காய்ச்சிட | மிருதுவான இட்லிக்கு | சுத்தமான, சுகாதாரமான குடிநீருக்கு |
|---|---|---|







இணையற்ற எமது மற்ற தயாரிப்புகள்
- * தோசை திருப்பி * குழிக்கரண்டி
- * சாஸ்பான் * அன்னவெட்டி
- * சட்டுவம்



அனைத்து முன்னணி பாத்திர விற்பனையாளர்களிடம் கிடைக்கும்

## முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

21, பொன்னப்ப செட்டி தெரு, சென்னை-3. போன்: 582182

## வாஷிங் மெஷின்:

**சில பெண்கள் காலையில் வாஷிங் மெஷினில் துணி துவைத்த பின்னர் மறுநாள் துவைக்க வேண்டிய துணிகளை மெஷினிலேயே ஊறப்போட்டு விடுகின்றனர். மறுநாள் காலையில் அந்தத் துணிகளைத் துவைத்ததும் அடுத்த நாள் துவைக்க வேண்டிய துணிகளை ஊறப் போட்டு விடுகிறார்கள். ஆக, எப்போதும் வாஷிங் மெஷினில் தண்ணீர் இருந்து கொண்டே இருக்கிறது. இது சரியா?"**

முதன் முதலாக 1974 இல் தமிழ்நாட்டுக்கு வாஷிங் மெஷினை அறிமுகப்படுத்திய 'வாஷோ டெக்ஸ்' (WASHO TEX) உரிமையாளர் ஜனகராஜன் "ஓரளவு சரி" என்றே ஒப்புக் கொள்கிறார். "மிகத் தரமான கம்பெனியின் வாஷிங் மெஷின் என்றால் பாடி அலுமினியத்தால் செய்யப்படுவது என்றால் கவலையே இல்லாமல் ஊற வைத்துப் பயன் படுத்தலாம். இரும்புத் தகட்டினால் செய்யப்பட்ட வாஷிங் மெஷின் என்றால் கட்டாயம் 'துரு' பிடிக்கும். பெயின்ட் போனதும் வாங்கிய ஒன்றரை வருடங்களுக்குள்ளாகவே மாற்ற வேண்டி வரும். பொதுவாகவே வாஷிங் மெஷினில் ஈரம் பட்டுக் கொண்டே இருக்கும். பொருளின் பாதுகாப்பு நாம் பயன் படுத்தும் விதத்தில் அமையும்."

# இது சரியா?



• மோகன்

• நம்பி •



## ஃப்ரிட்ஜ் :

**"சில பெண்மணிகள் ஃப்ரிட்ஜில் ஐஸ் சேரக் கூடாது என்பதற்காகக் காலையில் எழுந்ததும் ஆன் செய்துவிட்டு இரவு படுக்கப் போகும் போது ஆஃப் செய்துவிடுகிறார்கள். இதனால் ஐஸூம் சேராது. கரண்ட் செலவும் ஆகாது. பகல் முழுவதும் இயக்கத்தில் இருந்தபடியால் அந்தக் குளிர்ச்சியிலேயே உள்ளே வைக்கப்பட்டிருக்கும் உணவுப் பொருளும் பாதுகாக்கப் பட்டு வீணாகாது என்று கூறுகின்றனர். இது சரியான முறையா?"**

"மிக மிகத் தவறான முறை மட்டுமல்ல. தேவையற்ற செயலும் கூட" என்கிறார் பல வருடங்களாக ஃபிரிட்ஜ் சர்வீஸ் செய்வதில் அனுபவத்தோடு தொழில் நுட்பம் நன்கு அறிந்த வெஸ்ட் அண்ணாநகர் விரிவாக்கம் திருமங்கலத்தைச் சேர்ந்த ஃப்ரீஸ் கண்ட்ரோல் நிறுவனத்தின் உரிமையாளர் நம்பி.

"ஏன் எனில் பொதுவாகவே எல்லாக் குளிர் சாதனப் பெட்டிகளிலும் வெப்ப சீர்நிலைக் கருவி (தெர்மோஸ்டாட்) அமைப்பு ஒன்று உள்ளது. அது குளிர்சாதனப் பெட்டியைத் தேவையான அளவுக்கு மேல் குளிர்ச்சி அடையும் போது தானாகவே மின் சாரத்தைத் துண்டித்துவிடும். மறுபடியும் பதினைந்து அல்லது 20 நிமிடங்கள் கழித்து தானாகவே மின் தொடர்பைப் பெற்றுக் கொள்ளும். அப்படிச் செய்யாமல் தொடர்ந்து குளிர்சாதனப் பெட்டிக்கு மின்னாற்றல் செலுத்திக் குளிர்ச்சி ஊட்டிக் கொண்டே இருந்தால் அந்தப் பெட்டியில் உள்ள 'கேஸ் அழுத்தக் கருவி' (கம்ப்ரஸர்) தன் ஆயுள் காலத்துக்கு முன்பே செயலிழந்துவிடும். அதன் பிறகு பெட்டி குளிர்ச்சி அடையாது. அதனால் அப்படி கம்ப்ரசர் செயலிழந்து போகாமல் இருக்கவே 'தெர்மோஸ்டாட்' அமைப்பு அடிக்கடி மின்துண்டிப்பை ஏற்படுத்தி கம்ப்ரஸருக்கு ஓய்வு அளிக்கிறது. இப்படி மின் துண்டிப்பு ஏற்படும் காலங்களில் செலவழியாமல் இருக்கும் மின் ஆற்றலே நாம் சேமித்ததாகக் கொள்ள

லாம். மனித உடல் எப்படி எப்பொழுதும் ஒரு குறிப்பிட்ட வெப்பத்தைக் குறையாமல் வைத் திருக்கிறதோ அப்படியே குளிர்சாதனப் பெட்டியும் ஒரு குறிப்பிட்ட அளவு குளிர்ச் சியை சமச்சீர் நிலையில் வைக்கிறது. இயற் கையாகவும் இயல்பாகவும் உள்ள இவற்றைச் செயற்கையாக மாற்றினால் உடலுக்குக் கேடு விளைவதுபோல் குளிர்சாதனப் பெட்டிக் கும் கேடு உண்டாகும்."

**"வீட்டில் உள்ள அனைவரும் சீக்கிரம் குளித்து ஆபீசுக்கும் பள்ளிக்கும் தயாராவ தற்காகச் சில பெண்மணிகள் கெய்சரை ஐந்து மணி நேரங்களுக்கு முன்னதாக ஆன் செய்து வைத்து விடுகின்றனர். இது சரியா?"**

"குளிப்பதற்குச் சரியாக பதினைந்து நிமிடங்களுக்கு முன்னதாக ஆன் செய்வதே சரியான முறை" என்று கெய்சர் உற்பத்தி செய்யும் 'டெலி விஜய்' நிறுவனத்தின் கிளை மேலாளர் எம். எஸ். மோகன் விளக்கம் தருகிறார்.

போலார் ஹைபவர் லோ-வோல்டேஜ் கிரைண்டர் மோட்டாரிலுள்ள பால்பேரிங் கண்டென்சர் மற்றும் வைண்டிங்கிற்கும் மூன்று வருட உத்திரவாதம் அளிக்கப்படு கிறது.

"15 லிட்டர், 25 லிட்டர், 35 லிட்டர் என்ற அளவுகளில் கெய்சர் வருகிறது. உள்ளே இருக்கும் தண்ணீரை நீங்கள் எவ்வளவுதான் அதிக சூடாக்க முயன்றாலும் 65 டிகிரியி லிருந்து 70 டிகிரி வரை மட்டுமே உஷ்ணம் உண்டாகும். அதிகபட்ச சூடான 70 டிகி ரிக்கு வந்ததும் ஆட்டோமாடிக்காக ஆஃப் ஆகிவிடும். மறுபடியும் சூடு குறைந்ததும் பழையபடி தானாக ஆன் ஆகி உச்சக்கட்ட உஷ்ணம் உண்டாகும். வீணாக ஐந்து மணி நேரங்களுக்கு முன்னதாக ஆன் பண்ணுவ தால் முதலாவது மின்சாரச் செலவு அதிகம் ஏற்படும். கெய்சரினுள் இருக்கும் தெர்மோ ஸ்டாட் விரைவில் பழுதாகிவிடும். கெய்ச ரும் தொடர்ந்து வேலை செய்வதால் ஃபெயி லியராகி மூலையில் முடங்கிக் கிடக்கும் பொருளாகிவிடும். எந்த மின்சாரப் பொருள் என்றாலும் தேவையறிந்து மிகச் சரியாகப் பயன்படுத்துவதே சிறந்த முறை.

**"சாதாரணமாக உளுந்து வடை (மெது வடை) செய்வது பற்றிப் பல முறை குறிப்புகள் பிரசுரிக்கிறார்கள். ஆனால் எப்படிச் செய்தா லும் வடை கண்டிப்பாய் எண்ணெய்குடிக்கிறது. இந்தக் குறையைப் போக்க என்ன செய்ய வேண்டும்?"**

**- மதுமதி, மதுரை.**

சமையல் அனுபவமிக்க ஒரு சமையல் காரர் சொல்கிறார் : "மெதுவடை என்றாலே மற்றவைகளை விடக் கொஞ்சம் கூடுதலாகத் தான் எண்ணெய்குடிக்கும். குறைவாக எண் ணெய் செலவாக்குவதற்கு உளுந்தை அதிக நேரம் ஊற வைக்கக் கூடாது. பதினைந்து அல்லது 20 நிமிடம் ஊறியவுடன் உளுந்தை நீரிலிருந்து பிரித்து வடித்துவிட வேண்டும். முற்றிலுமாக வடிந்தபின் ஆட்டுரலிலோ அல்லது கிரைண்டரிலோ கொட்டி (மிக்ஸி கூடாது) ஆட்டவேண்டும். கூடவே தேவை யான அளவில் உப்பு சேர்க்க வேண்டும். உளுந்து அரைபடும்வரை கையால் ஆட்டுர லுக்கு ஒதுக்கிக் கொண்டிருக்க வேண்டும். எல்லாப் பருப்பும் அரைபட்டு மாவானதும் நீரில் கையைத் தொட்டு (ஊற்றக் கூடாது) மாவை அரைபடச் செய்ய வேண்டும். தொடர்ந்து செய்து கொண்டிருக்கக் கல்லாக இருந்த மாவு பொசபொசவென்று பஞ்சு போல லேசாகி கிரைண்டரில் அதிகமாக ஆரம்பிக்கும். ஈரக்கையால் உருண்டையை எடுத்து உருட்டினால் தளதளவென பந்து போல் உருளும். ஊதினால் பஞ்சு போல் பறக்க வேண்டும். இதுவே உச்ச நிலை. பின் மாவை எடுத்து இஞ்சி, பச்சை மிளகாய், வெங்காயம், பெருங்காயம், கறிவேப்பிலை, கொத்துமல்லி (விரும்பினால் மிளகு, தேங் காய்ப் பல்) இவற்றை அரிந்து சேர்த்து வாழை இலையில் எண்ணெய் தடவி உளுந்து மாவை இட்டு ஆள்காட்டி விரலால் ஓட்டை போட்டு எண்ணெயில் பொரித்து எடுக்கலாம். இந்த முறைக்கு எண்ணெய் மிக வும் குறைவாகவே செலவாகும்."

தொகுப்பு : **மலர்விழி**



**பாண்ட்ஸ் மற்றும் சில பவுடர் டப்பாக்களில் மேல்பக்கம் துளைகள் உள்ளன. இந்த டப்பாக்களில் பலவற்றை நாம் தூக்கி எறிந்துவிட்டாலும் சிலவற்றைப் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டால் ஊதுவத்தியைக் கொளுத்த உதவும். பூஜை நேரத் தின்போது வாழைப்பழத்தைத் தேடவும் வேண்டாம்.**

**- லஷ்மி சிவகுமார்**



# புகழ்பெற்ற ஜோதிஷர், மந்திர சாஸ்திர நிபுணர் பண்டித காழியூர் ம.பத்மனபன்



காழியூர்
ம. பத்மனாபன்

ஸத்யமேவ ஜயதே

பிரபல ஜோதிஷர் (பண்டித காழியூர் ம. பத்மனாபன்) காழியூர் ஸ்ரீனிவாசாச்சாரியாரின் மூத்த புதல்வரும், அவரால் ஜோதிஷ மந்திர சாஸ்திரங்களில் 45 வருட காலம் நன்கு தேர்ச்சியும், ஆசீர்வாதமும் பெற்றவரால் கீழ்க்கண்ட மகத்தான சக்தி வாய்ந்த யந்திரங்கள் சக்கரங்கள் தயாரிக்கப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| மஹாசுதர்சன யந்திரம் | (வெள்ளியில்) | ரூ. 200/- |
| ஹனுமத் கவசம் | " | ரூ. 200/- |
| ஸரஸ்வதி கவசம் | " | ரூ. 200/- |
| மஹாலக்ஷ்மி கவசம் | " | ரூ. 200/- |
| தனாகர்ஷண யந்திரம் | " | ரூ. 400/- |
| லக்ஷ்மிநரஸிம்ம கவசம் | " | ரூ. 300/- |
| மஹாலக்ஷ்மி சக்ரம் | " | ரூ. 500/- |
| மஹாசுதர்சன சக்ரம் | " | ரூ. 500/- |

இவை தவிர இன்னும் அநேகவிதமான யந்திரங்களும் கவசங்களும் விசேஷ பூஜா க்ரமப்படிக்கு தயாரித்து அனுப்பப்படும்.
வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்புத் தொகையையும்,D.D (Bank Draft) மூலம் அனுப்ப வேண்டும். தபால் செலவு தனி ரூ.50/-
கேட்லாக்கும் அனுப்பப்படும்.

மற்றும் சர்வாரிஷ்ட நிவாரிணி விபூதி ரூ.30.00; க்ஷேம ஸம்ரக்ஷணி குங்குமம் ரூ.30.00; விஜய தனாகர்ஷணி மூலிகை ரூ.25.00; வசீகரண அஞ்சனம் ரூ.25.00; சதாமூலிகா தூபம் ரூ.35.00.



எனது தந்தையார் அடியேனுக்கு மந்திரோபதேசம் செய்யும் காட்சி.

| | |
|---|---|
| கம்ப்யூட்டர் ஜாதகம் தமிழில் ... | ரூ.40.00 |
| கம்ப்யூட்டர் ஜாதகம் ஆங்கிலத்தில் ... | ரூ.40.00 |
| ஆயுள் பலனுடன் ... | ரூ.200/- |
| (ஜனன வருஷம், மாதம், தேதி, நேரம், ஊர் தேவை) | |
| ஜாதகத்தின் பொதுபலன்களை நேரில் சொல்வதற்கு ... | ரூ.50.00 |
| முகூர்த்தம் அல்லது விவாஹப் பொருத்தம் ... | ரூ.50.00 |
| விவரித்து எழுத | |
| ஆரூடம் 3 கேள்விகளுக்கு ... | ரூ.25.00 |

## முக்கிய கவனிப்பு :

தபால் மூலம் வரும் எல்லா கடிதங்களும் வெகு கண்டிப்பாக பரம ரகசியமாக வைக்கப்படுகின்றன. எனவே எவரும் எம்மாதிரியான ஆந்திரிக ரகசிய விஷயங்களைப் பற்றியும் பயமின்றி எழுதலாம். மற்றும் இதர விஷயங்களுக்கு மேற்கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

வீட்டில் கிரக தோஷம், திருஷ்டி தோஷம், சல்லியம், வாஸ்து தோஷம், சங்கா தோஷம் மற்றும் எந்த விதமான தோஷங்களும் பாதியாமல் இருப்பதற்கு சுதர்சன ஹோமம், மஹா சுதர்ஸன சக்கரம், பிரதிஷ்டை செய்து தரப்படும். உள்ளூர் வாசிகளுக்கு மட்டும் செய்யப்படும். விவரம் வேண்டுவோர் நேரிலோ, தபால் மூலமாகவோ தொடர்பு கொள்ளலாம். சுபமஸ்து!
நேரில் : காலை 8 மணி முதல் 12 மணி வரை மட்டும்

வேண்டுவோர் கடிதத் தொடர்பு கொண்டு விபரம் அறிந்து பணம் அனுப்பி சகல நன்மைகளும் அடைவீர்களாக.

பிரபல ஜோதிஷர்
பண்டித காழியூர்
ம. பத்மனாபன்
"தபோநிதி"
நெ : 5, வித்யோதயா
முதல் மெயின் தெரு,
தபால் பெட்டி
எண் : 1411,
தி. நகர்,
மதறாஸ் - 600 017,
தென் இந்தியா
Phone : 8263814

கிளைகள் கிடையாது

